உ

ஓம்பரப்ரம்மணே நம:

விருத்தாசலம்,

ஸ்ரீ குமாரதேவசுவாமிகளாதீனம்

முத்தையசுவாமிகளியற்றிய

# சின்மய தீபிகை.

---

இதற்கு முன் சுவாமிகள் அநுமதிகொண்டு திருவருட்
பிரகாசவள்ளலார் என வழங்கும் சிதம்பரம்-
இராமலிங்கபிள்ளை அவர்களால் பரிசோ
திக்கப்பதிப்பித்த மூலபாடத்திற்கிணங்க
காஞ்சீபுரம் - இராமாநந்தயோகி
களைக்கொண்டு உரை
எழுதுவித்து.

---

கோ. சின்னகிருஷ்ண பிரம்மம் அவர்
திரு. சம்பந்தமுதலியார் அவர்கள்
திரு. அப்பாதுரை முதலியார் அவர்களாலும்

சென்னை

பிரம்ம ரூபா அசைலம் பிரஸில்

பதிப்பிக்கப்பட்டது

---

1907.

# முகவுரை.

இஃது சின்மய தீபிகை யென்னும் ஒரு சிறுநூலே யாயினும், மெய்ஞ்ஞானத்தை நன்குவிளக்குவதாயுள்ளதால் யாவருமதி முக்கியமாய்க் கொள்ளத்தக்க சிறப்பினையுடையதாயிருக்கிறது. அநந்தஞானம் பாவற்றினும் பெரிதாகலின், அவ் விஷயநாட்ட முடையோர் நூலின் சிறுமைநோக்காரென்பது நிச்சயம். நல்லறிவுச்சுடர் கொளுத்துங் காரணம்பற்றியே, இந்நூலுக்குச் சின்மய தீபிகை யென்னும் பெயர் நாட்டப்பட்டது. சித்-என்பது ஞானம், மயம்-நிறைவு, தீபிகை விளக்குவது; எனவே நிறைவான ஞானத்தை விளக்கும் நூல் என்னும் பொருள்பட நின்றது. ஞானம் என்பது நித்தியப் பொருளின்னதென்றும், அநித்தியப் பொருளின்னதென்றும் பகுத்தறியும் உணர்வு. இதை நித்தியாநித்ய வஸ்து விவேகமென்று சாஸ்திரங்கள் கூறாநிற்கும். முதல் அநித்தியப் பொருளினிலக்கணம் அறியாதோன் வழி, நித்தியப்பொருளினிடத்தில் நிச்சயபுத்தி யுண்டாகாது. உண்டாகாதபோது பொய்யையே மெய்யெனக்கருதி மயங்கி மீளாத சனன மரணத்துக் காரண மூழ்கவேண்டும். ஆகையால் புத்திரமித்திரகளத்திர பிரபந்துக்களும் இப் பிரபஞ்ச மாயாவாழ்க்கையும் பொய்யென்று விசாரணைமுகத்தால் வெறுத்து, இவ் சிருஷ்டி திதிசங்காராதி கிருத்தியங்களுக்குக் காரணமாயுள்ள பரம்பொருளை நித்தியமென்றும் [illegible]

டையவேண்டிய மார்க்க மின்னதென்றுங் கடைட்
த்து உய்யுநெறி தேடவேண்டியது நம்மெல்லோ
கு மின்றியமையாக் கடமையா யிருக்கிறது. இச்சி
ால் அத்தகைய ஞானச்சுடரை நம்முளத்திலேற்றத
க்கு கருவியாயுள்ளதால, முன்னோராலியற்றப்பட்டிரு
த இச்சிறு நூலுக்கு ஒருவாறு உரை யெழுதுவித்து,
ஔவைப் பிராட்டியார் - திருவள்ளுவதேவர் - பட்டி
னத்தடிகள் - தாயுமானர் - திருமூலதேவர் - குமர
குருபரசுவாமிகள் - சிவப்பிரகாச சுவாமிகள் - அருண
ிரிநாதர் - கண்ணுடைய வள்ளலார் - சமயாசாரியர்
ந்தானகுரவர் முதலிய ஆன்றோர்களால் திருவாய்
லர்ந்தருளிய அநுபவச்செய்யுள்களை உதாரணங்காட்டி
அச்சிற்பதித்து வெளியிட்டனம். இதிலுள்ள குற்றங்
ள் நோக்காது குணத்தையே பொருளாகக்கொண்டு
ரர்கள் மகிழ்வார்களென்று நயபுகின்றனம்.

இப்படிக்கு,

☞ கோரட்டூர்-சின்னகிருஷ்ண பிரம்மம்,

☞ திரு. அப்பாதுரை முதலியார்.



ஓம்:

பரப்ரஹ்மணேநமஃ

# சின்மய தீபிகை.

மூலமும் - உரையும்.

## பாயிரம்.

### குரு வணக்கம்.

விருத்தம்.

அகர வுயிராய்ச் சுடரொளியா
    யகண்ட விரிவாய்த் துரியநடுச்
சிகர மணியா மவுனநிலைத்
    தேசோ மயமென் பதைப்போற்றிப்
புகரி னுளத்தி னிருளகற்றப்
    பொலிந்து வளர்சின் மயதீபம்
பகர வருளும் பரமகுரு
    பதும மலர்மென் பதங்காப்பாம்.

(இதன்பொருள்.) அகர வுயிராய் - அகர வுயிரெழுத்தாகியும், சுடர் ஒளியாய் - ஒளிர்கின்றவொளியாகியும், அகண்ட விரிவாய் - கண்டிக்கப்படாத விஸ்தீர்ணமாகியும், துரிய நடு சிகரமணியாய் - துரியபதத்தி னிடையிலுள்ள சிகரமணியாயுமிராநின்ற, மவுனநிலை - மோனநிலையா லறியப் படுகிற, தேசோமயம் என்பதை - தே[illegible] சொல்லப்

வதாகிய பிரமப்பொருளை, போற்றி - வழிபட்டு, புக உளத்தின் - குற்றமுடைய மனத்தின் கண்ணுள்ள, இரு இருட்டை, அகற்ற - ஒழிக்க, பொலிந்துவளர் - பொ டைந்து வளராநின்ற, சின்மயதீபம் - சின்மயதீபம் என்னு இந்நூலை, பகர - சொல்வதற்கு, அருளும் - அருள் செய்பவ ராகிய, பரமகுரு - பரமாசாரியருடைய, பதுமமலர்-தாமரை மலர்போன்ற, மெல் - மென்மையாகிய, பதம் - திருவடிகள் காப்பதும் - எனக்குக் காவலாகும். எ-று.

(பொழிப்புரை) அகரவுயி ரெழுத்தாகியும், ஒளிர்கின் வொளியாகியும், கண்டிக்கப்படாத விஸ்தீர்ணமாகியும், து. யபதத்தினிடையிலுள்ள சிகாமணியாகியு ராநின்ற மோன லையா லறியப்படுகிற தேஜோமய மென்று சொல்லப்படுவத கிய பிரமப்பொருளை வழிபட்டு, குற்றமுடைய மனத்தி கண்ணுள்ள இருட்டையொழிக்கப் பொலிவடைந்து வளரா நின்ற சின்மயதீபம் என்னும் இந்நூலைச சொல்வதற்கு அருள் செய்பவராகிய பரமாசாரியருடைய தாமரை மலர்போன்ற மென்மையாகிய திருவடிகள் எனக்குக்காவலாகும். எ-று.

(விசேடவுரை.)யாதொரு நூல் செய்யத் தொடங்குவோ ரும் நூல்முகத்தில் கடவுள் வணக்கம்கூறுவது சிஷ்டாசாரமா தலால்இந்நூலாசிரியரும் 'அகரவுயிராய்'என்னும் முதற்குறிப் பையுடையஇசெய்யுள் கூறினர். இவவாறு கடவுள்வணக்கம் கூறுதல் யாதுக்கெனின், எடுத்துக்கொண்ட நூல் இடையூ றின்றி இனிது முடிதற்கென்க. சின்மயதீபிகை யென்ப ற்கு ஞானவடிவாகிய தீபம் என்பது பொருள். உலகத்து பிறதீபங்கள்போல ஒளி பெருகாமலும் சுருங்காமலும் என்று ஒரு தன்மைத்தாயிருந்து இம்மை மறுமை வீடு என்னும் மு றப்பொருள்களி னிலக்கணத்தைச் செவ்வனே விளக்கி காட்டுதலால் இந்நூலுக்குச் சின்மயதீபிகையென்னும் பெயர் புனையப்பட்டது. "அறவோர்க் கடிகளே தெய்வம்" என மேலோர் கூறியபடியே இவர்க்குச சற்குருவே தெய்வமெ

ம் அத்தியவசாயமுண்டா யிருத்தலால், பிற கடவுளைத் யாமல் சற்குருவாகிய கடவுளையே துதித்தனர். இதற்கு அருளிறை வணக்கம் என்று பெயர். அருளிறை யெனினும் குருவெனினு மொக்கும், "அகர முதல வெழுத்தெல்லா மாதி பகவன் முதற்றேயுலகு" "அகரவுயிர்போலறிவாகி யெங்கும் - நிகரிலிறை நிற்கு நிறைந்து" என்றற் றொடக்கத்து மேலோர் செய்யுட்களை அடியொற்றி, இவரும் 'அகர வுயிராய்' எனத் தொடங்கினர். குரு என்பதற்கு ஜீவப்பிரம்ம அபேதத்தைபோதிப்பவர் என்பது பொருள். கண்டம்- கண்டிக்கப்படுவது, அகண்டம் - கண்டிக்கப்படாதது, புகர்- குற்றம், உளத்தின் இருள் - அஞ்ஞானம். (க)

இது குருவருள் பெற்று வாழ்வோராகிய

பெரியோர் வணக்கம்.

சீரார் மவுனந் திகழ்சுடராய்த்
திகழு மொளியாய்ச் சின்மயமாய்ப்
பாரா ருயிரின பரமநிலை
பதிந்தா நந்த முற்றுநிதம்
பேரா தருளுங் குருதிருத்தாள்
பெற்றே மயக்கப் பிணககறுத்து
வாரா வின்பக கடல்படிந்து
வாழ்வோ ரிணைத்தாள் வாழ்த்துவனே.

(இ-ள்.) சீர்ஆர் - சிறப்புப்பொருந்திய, மவுனம் - மௌன நிலையில், திகழ் - விளங்குகின்ற, சுடர்ஆய் - ஒளியாகியும், திகழும் ஒளியாய் - பிரகாசிக்கிறதேஜசு ஆகியும், சின்மயமாய்- ஞானவடிவாகியும், பார்ஆர் - உலகில் நிறைந்திருக்கிற, உயிரின் - உயிர்களின், பரமநிலை - மேலான நிலையில், பதிந்து - பொருந்தி, ஆநந்தம் உற்று - இன்பத்தை யடைந்து, நிதம்

நாள்தோறும், போாது - நிலைபெயராமல், அருளும் - அருள் செய்கிற, குரு - சதாசாரியருடைய, திருத்தாள் - திருவடிகளை, பெற்று - அடைந்து, மயக்கம் - பிரபஞ்ச மயக்கமாகிய, பிணக்கு அறுத்து - குற்றத்தைச சேதித்து, வாரா - கிடைத்தற்கரிய, இன்பக்கடல் - ஆநந்தசாகரத்தை, பருகி - உண்டு, வாழ்வோர் - வாழ்பவராகிய ஞானியருடைய, இணைதாள் - இரண்டு திருவடிகளையும், வாழ்த்துவன் - யான் துதியாநின்றேன். எ-று.

(பொ-ரை.) சிறப்புப் பொருந்திய மௌனநிலையில் விளங்குகிற வொளியாகியும், பிரகாசிக்கிற தேஜசாகியும், ஞானவடிவாகியும், உலகில் நிறைந்திருக்கிற வுயிர்களின் மேலான நிலையிற்பொருந்தி, இன்பத்தையடைந்து நாள்தோறும்நிலைபெயராமல் அருள்செய்கிற சதாசாரியருடைய திருவடிகளையடைந்து, பிரபஞ்சமயக்கமாகிய குற்றத்தைசசேதித்து, கிடைத்தற்கரிய ஆநந்தசாகரத்தையுண்டு வாழ்பவராகிய ஞானியருடைய இரண்டு திருவடிகளையும் யான் துதியாநின்றேன். எ-று.

(வி-ரை.) மோனமென்பது ஞானவரம்பு, ஆதலால், சீரார்மவுனந் திகழ்சுடராய், என்றார். வாராவின்பக் கடல், என்பதற்கு, தன்னிடத்து மூழ்கினவர் மீட்டும்பிறவிக்கு வராமைக்கேதுவாகிய ஆநந்தசாகரம் என்றுரைப்பினும் பொருந்தும். மௌனநிலை ஞானவெல்லையாதலால் சீரார்மவுனம் என்றார். பாராருயிர்-உலகிலுள்ள சராசரஜீவராசிகள், சரம்-சஞ்சரிக்கும்பொருள். அசரம் - சஞ்சரியாத பொருள். இவற்றை முறையே இயங்கியற் பொருள் நிலையியற்பொருள் என்றும், சங்கமம் தாவரம் என்றும் கூறுவர். பரமம் - மேன்மை. இறைவனது ஒளிப்பெருக்குத் தம்மனத்தைக் கவர்ந்து கொள்ளுதலால் சுடராய் என்றதமையாது திகழுமொளியாய் என்றுங் கூறினர். "சோதியேசுடரே சூழொளிவிளக்கே" என் மணிவாசகரும் அருளிச்செய்திருத்தல் காண்க. (௧)

பொருவேல் விழியொண் பொன்றிதலை
பொலிந்த குரும்பை முலைமங்கைப்
பருவ மிசைந்த மடமயிலைப்
பரிவா யணையும் பருமயக்கிற்
றிரியும் விடர்கொக் கோகவிதந்
தேடி யுணர்வா ரெனப்பரம
குருவின் மலர்த்தாள் வேண்டுபவர்
கொள்வா ரிந்நூற் குறிப்பறிந்தே.

(இ-ள்.) பொரு - போர்செய்கிற, வேல் - வேற்படை போன்ற, விழி - கண்களையும், ஒள் - ஒட்பமாகிய, பொன் - பொன்போன்ற, திதலைபொலிந்த - தேமல் படர்ந்து விளங்குகிற, குரும்பை - தென்னங் குரும்பையை நிகர்த்த, முலை - ஸ்தனங்களையுமுடைய, மங்கைப்பருவம் இசைந்த - மங்கைப் பருவம் பொருந்திய, மடமயிலை - இளமையையுடைய மயிலின் சாயலோடு கூடிய ஒருமாதை, பரிவு ஆய் அணையும் - ஆசையோடு தழுவ வேண்டுமென்கிற, பருமயக்கின் - பெரிய மோகத்தினால், திரியும் - திரியாநின்ற, விடர் - காமுகர், கொக்கோக விதம் தேடி - கொக்கோக நூலிற் சொல்லப்படுகிற கரண வகைகளைத்தேடி, உணர்வது என - அறிவதுபோல, பரமகுருவின் - மேலான சுதாசாரியருடைய, மலர்தாள் - தாமரை மலர்போன்ற திருவடிகளை, வேண்டுபவர் - அடைய விரும்புவோர், இந்நூல்குறிப்பு அறிந்து கொள்வார் - இந்த நூலின் கருத்தை ஆராய்ந்தறிந்து இதனை யேற்றுக்கொள்வார்கள். எ-று.

(பொ-ரை.) போர்செய்கிற வேற்படைபோன்ற கண்களையும், ஒட்பமாகிய பொன்போன்ற தேமல்படர்ந்து விளங்குகிற தென்னங் குரும்பையை நிகர்த்தஸ்தனங்களையுமுடைய மங்கைப் பருவம் பொருந்திய இளமையையுடைய மயிலின் சாயலோடு கூடியவொரு மாதை ஆசையோடு தழுவ வேண்டு

மென்கிற பெரியமோகத்தினால் திரியாநின்ற காமுகர் கொக்கோக நூலிற் சொல்லப்படுகிற கரணவகைகளைத்தேடி யறிவதுபோல, மேலான சதாசாரியருடைய தாமரை மலர்போன்ற திருவடிகளையடையவிரும்புவோர், இந்த நூலின் கருத்தை ஆராய்ந்தறிந்து இதனை யேற்றுக்கொள்வார்கள். எ-று.

(வி-ரை) மங்கைப்பருவம்-பன்னிரண்டு வயதுள்ள பருவம். கொக்கோகம் - மதநாகமம் - (காமநூல்). ஆடவரை வருத்துதலில் வேலாயுதத்தை நிகர்க்குமென்றற்கு "பொருவேல்விழி" என்றார். நிதலை - தேமல்! பரமகுருவின் மலர்த்தாள் வேண்டுபவர்கொள்வா ரிந்நூற் குறிப்பறிந்தே, என்றமையால், இந்நூல் சற்குருவின் அநுக்கிரகம் பெற்றவர்களுக்கே யன்றி மற்றையோர்க்குப் பயன்படாதென்பது பெறப்பட்டது. குறிப்பு - கருத்து, இதனைத் தாத்பர்யம் என்பர் வடநூலார்! மலர்த்தாள வேண்டுபவர், என்றது திருவடி தீட்சைபெற விரும்புவோர் என்றபடி. (௩)

தேசோ மயமா மிறையியற்றுஞ்
செய்கை யானுந் துரியநிறை
டாசா னருள்பெற் றதனானு
மறிஞர் பழக்கத் தானுமெனுட்
கூசா துதித்த விந்நூலின்
குறிகண் டமர்ந்த குணத்தோர்கள்
பேசா ராகிக் குருபதத்தைப்
பெறுவா ரின்பம் பெறுவாரே.

(இ-ள்.) தேசோமயம்ஆம் - தேஜோரூபமாகிய, இறை- இறைவனானவன், இயற்றும் - செய்கிற, செய்கையானும்- செயலாலும், துரியம்நிறை - துரியபதத்தில் நிறைந்து விளங்குகிற, ஆசான் - சதாசாரியனது, அருள்பெற்றதனானும்- அநுக்ரஹத்தைப் பெற்றதனாலும், அறிஞர் பழக்கத்தானும்-

ஞானியரது பழக்கத்தாலும், என்உள் - என்மனத்தில், கூசாது உதித்த - கூசாது தோன்றிய, இந்நூலின் குறிகண்டு - இந்நூலின் கருத்தை யறிந்து, அமர்ந்த - அமைந்த, குணத்தோர்கள் - சுகுணவான்களாகிய பெரியோர்கள், பேசார் ஆகி - பேசாதவர்களாகி, குருபதத்தை பெறுவார் - சதாசாரியருடைய திருவடிகளைப் பெறுவாராகி, இன்பம் பெறுவார் - பேரின்பத்தையும் அடைவார்கள். எ-று.

(பொ-ரை) தேஜோரூபமாகிய இறைவனானவன் செய்கிற செயலாலும் துரியபதத்தில் நிறைந்து விளங்குகிற சதாசாரியாது அநுக்ரஹத்தைப் பெற்றதனாலும் ஞானியரது பழக்கத்தாலும் என்மனத்தில் கூசாமல் தோன்றிய இந்நூலின் கருத்தையறிந்து அமைந்த சுகுணவான்களாகிய பெரியோர்கள், பேசாதவர்களாகி சதாசாரியருடைய திருவடிகளைப்பெறுவாராகிப் பேரின்பத்தையு மடைவார்கள். எ-று.

(வி-ரை.) தேஜோமயம் - ஒளியுருவம். இறைவன் - எல்லாப்பொருள்களுக்குந் தலைவன். செய்கை - செயல். பழக்கம் - பயிற்சி. கூசாது - நாணாமல். பேசாராகி - மௌனநிலையுடையவராய். இந்நூலின் முதற்பாட்டில் 'பரமகுரு பதுமமலர் மென்பதங் காப்பாம்' என்றும், இரண்டாம்பாட்டில் 'பேராதருளுங் குரு திருத்தாள்பெற்றே மயக்கப் பிணக்கறுத்து' என்றும், மூன்றாம்பாட்டில் 'பரமகுருவின் மலர்த்தாள் வேண்டுபவர்' என்றும், நான்காம்பாட்டாகிய இதில் 'குருபதத்தைப் பெறுவா ரின்பம் பெறுவாரே' என்றும், கூறியதனால்இந்நூலாசிரியர் குருபக்தியிற்சிறந்தவரென்பதுநன்கு விளங்குகின்றது. குருபக்தியிற்சிறந்தவராகவே, அவராலுணர்த்தப்பட்ட லிங்கசங்கம பக்தியிலும் சிறந்தவரென்பது சொல்லாதேயமையும். (ச)

பாலர் மழலை மொழிகேட்டுப்
பாலோ டமுதங் கலந்துண்டாற்

போல மகிழ்ந்தா னந்தமிகப்
　　பொங்குக தாயுண் மையையறிந்து
ஞால மதிலிச் சிறுவனுரை
　　நன்று நன்றென் றகமகிழ்ந்து
சால வருளா திருப்பாரோ
　　சற்சிற் சுகத்திற் சார்ந்தோரே.

(இ-ள்.) பாலர்-பாலகருடைய, மழலை மொழிகேட்டு-மழலைச் சொல்லைக்கேட்டு, பாகோடு அமுதம்கலந்து உண்டாற்போல-பாகோடுஅமிர்தத்தையும் கலந்துண்டாற்போல, மகிழ்ந்து-மகிழ்ச்சியடைந்து, ஆனந்தம் மிகபொங்கும்-இன்பம்அதிகரித்தலால் பூரிக்கின்ற, தாய்உண்மையைஅறிந்து-தாயினது உண்மை நிலையையுணர்ந்து, ஞாலமதில் - உலகத்தில், இச் சிறுவன்உரை - இச்சசிறியேனாகிய என் சொல்லை, சற்சிற் சுகத்தில் சார்ந்தோர் - சச்சிதானந்த நிலையையடைந்தவராகிய பெரியோர்கள், நன்று நன்று என்று - நன்கிது நன்கிது என்றுசொல்லி, அகம்மகிழ்ந்து - மனமகிழ்ந்து, சால அருளாதிருப்பாரோ - மிகவும் அருள் செய்யா திருப்பார்களோ.

(பொ-ரை.) பாலகருடைய மழலைச் சொல்லைக்கேட்டு, பாகோடு அமிர்தத்தையும் கலந்துண்டாற்போல மகிழ்ச்சியடைந்து, இன்பம் அதிகரித்தலால் பூரிக்கின்ற தாயினது உண்மை நிலையையுணர்ந்து உலகத்தில் சிறியேனாகிய என் சொல்லை சச்சிதானந்த நிலையையடைந்தவராகிய பெரியோர்கள் நன்கிது நன்கிது என்றுசொல்லி மனமகிழ்ந்து மிகவும் அருள் செய்யாதிருப்பார்களோ. எ-று.

(வி-ரை.) மழலைமொழி - பொருள் நிரம்பாத சொல், அமிர்தம் - சாவாமைக்கேதுவாகிய தேவருணவு. பால் எனினும் பொருந்தும். தாயுண்மை - தாயினது உண்மையாகிய அன்புநிலை. சற்சிற்சுகம் என்பதை சத்துசித்து சுகம் எனப்

பிரித்து சச்சிதானந்தமென் றுரைத்துக்கொள்க. சத்து எப்போதும் ஒரு தன்மையதாய் அழியாநிலையதாகிய பிரமப்பொருள், சித்து அறிவொளியாகிய ஞானம், ஆநந்தம் - அழியாத இன்பம் (பேரின்பம்). இம்மூன்றும், மலரும் அதின் நிறமும் அதின்மணமும் போல்வன. இதனை, "பூவண்ணம் பூவின்மணம்போல மெய்போதவின்ப - மாவண்ணமெய்கொண்டவன்" என்பதனலறிக. "உண்மையறி வானந்த வுருவாகி" என்பதனாலும் விசதம். அவையடக்கம் என்னும் இசெய்யுட்கருத்தை சபாவந்தநம் என்பர் வடநூலார். (௫)

பாயிர முற்றிற்று.





# நூல்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

அருமறையின் சிரப்பொருளா யண்டபகி
ரண்டமுமா யமல மோனத்
தொருபொருளாய்ப் பலவிதமா யுணர்வரிய
பேரொளியி னுண்மையாகும்
பெருவெளிகண் டானந்தம் பெறுதற்குக்
குருபதத்தைப் பெறுதல் வேண்டி
யிருளறவே மலமவிளைக்கு நெஞ்சையழைத்
தறிவுரைத்த வியல்பு சொலவாம்.

(இ-ள்) அரு - அருமையாகிய, மறையின் - வேதங்க ளின், சிரப்பொருளாய் - முடிமீதிருக்கும் பொருளாகியும், அண்டபகிரண்டமுமாய் - அண்டபகிரண்டங்களாகியும், அமலம் - பரிசுத்தமான, மோனத்து-மௌனநிலையா லடையப் படுகிற, ஒருபொருளாய் - ஒப்பற்ற பொருளாகியும், பலவிதமாய் உணர்வு அரிய - பலவகையாலும் அறிதற்கரிதாகிய, பேரொளியின் உண்மை ஆகும் - பெருஞ்சோதியின் உண்மை யாகிற, பெருவெளிகண்டு - பெரிய ஆகாயத்தைக் கண்டு, ஆனந்தம் பெறுதற்கு - இன்பமடைதற்கு, குருபதத்தை-சதா சாரியரது திருவடியை, பெறுதல் வேண்டி - பெறவிரும்பி, இருள்அற - அஞ்ஞானவிருள் ஒழியுமபடி, மலம் விளைக்கும் நெஞ்சை அழைத்து - மலத்தை யுண்டாக்குகின்ற மனத்தை யழைத்து, அறிவுஉரைத்த-அறிவான்து சொல்லிய; இயல்பு- தன்மையை, சொல்வாம் - யாம் சொல்லுவோம். எ-று.

(பொ-ரை.) அருமையாகிய வேதங்களின் முடிமீதிருக் கும் பொருளாகியும், அண்டபகிரண்டங்களாகியும், பரிசுத்

தமான மௌனநிலையா லடையப்படுகிற ஒப்பற்ற பொருளா கியும் பலவகையாலும் அறிதற்கரிதாகிய பெருஞ்சோதியின் உண்மையாகிற பெரியஆகாயத்தைக்கண்டு இன்பமடைதற்கு சதாசாரியரது திருவடியைப்பெற விரும்பி அஞ்ஞான விருள் ஒழியும்படி, மலத்தையுண்டாக்குகிற மனத்தையழைத்து அறிவானது சொல்லிய தன்மையை யாம் சொல்லுவோம். எ-று.

(வி-ரை) அறிதற்கருமையாகிய வேதாந்தப் பொருளாதலால் 'அருமறையின் சிரப்பொருளாய்' என்றும், அண்டபகிரண்டங்களெல்லாவற்றிலும் பரிபூரணமாய் நிறைந்திருத்தலால் 'அண்டபகிரண்டமுமாய்' என்றும், மௌனநிலையாலடையப்படும் பொருளாதலால், 'அமல மோனத்தொரு பொருளாய்' என்றும், பலவகையா யிருப்பதாதலால், 'பலவிதமாய்' என்றும், அறிதற்கரிதாகிய பேரொளியினிருப்பாதலால், 'உணர்வரிய பேரொளியி னுண்மை' என்றும், கூறினர். பெருவெளி-பெரிதாகிய, ஆகாயம் - (சிதாகாசம்). மலம்விளைக்கு நெஞ்சு என்பதற்கு பிறவிக்குக் காரணமாகிய சப்தாதிவிஷய தோஷங்களை யுண்டாக்குகிற மனம் என்பது பொருள். இந்நூல் வைராக்கிய சதகம்போல அறிவுக்கும் மனத்துக்கும் நிகழ்ந்த சம்பாஷணையாகச செய்யப்பட்டது.()

பரஞ்சுடராய்ச சின்மயமாய்ப் பரம்பொருளா
யிலகுகின்ற பரம சோதி
நிரஞ்சநனும் வீஞ்சைகற்றோ ரியற்றுமிந்த்ர
ஜாலமெனு நிலத்தின் வண்மை
தெரிந்திதனை யகற்றுமற் கண்டபல
பொருட்காகச் சிந்தை செய்து
திரிந்தனையே நெஞ்சேநீ யென்றறிவாய்
பரமவெளி தேடு மாறே.

(இ-ள்.) பரஞ்சுடராய் - பரஞ் சோதியாகியும், சின்மயமாய் - ஞானவடிவாகியும், பரம்பொருளாய் - மேலானபொரு

ளாகியும், இலகுகின்ற - விளங்காநின்ற, பரமசோதி - மேலா னவொளியையுடைய, நிரஞ்சநன் ஆம் - நிரஞ்சநனாகிற, விஞ் சைகற்றோன் - வித்தையைக்கற்றுவல்லவன், இயற்றும்-செய் கிற, இந்த்ரசாலம் என்னும் - இந்திரசாலமென்று சொல்லு தற்குரிய, நிலத்தின் வண்மை தெரிந்து-இந்த நிலவுலகத்தின் வளத்தையறிந்து, இதனை அகற்றாமல் - இதனது சம்பந்த த்தை யொழிக்காமல், கண்ட - காணப்பட்ட, பலபொருட் காக - பலபொருளின் பொருட்டு, சிந்தை செய்து - சிந்தி த்து, திரிந்தனையே - திரிந்தாயே, நேஞ்சே - மனமே, பரம வெளி தேடும் ஆறு - பெருவெளியைத் தேடுமார்க்கத்தை, நீ என்று அறிவாய் - நீ எக்காலத்தில் அறியவிருக்கிறாய்.

(பொ-ரை) பரஞ்சோதியாகியும், ஞான வடிவாகியும், மேலான பொருளாகியும், விளங்காநின்ற மேலானவொளி யையுடைய நிரஞ்சநனாகிற வித்தையைக் கற்று வல்லவன் செய்கிற இந்திரசாலமென்று சொல்லுதற்குரிய இந்தநிலவுல கத்தின் வளத்தை யறிந்து இதனது சம்பந்தத்தை யொழிக் காமல், காணப்பட்ட பலபொருள்களின் பொருட்டு சிந்தித் துத் திரிந்தாயே, மனமே, பெருவெளியைத் தேடுமார்க்க த்தை நீ எக்காலத்தில் அறியவிருக்கிறாய். எ-று.

(வி-ரை.) நிரஞ்சநன் - குற்றமற்றவன், இந்திரசாலம்- அற்புதங்களைக் காட்டும் வித்தை, இது அறுபத்துநான்கு கலைஞானங்களுள் ஒன்று. கண்ட -, கட்புலனாலறியப்படு கிற, சிந்தைசெய்தல் - விரும்புதல். திரிதல் - அலைதல், 'திரிந்தனையே' என்பதற்கு, உன்னை நீயறிய விரும்பாமல் மாறுபட்டாயே யெனப்பொருள் கூறினும் அமையும். என்று அறிவாய் என்பதற்கு, அரிதாகிய இந்தமானுட சனனம் கிடைத்த இக்காலத்திலறியாமல், "புல்லாகிப்பூடாய்ப் புழு வாய் மரமாகிப், பல்விருகமாகிப் பறவையாய்ப் பாம்பாகிக், கல்லாய் மனிதராய்ப் பேயாய்க்கணங்களாய், வல்லசுரராகி முனிவராய்த் தேவராய்ச், செல்லாஅநின்றவித்தாவர சங்கமத்

துன், எல்லாப்பிறப்பும் பிறந்திளைத்தேன்" [redacted] மேலோர் கூறியபடி வேறாகியபலபிறவிகளெடுத் துழலுங்காலத்திலோ அறியவிருக்கிறாய் என்று பொருள் உரைத்துக்கொள்க. பரமவெளிதேமொறு என்றது குருவருளை. (உ)

எங்குநிறைந் திலகியடி முடிநடுவா
யெப்பொருட்கு மிறையா மென்னும்
பங்கமிலாச் சிறுபாலன மணல்வீட்டு
விளையாட்டாம் பாரின் வாழ்வை
யிங்குநிலை யெனமதிப்ப தொழிந்துகுரு
பதமலரி னிச்சை மேவிக்
கங்குல்பக லற்றவிடத் திருந்துசுகங்
காண்பாயோ கடிய நெஞ்சே.

(இ-ள்.) கடியநெஞ்சே - கொடிதாகிய மனமே, எங்கும் நிறைந்து இலகி - எவ்விடத்திலும் வியாபித்து விளங்கி, அடிமுடிநடுவாய் - முதலும் இறுதியும் நடுவுமாகி, எப்பொருட்கும் - எவ்வகையான பொருள்கட்கும், இறை ஆம் என்னும் - இறைவனாவனென்று சொல்லப்படுகிற, பங்கம் இல்லா - அழிவற்ற, சிறுபாலன் - சிறியபாலகனது, மணல்வீட்டுவிளையாட்டு ஆம் - மணல்வீட்டின் விளையாடலை நிகர்த்த, பாரின் வாழ்வை - இந்தப் பிரபஞ்ச வாழ்க்கையை, இங்கு - இவ்விடத்தில், நிலையென மதிப்பது ஒழிந்து - நிலையென்று எண்ணுவதைவிட்டு, குருபதமலரின் - சதாசாரியரது ஸ்ரீபாதகமலங்களின், இச்சைமேவி - விருப்பத்தையடைந்து, கங்குல்பகல் அற்றஇடத்து இருந்து - இராப்பகல்களற்ற இடத்தில் இருந்துகொண்டு, சுகம் காண்பாயோ - ஆநந்தத்தை அநுபவிக்கப் போகின்றனையோ. எ-று.

(பொ-ரை.) கொடிதாகிய மனமே, எவ்விடத்திலும் வியாபித்து விளங்கி, முதலும் இறுதியும் நடுவுமாகிய எவ்வகை

யான பொருள்கட்கும் இறைவனுவனென்று சொல்லப்படு கிற அழிவற்ற சிறியபாலகனது மணல்வீட்டின் விளையாடலை நிகர்த்த இந்தப்பிரபஞ்ச வாழகைகையை இவவிடத்தில் நிலையென்றெண்ணுவதைவிட்டு, சதாசாரியரது ஸ்ரீபாதகமலங்களின் விருப்பத்தையடைந்து இராப்பகல்களற்ற இடத்திலிருந்துகொண்டு ஆநந்தத்தை யநுபவிக்கப் போகின்றனையோ.

(வி-ரை.) இதவசநத்துக்குச செவிகொடுத்துக் கேளாதவரைச செவிகொடுதது‌க் கேட்கும்படி கடிந்து சொல்லுதல் உலகியற்கையாதலால், விஷயாதிகளில்யதேசசையாய் விஹரித்துக்கொண்டு திரிகிற மடைம் இன்சொல்லுக்குச செவிகொடாதெனககருதி, ‘கடியநெஞ்சே’ என வன்சொல்லால் அறிவுஅழைத்தது. “சிறுவீடுகட்டியதி னடுசோற்றை யுண்டுண்டு தேக்குசிறியார்கள் போல” என்று தாயுமாந சுவாமிகள் கூறியுள்ளபடி, தெருவில் சிறுவீடுகட்டி அதில்சமைத்த மணற்சோற்றையுண்டதாகப் பாவனைகாட்டி மீட்டு மவவீட்டையழித்து விளையாடல் செய்யும் சிறுவர்களைப்போல், “உலகியாவையுந் தாமுளவாக்கலும், நிலைபெறுத்தலு நீக்கலு நீங்கலா, வலகிலாவிளை யாட்டுடையாரவர், தலைவ ரன்னவர்க் கேசரணுஙகளே” என்னும் முனனோர் மொழியின்படி இறைவன் சகல புவனஙகளையும் ஆக்கியளித்து அழித்தலைத் தனக்குத் திருவிளையாடலாக உடைமைபற்றி, இவவுலகவாழ்வுநிலைபெறு தழியு மியல்புடையதாதலால், சிறுபாலன் மணல்வீட்டு விளையாட்டாம் பாரின் வாழ்வு, என்றார். “நாடுநகர் வீடுடையா டாய்தந்தை நட்புமக்கள், மாடுகுலம் பொன்னுடம்பின்வாதனைகள், கூடத, தொடுத்தவலைக் கண்ணித்துடக்கிதனையிப்போ, விடப்பெறுவா ரேன்பிறப்பார் மேல்” என்று கண்ணுடைய வள்ளலார் கூறியிருத்தலால், நாடுநகர்முதலிய துடக்குகளை யொழிக்க வேண்டுமென்றும், அவ்வாறொழித்தவர்கள், இனி ஜனன மரண துக்கங்களினால் வருந்தார்களென்றும் பெறப்படுதலால் “இங்கு நிலையென மதிப்ப தொழிந்து” என்று கூறினார்.எல்லாப் பற்றுகளையுமொழித்து இறைவனது

திருவடிகளையடைந்தவர்கள் கங்குல்பகலற்றவிடத்தி லிருப்ப ரென்பதை "எத்தனைநாள்கூடி யெடுத்தசரீரமிவை, யத்தனையு மண்டின்ப தல்லவோ—வித்தகனார், காலைப்பிடித்து மெள ளக் கங்குல்பகலற்றிடத்தே மேலைக்குடியிருப்போமே" என்று பட்டினத்தடிகளும் பகர்ந்துள்ளார் 'கங்குல்பக லற்றவிடம்' சதோதயமானவிடம். "கங்குல்பக லறநின்ற வெல்லை" புள தெது என்றும், "இராப்பக லற்றவிடத்தே யிருக்கை யெளி தல்லவே" என்றும், பிற அறிஞர் கூறுதலுங் காண்க. (௩)

தேனினருஞ் சுவையாகித் திகழ்மலரின்
மணமாகித் தெருளு மாகி
வானிறைந்த வெளிமருவி யுயிர்க்குயிராய்த்
துரியநிறை வயங்குஞ் சோதிக்
கோனெனுநற் கூத்தில் வல்லோன்
கோதறவாட் டியபாவைக் கூத்தைநம்பி
நானெனுமா ணவத்தோடு நாட்கழித்து
நெஞ்சேநீ நலிவுற் றாயே.

(இ-ள்.) நெஞ்சே - மனமே, தேனின் அருசுவையாகி- தேனினிடத்தில் அரிதாகிய இன்சுவையாகியும், திகழ் மல ரின் மணம் ஆகி - விளங்குகிற பூவில்வாசனையாகியும், தெரு ளும் ஆகி - தெளிவாகிய அறிவுருவாகியும், வான் நிறைந்த வெளி மருவி - மேகங்கள் நிறைந்த ஆகாயத்திற் கலந்து, உயிர்க்குஉயிராய்-உயிர்க்குஉயிராகியும், துரியநிறைவயங்கும்- துரியபதபரிபூர்ணமாய்விளங்குகிற, சோதிக்கோன்என்னும்- பரஞ்சோதியாகிய இறைவனென்கிற, நல்கூத்தில்வல்லோன்- நல்ல கூத்தாட்டத்தில் வல்லவன், கோதுஅற - குற்றமற, ஆட்டிய - ஆட்டுகிற, பாவைக்கூத்தை நம்பி - பொம்மலாட் டத்தை நம்பி, நான் என்னும் ஆணவத்தோடு - நான்என்கிற ஆணவத்துடன், நாள் கழித்து - உன் வாழ்நாளை வீணாள்க்

கழித்து, நீ நலிவுற்றாயே - நீ வருந்தினையே, 'உன் அறியாமை யிருந்தவா றென்னே.' எ-று.

(பொ-ரை.) மனமே, தேனினிடத்தில் அரிதாகிய இன் சுவையாகியும், விளங்குகிற பூவில்வாசனையாகியும், தெளிவாகிய அறிவுருவாகியும், மேகங்கள் நிறைந்த ஆகாயத்திற் கலந்து உயிர்க்குயிராகியும் துரியபதபரிபூர்ணமாய் விளங்குகிற பரஞ்சோதியாகிய இறைவனென்கிற நல்ல கூத்தாட்டத்தில் வல்லவன், குற்றமற ஆட்டுகிற பொம்மலாட்டத்தை நம்பி, நானென்கிற ஆணவத்துடன் உன் வாழ்நாளை வீணாகக்கழித்து நீ வருந்தினையே, உன் அறியாமையிருந்தவா றென்னே. எ-று.

(வி-ரை.) "உயிர்க்குயிராய்த் துரியநிறைவயங்குஞ்சோதிக் கோன்" என்பதை. "கருதரிய மலரின்மண மெள்ளி லெண்ணெயுடலுயிர்போற்கலந்தெந்நாளுந், துரியநடுவூடிருந்த பெரியபொருளியாததனைத் தொழுதல் செய்வாம்" என்று தாயுமானசுவாமிகள் கூறுதலுங் காண்க. 'கூத்தில் வல்லோன்' பஞ்ச கிருத்தியமாகிய கூத்தாட்டத்தில் சமர்த்தன், பஞ்ச கிருத்தியம் - ஐந்தொழில்கள். அவை—சிருஷ்டி, ஸ்திதி, சம்ஹாரம், திரோபவம், அநுக்கிரகம் என்பன. சிருஷ்டி தமருகத்திலும், திதி அபயாஸ்தத்திலும், சங்காரம் மழுவிலும், திரோபவம் பதித்த திருவடியிலும், அநுக்கிரகம் தூக்கிய திருவடியிலும் நிகழ்வனவென்பதை, "தோற்றந்துடியதனிற் றோயுந் திதியமைப்பிற், சாற்றியிடு மங்கியிலே சங்கார—மூற்றமா, யூன்று மலர்ப்பதத்தி லுற்றதிரோதமுத்தி, நான்ற மலர்ப்பதத்தே நாடு" என்னும் உண்மைவிளக்கச் செய்யுளாலு முணர்க. பாவைக்கூத்து - பொம்மலாட்டம். "நன்றெரிற் பூட்டிய சூத்திரப் பாவைநன்னூர் தப்பினுற், றன்றொழு மாடிச்சலித்திடுமோவந்தத் தன்மையைப்போல், உன்றலியா னுந்திரிவதல்லன் மற்றுனைப் பிரிந்தா, லென்றலிங்காவதுண்டோ விறைவாகசசி யேகம்பனே" "நாட்டமென்றே

யிரு சற்குருபாதத்தை நம்பிப் பொம்மலாட்டமென்றே யிரு பொல்லாவுடலை" என்றார் திருவெண்காட்டடிகளும். ஆண வம்-அகங்காரம். (௪)

ஒருக்கமுறச் சொப்பனத்திற் கண்டதெலா
நிலையென்றே மதிப்பார் போலுந்
திருக்கமல நதிப்புனலென் றருஞ்சுரங்கண்
டோடிமறி திகைத்தல் போலும்
பெருக்கமுற்றே யழிவாழ்வை வாழ்வென்னும்
பேதைமையைப் பிரித் தறுத்து
கரைத்துவிடா தலைந்தாயென் றறிவுரைக்க
நெஞ்சமினிக் கனன்று கூறும்.

(இ-ள்.) ஒருக்கம் உற - கூட்டமாக, சொப்பனத்தில்-கனவில், கண்டதுஎல்லாம் - காணப்பட்ட பொருள்கள் யாவும், நிலையென்றே - உண்மையென்றே, மதிப்பார் போலும் - எண்ணுவோர் போலவும், அருசுரம் கண்டு - அரிதாகிய கானலைக்கண்டு, மறி - மான்கள், திரு - அழகாகிய, கமல நதிபுனல் என்று - தாமரை மலர்கள் நிறைந்த யாற்று நீரென்று நினைத்து, ஓடி - விரைந்துசென்று, திகைத்தல்போலும் - திகைப்பதுபோலவும், பெருக்கமுற்றே - பெருக்க மடைவது போலவே யிருந்து, அழிவாழ்வை - அழிந்தொழிகின்ற இந்தப் பொய்யாகிய பிரபஞ்சவாழ்வை, வாழ்வுஎன்னும் - மெய் வாழ்வென்று நினைக்கிற, பேதைமையை - அறியாமையை, பிரித்து அறுத்து-'உன்னிடத்தினின்றும் வேறாகப்' பிரித்துச சேதித்து, கரைத்துவிடாது - நிர்மூலமாக்காமல், அலைந்தாய்- அலைந்தனையே, என்று அறிவு உரைக்க-என்று அறிவுசொல்ல, இனி - இதற்குமேல், நெஞ்சம் - மனமானது, கனன்று கூறும் - கோபித்துச் சொல்லாநின்றது. எ-று.

(பொ-ரை.) கூட்டமாகக் கனவில் காணப்பட்ட பொருள் கள் யாவும், உண்மையென்றே எண்ணுவோர் போலவும், அரி

தாகிய கானலைக் கண்டு மான்கள் அழகாகிய தாமரை மலர்கள் நிறைந்த யாற்றுநீரென்று நினைந்து விரைந்துசென்று திகைப்பதுபோலவும், பெருக்கமடைவது போலவே யிருந்து அழிந்தொழிகின்ற இந்தப் பொய்யாகிய பிரபஞ்ச வாழ்வை மெய்வாழ்வென்று நினைக்கிற அறியாமையை உன்னிடத்தினின்றும் வேறாகப்பிரித்துச சேதித்து நிர்மூலமாக்காமல் அலைகின்றனையே யென்று அறிவுசொல்ல, இதற்குமேல் மனமானது கோவித்துக் சொல்லா நின்றது. எ-று

(வி-ரை.) உலகவாழ்வு சொப்பனத்திற் கண்ட பொருள் போல பொய்யாமென்பதை " மையாடு கண்ணியு மைந்தரும் வாழ்வு மனையுஞ் செந்தீ, யையா நின் மாயையுரு வெளித்தோற்றமகிலத்துள்ளே, மெய்யாயிருந்தது நாட்செல நாட்செல வெட்ட வெறும், பொய்யாய்ப் பழங்கதையாய்க் கனவாய் மெல்லப் போனதுவே " என்று பட்டினத்தடிகளும் கூறியுள்ளார். சுரம் - நீரற்றபாலைநிலம், இது இதனிடத்துப் பொய்யாயத் தோற்றுகிற கானலையுணர்த்திற்று. கானல் என்பது பாலைநிலத்தில் தூரத்துப் பார்வைக்கு எரி நீர்போலத் தோற்றுகிற பொய்த்தோற்றம், இதனைப் பேய்த்தேர் என்றும் கூறுவர். "பூத்தாரும் பொய்கைப் புனலிதுவே யெனக் கருதிப், பேய்த்தேர் முகக்குறும்பேதை குணமாகாமே" என்றார் மணிவாசகரும். பேதைமை - அஞ்ஞானம்.()

மாயமெனு மானசயற வல்லன்மைபெற்
றிடுமறிவே மண்ணின் மாழைச்
சீயமிரு புறந்தாங்கு மாசனத்தில்
வீற்றிருந்து செங்கோ லோச்சி
நாயகனு யழியாத வாழ்வுடைய
மன்னனென நாளும் வாழ
நேயமிகவுற்றே னஃதடை வனென
வறிவுமினி நிகழ்த்து மன்றே.

(இ-ள்.) மாயம் என்னும் ஆசை அற-மாயம்என்கிற ஆசையொழிய, வல்லமைபெற்றிடும்அறிவே-சாமர்த்தியம் பெற்றிருக்கிற அறிவே, மண்ணில்-இந்தநிலவுலகத்தில், மாழை-பொன்னினாற்செய்யப்பட்ட, சீயம் - சிங்கங்கள், இருபுறம் தாங்கும்-இரண்டுபக்கங்களிலும் நின்று தாங்குகின்ற, ஆசனத்தில் - இருக்கையில், வீற்றிருந்து - மகிழ்ந்திருந்து, செங்கோல் ஓச்சி-செங்கோல் செலுத்தி, நாயகனாய் - 'உலகத்துக்குத' தலைவனாகி, அழியாச வாழ்வு உடைய - அழிவற்ற செல்வத்தையுடைய, மன்னன் என - அரசன் என்று சொல்லும்படி, நானும் வாழ - நானும் வாழ்வதற்கு, மிகநேயம் உற்றேன்-மிகவும் ஆசை கொண்டிருக்கிறேன், அஃது அடைவன் என-அதனைப் பெறுவேனென்று (மனஞ்சொல்ல), இனி - இதற்குமேல், அறிவு - அறிவானது, நிகழ்த்தும் - சொல்லாநின்றது.

(பொ-ரை.) மாயமென்கிற ஆசையொழியச சாமர்த்தியம் பெற்றிருக்கிற அறிவே, இந்த நிலவுலகத்தில் பொன்னினாற் செய்யப்பட்ட சிங்கங்கள் இரண்டு பக்கங்களிலும்நின்று தாங்குகின்ற இருக்கையில் மகிழ்ந்திருந்து செங்கோல் செலுத்தி உலகத்துக்குத் தலைவனாகி அழிவற்றசெல்வத்தையுடைய அரசனென்று சொல்லும்படி நானும் வாழ்வதற்கு மிகவும் ஆசை கொண்டிருக்கிறேன், அதனைப் பெறுவேனென்று மனஞ் சொல்ல, இதற்குமேல் அறிவானது சொல்லாநின்றது. எ-று.

(வி-ரை.) உலகவாழ்வு நிலையற்றதென்பதை அநுபவத்திற் கண்கூடாகப்பார்த்தும் அதில் விரக்தியுண்டாகாமலும் உள்ளமட்டில் திருப்தியடையாமலும், மேலுமேலும்ஆசையே கொள்வது மாயா சம்பந்தமான மனதின் இயல்பாதலால் "மன்னனென நானும் வாழ நேயமிகவுற்றேன்" என்றார். இதனை, "ஆசைக்கோ ரளவில்லை யகிலமெல்லாங் கட்டி யாளினுங் கடன்மீதிலே, யாணை செலவே நினைவ ரளகேசனிகராக வம்பொன்மிக வைத்தபேரும், நேசித்திரசவாத வித்தைக்

கலேந்திடுவர் நெடுநாளிருந்த பேரும், நிலையாகவேயினுங் காய கற்பந்தேடி நெஞ்சுபுண்ணாவர்" என்று தாயுமான சுவாமிக ளும் கூறியுள்ளார். அறிவினாலன்றிமாயையை வேறொன்றால் வெல்லக்கூடாமையால் 'மாயமெனுமாசையற வல்லமைபெற் றிடு மறிவே, என்றார். மாழை-பொன். சீயம் - சிங்கம். 'சீய மிருபுறந்தாங்கு மாசனம்' என்றது. சிங்காசனம் என்றபடி, செங்கோல் ஓச்சுதலாவது மநுமுதலாகிய நூல்களில் விதிக் கப்பட்ட ராஜதர்மத்தைக் குறைவற நடத்தல் நாயகன்-சக்க வர்த்தி. அழியாதவாழ்வு - கொள்ளக்கொள்ளக் குறையாத பெருஞ்செல்வம், மன்னனென - மன்னன்போல எனினும் பொருந்தும். (சு)

நிலவுமிழுந் தனிக்குடைக்கீ ழரசாண்டு
நேரலர்க ணெருங்கிப் போற்றப்
பலவிதமாப் படைபுடை சூழ்ந் திடக்களிற்றின்
பிடரியொளிர் பரிதி யென்ன
விலகுகின்றோ ரோடேந்தி யிரந்தமன்ன
ரெண்ணிலா ரென் றறிந்தும
உலகுதனி லாசையுற்ற நெஞ்சே நீ
யென்றிதனை யுணரு நாளே.

(இ-ள்.) தனி - ஒப்பற்ற, நிலவு உமிழும் - சந்திரிகையை வீசுகிற, குடைகீழ்-'முத்துக்' குடையின் கீழேயிருந்து, அரசு ஆண்டு - அரசாட்சி செய்து, நேரலர்கள் - பகையரசர்கள், நெருங்கிபோற்ற - நெருங்கிநின்று வணங்கவும், பலவிதம்- பலவகையாகிய, மாபடை - பெரும்படைகள், புடை சூழ்ந் திட - பக்கங்களில் சூழ்ந்து வரவும், களிற்றின் பிடரி-யானை யின்பிடர்மேல், ஒளிர் பரிதி என்ன - விளங்குகிற சூரியன் போல, இலகுகின்றோர்-பிரகாசித்துக்கொண்டிருந்த அரசர்க ளும், ஓடு ஏந்தி - தமது கையில்' ஒரு ஓட்டை யேந்தி, இரந் தமன்னர் - ஐயமேற்றுண்ட அரசர்கள், எண்இலார் என்று

அறிந்தும் - அளவில்லாதவரென்று அறிந்திருந்தும், உலகு தனில் - இப்படிப்பட்ட இவ்வுலகவாழ்வில், ஆசைஉற்ற-விருப்பம் வைத்த, நெஞ்சே - மனமே, நீ - நீ, இதனை - இவ்வுண்மையை, உணரும் நாள் - அறியும்நாள், என்று - எந்த நாளோ 'யான் அறிந்திலேன்.' எ-று.

(பொ-ரை.) ஒப்பற்ற சந்திரிகையை வீசுகிற முத்துக் குடையின் கீழேயிருந்து அரசாட்சிசெய்து, பகையரசர்கள் நெருங்கி நின்று வணங்கவும், பலவகையாகிய பெரும்படைகள் பக்கங்களில் சூழ்ந்துவரவும், யானையின் பிடர்மேல் விளங்குகிற சூரியன்போலப் பிரகாசித்துக்கொண்டிருந்த அரசர்களும் தமது கையில் ஒரு ஓட்டையேந்தி ஐயமேற்றுண்ட அரசர்கள் அளவில்லாதவரென்று அறிந்திருந்தும், இப்படிப்பட்ட இவ்வுலகவாழ்வில் விருப்பம் வைத்த மனமே, நீஇவ்வுண்மையை அறியும் நாள் எந்நாளோ யான் அறிந்திலேன். ()

(வி-ரை.) நிலவுமிழுந் தனிக்குடையென்றதனால் முத்துக்குடையென்று பொருள் கூறப்பட்டது பலவிதமாப் படையென்றது நால்வகையாகியபடைகளை. அவையாவன-யானைப் படை, குதிரைப்படை, தேர்ப்படை, காலாட்படை என்பன. ஒ.டு - பிட்சாபாத்திரம், "அருளுமாசரு மானையுந்தேரும், பொருளும் பிறர்கொள்ளப் போவதன் முன்னந், தெருளுமுயிரொடுஞ் செல்வனைச சேரின், மருளும் பினையவன் மாதவமன்றே" என்று திருமூலரும், "யானையெருத்தம் பொலியக் குடைநிழற்கீழ்ச - சேனைத் தலைவராய்ச சென்றோரும், வினை, ...ளையுலப்ப வேறாகிவீழ்வர் தாங்கொண்ட, மனையாளை மாற்றார்கொள" என்றிவ்வாறுசெல்வத்தின்நிலையாமையைக் குறித்துப் பிற அறிஞரும் கூறுதல் காண்க. இலகுதல் - பிரகாசித்தல், அதாவது புகழ்பெற்று விளங்குதல். (எ)

வாசிதிகூழ் புவிதனையே தப்பசென
மதித்தால்வ்டு மாண்டயன்னர்

பாரினினுண் மணனிகர்ப்பா ரெனவுரைக்கும்
  பழமொழிபட் டாங்கு கேட்டுந்
தாரிலங்குந் தாமமுடித் தரணிபர்கண்
  முதலானோர் தளர்ந்து தேகஞ்
சீரறவே செத்துமண் ணாஞ் செயலறிந்தும்
  புவிமயக்கிற் சோர்ந்தாய் நெஞ்சே.

(இ-ள்.) நெஞ்சே - மனமே, வாரிதிசூழ - கடல்சூழ்ந்த, புவிதனையே - இந்த மண்ணுலகத்தையே, தம்மது என மதித்து - தமதென்று எண்ணி, ஆண்டு - இதனையாண்டு, மாண்டமன்னர் - மடிந்த வேந்தர்கள், பாரினில் - பூமியிலுள்ள, நுண்மணல் நிகர்ப்பார் என - நுட்பமான மணலை நிகர்ப்பார்களென்று, உரைக்கும்-'பெரியோர்' சொல்லுகிற, பழமொழி பட்டாங்கு கேட்டும் - பழமொழியின் உண்மையைக்கேட்டிருந்தும், தார் இலங்கும் - மலர்களால் தொடுக்கப்பட்டு விளங்குகின்ற, தாமம் - மாலையைத் தரித்த, முடி - மகுடத்தையுடைய; தரணிபர்கள் - பூபதிகள், முதலானோர் - முதலானவர்கள், தேகம் தளர்ந்து - சரீரம் தளர்ந்து, சீர்அற - தமது சிறப்பொழியும்படி, செத்து - இறந்து, மண் ஆம் - மண்ணாகின்ற, செயல் அறிந்தும் - செய்கையை அறிந்திருந்தும், புவிமயக்கில் சேர்ந்தாய் - இந்த வுலக வாழ்வாகிய மயக்கத்திற் பொருந்தினையே, (இதென்ன அறியாமை) எ-று.

(பொ-ரை.) மனமே, கடல் சூழ்ந்த இந்த மண்ணுலகத்தையே தமதென்றெண்ணி இதனை யாண்டுமடிந்த வேந்தர்கள், பூமியிலுள்ள நுட்பமான மணலை நிகர்ப்பார்களென்று பெரியோர் சொல்லுகின்ற பழமொழியின் உண்மையைக் கேட்டிருந்தும், மலர்களால் தொடுக்கப்பட்டு விளங்குகின்ற மாலையைத் தரித்த மகுடத்தையுடைய பூபதிகள் முதலானவர்கள் சரீரம் தளர்ந்து தமது சிறப்பொழியும்படி இறந்து, மண்ணாகின்ற செய்கையை அறிந்திருந்தும் இந்த வுலக

வாழ்வாகிய மயக்கத்திற் பொருந்தினையே, (இதென்ன அறியாமை.) எ-று.

(வி-ரை.) வாரிதிசூழ் புவிதனையே தம்மதெனமதித்தாண்டு மாண்டமன்னர் பாரினினுண் மணனிகர்ப்பார் என்றது இம மண்ணுலகத்தை யாண்டு மடிந்துபோன அரசரை இவவளவி னவென்று மதித்தறிதல் கூடாதென்பதை விளக்குதற்கு. "மண்ணுண்டமன்னவரு மவாவாழ்வும்போயின நுண்மணலை யொக்கும்" என்றும், "முடிசார்ந்த மன்னரு மற்றுமுள்ளோரு முடிவிலொரு, பிடிசாமபராய் வெந்து மண்ணாவதுங்கண்டு பின்னுமிந்தப், படிசார்ந்த வாழ்வை நினைப்பதல்லாற் பொன்னினம்பலவ, ரடிசார்ந்து நாமுயயவேண்டுமென்றே யறிவாரில்லையே" என்கிறபடி அரசர் வாழ்வு மழிந்துபோமென்றும் முதியோர் மொழிந்திருக்கின்றனர். பட்டாங்கு - உண்மை, தார்-மலர். தாமம் - மாலை. (அ)

இரவுதனிற் கூத்தாடு மவைநேரா
 மிவ்வாழ்வை யிருக்கு மென்றே
கருதிமிக வாசையுற்றாய் காசினியெ
 லாங்குடைக்கீழ்க் காத்தல் போலக்
குரைகடல்சூ ழெழுதீவுங் காசைகொள்ளும்
 பாழ்நெஞ்சே குருவின் றாளிற்
சரணமென வடைவதென்று புவிமயக்கிற்
 சிக்கிநொந்து தவிக்கின் றாயே.

(இ-ள்.) இரவுதனில் - இராக்காலத்தில், கூத்தாடும்-கூத்தாடுகிற, அவைநேராம் - சபையையொத்த, இவவாழ்வை- இவவுலக வாழ்க்கையை, இருக்குமென்றே கருதி - நிலையாயிருக்குமென்றெண்ணியே, மிக ஆசையுற்றாய் - இதனிடத்தே மிகவும் ஆசைவைத்தாய், காசினியெல்லாம் - [redacted] முழுதும், குடைக்கீழ் - ஒரு குடைக்கீழ் வைத்து, காத்தல்

போல - காப்பாற்றுவதுபோல, குரைகடல்சூழ் - சத்திக்கிற கடல்சூழ்ந்த, எழுதீவுக்கு - சப்ததீவுகளுக்கும், ஆசைகொள்ளும் - ஆசைகொள்ளுகிற, பாழநெஞ்சே - பாழ்மனமே, குருவின் தாளில் - சற்குருநாதன் திருவடியில், சரணம்என-அடைக்கலமென்று, அடைவது என்று - நீ அடைவது எந்தநாளோ, புவிமயக்கில் சிக்கி - இந்தப் பிரபஞ்ச மயக்கத்தில்அகப்பட்டு, நொந்து தவிக்கின்றாயே - நொந்து தவிக்கின்றனேயே. எ-று.

(பொ-ரை) இராக்காலத்தில் கூத்தாடுகிற சபையை நிகர்த்த இவ்வுலகவாழ்க்கையை நிலையா யிருக்குமென் றெண்ணியே இதனிடத்தே மிகவும் ஆசைவைத்தாய், உலகமுழுதும் ஒரு குடைக்கீழ் வைத்துக் காப்பாற்றுவதுபோல, சத்திக்கிற கடல்சூழ்ந்த சப்ததீவுகளுக்கும் ஆசைகொள்ளுகிற பாழ் மனமே, சற்குருநாதன் திருவடியில் அடைக்கல மென்று நீயடைவது எந்தநாளோ, இந்தப் பிரபஞ்சமயக்கத்தில் அகப்பட்டு நொந்து தவிக்கின்றனேயே. எ-று.

(வி-ரை.) இவ்வுலகவாழ்க்கை வினைப்போகமாயிருந்து அப்போகவிறுதியில் நிலையிலதா யழிதலால் "இரவுதனிற் கூத்தர்மேவை நேர் இவ்வாழ்வு" என்றார். "கூத்தாட்டவைக் குழாத்தற்றே பெருஞ் செல்வம் - போக்குமது விளிந்தற்று" என்றார் மேலோரும். நெஞ்சம் தன்சொல்வழிநில்லாமையால், அதனைப் "பாழ்நெஞ்சே" யென் றிழித்துக் கூறினார். இதனை "சற்றாகிலுந் தன்னைத்தா னறியாய்தனை யாயந்தவரை; யுற்றாகிலு முரைக்கப் பொருந்தா யுன்க்கானநிலே, பற்றாய் குருவைப் பணியாய்பரத்தையர் பாலிற்சென்றென், பெறாய் மட நெஞ்சமே யுனைப்போலில்லை பித்தனுமே" என்று பட்டினத்தடிகள் கூறுதலுங் காண்க. குரைத்தல்-ஒலித்தல். எழுதீவு-சப்தத்வீபங்கள், அவையாவன-நாவல், இறலி, குசை, கிரவுஞ்சம், புட்காம், தெங்கு, கமுகுஎன்னும் எழுவகைப்பொருள்களை மிகுதியாக வுடையனவாய் அவ்வப்பொருள்களாலே பெயர்பெற்ற நாவலந்தீவு முதலியன. (௬)

வாங்குகடல் சூழ்புவியைப் பொதுவறவே
யாண்டுமன மகிழ்ந்து சீர்த்தி
யோங்கிவளம் பெற்றிருந்துங் கடல்கடக்க
வோடிடினு மோடு கையிற்
றாங்கியிரந் துண்டிருந்து மொருசாணி
னுதரபசி தணிக்க நாளும்
ஏங்குவதா லுள்ளதுவே போதுமெனி
லாசையறு மிணங்காய் நெஞ்சே.

(இ-ள்.) வாங்கு - வளைந்த, கடல்சூழ் - கடலால் சூழப்பட்ட, புவியை - பூலோகத்தை, பொதுஅற ஆண்டு - பொதுவற அரசாட்சிசெய்து, மனமகிழ்ந்து - மனங்களித்து, சீர்த்தி ஓங்கி-புகழாலுயர்ந்து, வளம்பெற்றிருந்தும் - மிகுந்த செல்வத்தைப் படைத்திருந்தாலும், கடல்கடக்க ஓடிடினும் - கடலைக்கடந்தோடிச சம்பாதித்தாலும், ஓடுகையில் தாங்கி - ஓட்டைக் கையிலே யேந்தி, இரந்து உண்டிருந்தும் - ஐயமேற்றுண்டிருந்தாலும், (இவையாவும்) ஒருசாணின் உதரபசிதணிக்க - ஒரு சாணளவாகிய வயிற்றுப் பசியைத் தணித்தற் பொருட்டேயாகும், (ஆதலால் இதைக்குறித்து) நாளும் - தினந்தோறும், ஏங்குவதின் - ஏக்கங்கொள்வதைப் பார்க்கிலும், உள்ளதுவே போதும் எனில் - உள்ளதேபோதுமென்று திருப்தியடைந்திருந்தால்,ஆசைஅறும் - ஆசை யொழியும், (ஆதலால்) நெஞ்சே - மனமே, இணங்காய் - நீ இதற்குச சம்மதிக்கவேண்டும். எ-று.

(பொ-ரை.) வளைந்த கடலாற் சூழப்பட்ட பூலோகத்தைப் பொதுவற அரசாட்சிசெய்து மனங்களித்துப் புகழாலுயர்ந்து மிகுந்த செல்வத்தைப் படைத்திருந்தாலும், கடலைக்கடந்தோடிச சம்பாதித்தாலும், ஓட்டைக்கையிலேயேந்தி ஐயமேற்றுண்டிருந்தாலும் (இவையாவும்) ஒருசாணளவாகிய வயிற்றுப்

பசியைத் தணித்தற் பொருட்டேயாகும், ஆதலால் இதைக் குறித்து தினந்தோறும் ஏக்கங் கொள்வதைப் பார்க்கிலும் உள்ளதே போதுமென்று திருப்தி யடைந்திருந்தால் ஆசை யொழியும், (ஆதலால்) மனமே, நீயிதற்குச் சம்மதிக்க வேண்டும். எ-று.

(வி-ரை.) வாங்குதல் - வளைதல், பொதுவற ஆளுதலாவது பலவேந்தரும் ஆளுதற்குரிய பொதுத்தன்மையையொழித்து உலகமுழுதும் தாமொருவனே தன்குடைநிழலில் வைத்தாளுதல். திரைகடலோடிப் பொருள்தேடினும், ஐயமேற்றுண்டு வாழினும் இவைநோக்குங்கால் சாணளவினதாகிய வயிற்றுப் பசியைத் தணிக்குநிமித்தமே யாம். ஆகையால் உள்ளதேபோதுமென் றிருக்கவேண்டும் என்பதை "யோசிக்கும் வேளையிற் பசிதீரவுண்பது முறங்குவதுமாக முடியும், உள்ளதே போதும்" என்று தாயுமானசுவாமிகளும் கூறியுள்ளார். வளம் - செல்வம். உதரம் - வயிறு. கடல்கடக்க வோடுதலாவது கப்பலேறிப் பல தீபாந்தரங்களுக்குப்போய், வியாபாராதிகளால் பொருளீட்டுதல். (க0)

ஆசையெனு மழுக்கதுன்மே லடைந்திருந்தாற்
  பரமகுரு வருணீ ராலே
மாசறவே கழுவாமன் டலமிருந்த
  வாழ்க்கையெனு மண்டு சேற்றைப்
பூசியதி லழுந்திநித் முழலகின்றாய்
  பாழ்நெஞ்சே பொங்கு மாசை
நாசமுறக் கருதிநிலை நாடாம
  லவிந்தனையே நவிலக் கேண்மோ.

(இ-ள்.) ஆசையென்னும் - ஆசையென்கிற, அழுக்கு-அழுக்கானது, உன்மேல் அடைந்திருந்தால் - உன்மீது படிந்திருந்தால் (அந்த அழுக்கை) பரமகுரு - பரமகுருவினது, அருள்

நீராலே - அருளாகிய நீரினால், மாசுஅற கழுவாமல் - குற்றமறக்கழுவாமல், மலம்மிகுந்த - மலம் மிகுந்திருக்கிற, வாழ்க்கையென்னும்-உலக வாழ்க்கையென்கிற, மண்டு சேற்றை-மிகுந்தசேற்றை, பூசி - பூசிக்கொண்டு, அதில்அழுந்தி - அந்தச்சேற்றின் கண்ணே யழுந்தி, நிதம் உழல்கின்றாய் - நாள்தோறும் அலைகின்றனை, பாழ்நெஞ்சே - பாழ்மனமே, பொங்கும் ஆசை - மிகுந்த ஆசையானது, நாசம் உறக்கருதி - நாசமடையவெண்ணி, நிலைநாடாமல் - நிலையான பொருளைத்தேடாமல், நலிந்தனையே - வருந்தினையே, (இனி அவ்வாறு வருந்தாதபடி)நவிலக்கேள்-யான் சொல்லக் கேட்பாயாக எ-று.

(பொ-ரை.) ஆசையென்கிற அழுக்கானது உன்மீது படிந்திருந்தால் (அந்த அழுக்கை) பரமகுருவினது அருளாகியநீரினால் குற்றமறக் கழுவாமல், மலமிகுந்திருக்கிற உலகவாழ்க் [redacted] யென்கிற மிகுந்த சேற்றைப்பூசிக்கொண்டு அந்தச சேற்றின்கண்ணே யழுந்திநாள்தோறும் அலைகின்றனை, பாழ்மனமே, மிகுந்த ஆசையானது நாசமடைய வெண்ணி நிலையான பொருளைத் தேடாமல் வருந்தினையே, (இனிஅவ்வாறு வருந்தாதபடி) யான் சொல்லக் கேட்பாயாக. எ-று.

(வி-ரை.) "ஆசையெனும் பெருங்காற்றூடிலவம்பஞ்செனவுமன தலையுங்காலம், மோசம்வரு மிதனாலே கற்றதுங் கேட்டதுந்தூர்ந்து முத்திக்கான, நேசமுநல்வாசமும் போய்ப்புலனையிற்கொடுமை பற்றிச்சிற்பரந்தோ, தேசுபழுத்தருள் பழுத்தபராபரமே நிராசையின்றேற் றெய்வமுண்டோ" என்றும் "ஆசைமுதலா மாசனைத்து மறுத்தே யுடலம் வெறுத்தரிய, தேசன் சிவன்பொற் பாதமலர் செறிந்தார் பிறப்பை மறந்தார்கள் பேசற்கரிய பெருமையினைப் பெற்றா ரல்லர் கற்றாலும், [redacted] மலிந்த வாசையினான் மயங்கித்தியங்கு மானிடரே" என்றும் பெரியோர் கூறுதலால், 'ஆசையெனு மழுக்கதன்மே [redacted] திருந்தசுற் பரமகுருவருணீராலே, மாசறவேகழுவாமல்மலமிகு

ந்தவாழ்க்கையெனுமண்டுசேற்றைப், பூசியநிலமூந்நிரிதழுழல் கின்றாய் பாழ்நெஞ்சே பொங்குமாசை, நாசமுறக்கருதிநிலை நாடாமனலிந்தனேயே நவிலக்கேண்மோ " என்றறிவானது மனத்தை நோக்கிக் கூறிற்று, ஆசையே பிறவிக்குக் காரணம் என்பது "அவாவென்ப வெல்லா வுயிர்க்கு மெஞ்ஞான்றும், தவாப்பிறப்பீனும் வித்து,, என்பதனல் இனிதுவிளங்கும். நலிந்தனேயே என்ற ஏகாரம் இரக்கக்குறிப்புணர்த்தும் இடைசசொல். (கக)

உன்னுடைய வாழ்வுதனக் குயர்ந்தோரைக்
கண்டுபற்றா யுன்னி யுன்னி
யன்னபடி வாழவென்றாற் சாமளவு
மலேவுற்றே யுழன்று வாடி
யின்னலனு பவித்திடுவாய் நெஞ்சே நீ
சங்கற்ப மிகழ்ந்தே யுன்றன்
பொன்னிலகு வாழ்வுதனிற் றணிந்தோரை
யெண்ணி மகிழ் புரிந்திடாயே.

(இ-ள்.) உன்னுடைய வாழ்வு தனக்கு உயர்ந்தோரை கண்டு - உன் வாழ்க்கையினும் உயர்ந்த வாழ்க்கை யுடையோர்களைப் பார்த்து, பற்றாய் - அதனிடத்தே ஆசைகொண்டு, உன்னி உன்னி - பலகாலும் அதனேயே நினைத்து, அன்னபடி - அதேபிரகாரம், வாழ வென்றால் - வாழவேண்டுமென் றெண்ணினல், சாம்அளவும் - சாகிறவரைக்கும், அலேவுற்று உழன்று வாடி-அலேந்து உழன்றுவாடி, இன்னல் அநுபவித்திடுவாய் - துன்பத்தை யநுபவிப்பாய், (ஆதலால்) நெஞ்சே - மனமே, நீ - நீ, சங்கற்பம் இகழ்ந்து - சங்கற்பங்களை யொழித்து, உன்றன் - உன்னுடைய, பொன் இலகு வாழ்வுதனில் - அழகாக விளங்குகிற வாழ்வைப் பார்க்கினும், தணிந்தோரை - தாழ்ந்தவர்களை, கண்டு-பார்த்து, மகிழ்புரிந்திடாய் - மகிழ்ச்சியடைவாயாக. எ-று.

(பொ-ரை.) உன்வாழ்க்கையினும் உயர்ந்த வாழ்க்கையுடையோர்களைப் பார்த்து அதனிடத்தே ஆசைகொண்டு பலகாலும் அதனையே நினைத்து அதே பிரகாரமாக வாழவேண்டுமென்று எண்ணினால், சாகிறவரைக்கும் அலைந் துழன்றுவாடித் துன்பத்தை யநுபவிப்பாய், (ஆதலால்) மனமே, நீ, சங்கற்பங்களை யொழித்து அழகாக விளங்குகிற உன்னுடைய வாழ்வைப் பார்க்கிலும் தாழ்ந்தவர்களைப்பார்த்து மகிழ்ச்சியடைவாயாக. எ-று.

(வி-ரை) பற்று ஆசை. உன்னியுன்னி என்ற அடுக்கு இடையறாது நினைத்து என்னும் பொருள்படநின்றது. நம்மினும் உயர்ந்த வாழ்வுடையோர்களைக் கண்டு பொறாமை மேற்கொண்டு நாமுமவ்வாறு வாழவேண்டுமென்று கருதினால் சாமளவும் துக்கமே பெருகுமென்பதை "இருநிலம் புரக்குமொரு பெருவேந்தன், மிக்கோனொருவன் வெறுக்கை நோக்குழித், தொக்கதன் வெறுக்கை சுருங்கித் தோற்ற, விழப்புறுவி ழுமமெய்தி யழுக்கறுத்து, மற்றது பெறுதற் குற்றனதெரியி, யயிற்சுவை பெறாஅன் றுயிற்சுவை யுறாஅன், மாணிழை மகளிர் தோணலங் கொளாஅன், சிறுகாற்று வழங்காப் பெருமூச்செறிந்து, கவலையுற்றழிவதூஉங்காண்டும்" என்று குமரகுருசுவாமிகள் கூறுதலுங் காண்க. சங்கற்பம் - மனவிருப்பம். இது அனேக அநர்த்தங்களை யுண்டாக்குமாதலால் இதனை வேரறக் களைய் வேண்டுமென்பதற்கு, 'சங்கற்ப' மிகழ்ந்து, என்றார். "சங்கற்ப நாசத்தா லெளிதாக மனநாசந்தானே யெய்தும், அங்குற்ற மனமிறக்கிற் சனன மரணங்களெனுமாமுமாயும், இங்கிப்பா லெனைத் திருடுங் கள்ளனைக் கண்டேன் கண்டே னிவன்பேர் நெஞ்சம், பொங்குற்ற விவனாலே நெடுநா ளொண்தேனின்று பொன்றுவிப்பேன்" எனப் பிறஅறிஞரும் சங்கற்பமே பிறவிக் கேதுவென்றும் சங்கற்ப நாசம் பிறவி நாசத்துக் கேதுவென்றும் கூறுதல் காண்க. (௧௨)

வண்டறவே யுனக்கமைத்த தல்லாம
லலைந்தாலும் வாராதென்று
கண்டிருந்து மலைந்தனையே யெனவுரைக்க
நெஞ்சகமுங் கருதிக் கூறும்
உண்டுடுத்துச் சுற்றமுட னன்பாக
வாழ்வதுவே யுலகி லின்பங்
கொண்டதன்மே லாசையுற்றே னெனவறிவு
சுற்றமது குழையக் கூறும்.

(இ-ள்.) வண்டுஅற - குற்றமற, உனக்கு அமைத்தது அல்லாமல் - (கடவுளால்) உனக்கு அமைக்கப்பட்டதே யல்லாமல், அலைந்தாலும் - நீயலைந்தாலும், வாராது என்று கண்டிருந்தும் - வேறுபொருள்கள் உனக்குக் கிடைக்கமாட்டாவென்று நீயறிந்திருந்தும், அலைந்தனையே என-வீணே அலைந்தாயே யென்று, உரைக்க - அறிவானது சொல்ல, நெஞ்சகமும்-மனமும், கருதி கூறும் - ஆலோசித்துச சொல்லாநின்றது, (அது எப்படியென்றால்) உண்டு உடுத்து - உண்ணவேண்டியவற்றை யுண்டும் உடுக்கவேண்டியவற்றை யுடுத்தும், சுற்றமுடன் - சுற்றத்தாரோடு கூடி, வாழ்வதுவே - வாழ்ந்திருப்பதே, உலகில் இன்பம்கொண்டு - உலகத்தின் இன்பமாவதெனக்கொண்டு, அதன்மேல் - அதனிடத்தில், ஆசையுற்றேன்என - ஆசைகொண்டேனென்று மனம்கூற, அறிவு - அறிவானது, சுற்றமதுகுழைய - சுற்றத்தின மீதுள்ள பற்றறும்படி, கூறும் - சொல்லாநின்றது. எ-று.

(பொ-ரை.) குற்றமறக் (கடவுளால்) உனக்கு அமைக்கப்பட்டதே யல்லாமல் நீ யலைந்தாலும், வேறுபொருள்கள் உனக்குக் கிடைக்க மாட்டாவென்று நீயறிந்திருந்தும் வீணே யலைந்தாயேயென்று அறிவானது சொல்ல, மனமும் ஆலோசித்துச்சொல்லாநின்றது (அது எப்படி என்றால்) உண்ணவே

ண்டிய வற்றை யுண்டும் உடுக்கவேண்டியவற்றை யுடுத்தும் சுற்றத்தாரோடு கூடி வாழ்ந்திருப்பதே உலகத்தின் இன்ப மாவதெனக்கொண்டு அதனிடத்தில் ஆசைகொண்டேனெ ன்று மனம்கூற, அறிவானது சுற்றத்தின் மீதுள்ள பற்றறும் படி சொல்லாநின்றது. எ-று.

(வி-ரை.) வண்டு - குற்றம். "வருந்தியழைத்தாலும் வாரா தவாரா, பொருந்து வனபோவென்றாற் போகா" என்றும் "ஆழவமுக்கிமுகப்பினு மாழ்கடனீர் நாழிமுகவாது நானாழி" என்றும், "உள்ளதொழிய வொருவர்க் கொருவர்சுகங், கொள்ளக்கிடையாக் குவலயத்தில்—வெள்ளக் கடலோடிமீண்டு கரையேறினாலென், உடலோடு வாழு முயிர்க்கு" என்றும் மேலோர் கூறுங்கருத்திற்கிணங்க, வண்டறவே யுனக்கமைத்த தல்லாம லலைந்தாலும் வாராதென்று கண்டிருந்து மலைந்தனை யே,, என்றார். கண்டிருந்தும் என்றது பிரத்தியக்ஷமாகப் பார்த்தும்என்றபடி, அலைந்தனையே இரக்கக்குறிப்பு, உறுதல் மிகுதலாதலால் ஆசையுற்றேன் என்பதற்கு ஆசைமிகுந்தேன் என்றும் பொருள்கூறலாம். சுற்றத்தின் மேலுள்ள பற்றைச் சுற்றமென்றே கூறினர். குழைதல் - அறுதல். (கஙு)

கனகமிகும் பெருவாழ்வு சிறந்தவரைக்
  கண்டோர்கள் கலந்து கூடித்
தனதுடைய சுற்றமென மகளிமணம்
  புணர்ந்திடவே தருவார் வாழ்க்கைக்
கனமதுகெட் டிடிற்பெற்றோர் பிறந்தோரு
  மிகழ்ந்தவிதங் கண்டும் பற்றாய்த்
தினமவரைச் சுற்றமெனத் தியங்கினையே
  நெஞ்சகமே செப்பக் கேண்மோ,

(இ-ள்.) கனகம்மிகும் - பொருள்மிகுந்திருக்கிற, பெருவா ழ்வு சிறந்தவரை - பெருவாழ்விற் சிறந்தோர்களை, கண்டோர்

கன் - கண்டவர்கள், கலந்துகூடி - அவருடன் சேர்ந்து, தன
துடைய சுற்றம் என - தன் சுற்றமென்று உறவாடி, மகளை-
தன்மகளை, மணம்செய்திட தருவார் - விவாகஞ் செய்துகொ
ள்ளத் தருவார்கள், வாழ்க்கை - வாழ்வானது, கனம்கெட்
டிடின் - கனம்குறைந்தால், பெற்றோர்பிறந்தோரும்-பெற்றோ
ர்களும் உடன் பிறந்தோர்களும், இகழ்ந்தவிதம் கண்டும்-
இகழ்ந்தவிதத்தைக் கண்டிருந்தும், பற்றுஆய் - நீ அவர்கள்
மீது பற்றுடையவனாய், தினம் - நாள்தோறும், அவரை-
அவர்களை, சுற்றம் என - சுற்றமென்று நம்பி, மயங்கினையே-
மயங்கினையே, நெஞ்சகமே - மனமே, செப்பக்கேள் - யான்
சொல்லக் கேட்பாயாக. எ-று.

(பொ-ரை.) பொருள் மிகுந்திருக்கிற பெருவாழ்விற் சிறந்
தோர்களைக் கண்டவர்கள் அவருடன் சேர்ந்து, தமது சுற்ற
மென்று உறவாடி தமது மகளை விவாகஞ்செய்து கொள்ளத்
தருவார்கள், வாழ்வானது கனம்குறைந்தால் பெற்றோர்களும்
உடன் பிறந்தோர்களும் இகழ்ந்தவிதத்தைக் கண்டிருந்தும்
அவர்களைச் சுற்றமென்று நம்பி மயங்கினையே, மனமே,
யான் சொல்லக் கேட்பாயாக- எ-று.

(வி-ரை.) கனகம் - பொன், அது இங்குப் பலவகையா
கிய திரவியங்களையுங் குறித்து நின்றது. பெருவாழ்வு-பெரு
ஞ்செல்வம். வாழ்க்கைக்கனம் - வாழ்வின் பெருமை. செல்
வஞ் சிறந்தோரைப் பலருங்கனப்படுத்தி இல்லாரை யிகழ்வ
ரென்பதை "இல்லாரையெல்லாரு மெள்ளுவர்செல்வரை,யெ
ல்லாருஞ் செய்வர் சிறப்பு" என்று திருக்குறளிலும், "உண்
டாயபோழ்தி னுடைந்துழிக் காகம்போல், தொண்டாயிரவர்
தொகுபவே—வண்டாய்த், திரிதருங் காலத்துத் தீதிலிரோ
வென்பார், ஒருவரு மிவ்வுலகத்தில்" என்று நாலடியாரி
னுங் கூறி யிருத்தல் காண்க. பெற்றோர் - தாய் தந்தையர்,
"விடையவ னிறையேதாதை மற்றவன்பான் மின்னெம
தன்னை யன்னவரைக், கடையரே மறந்து துறந்து தான

ன்றோ கடம்பவ விடும்பை யுற்றனமிவ், வடைவுணர்ந் நிலை போன் றுடல்தற் கேதுவாய்வரத்தாய் பிதாவென நெஞ், சுடைவுறுகின்றாய் பவந்தொ றிவ்வணமுற் றுளவுயிர்க் களவி யாதுரையே" என்றார் பெரியோரும். (கச)

பழுத்தமரந்தனிற் பறவை நிறைந்திருந்து
பழமோயப் பறந்ததே போற்
கொழுத்தநிதி சிறுத்தவுடன் சுற்றமகன்
றிடுமல்லாற் கூடுமோ மண
வழுத்தமன்னர் முடிதாழப் புவியாண்டோ
ரிரந்துண்டு வாடும் போதில்
அழுத்தமுட னாதரித்த சுற்றமுண்டோ
நிலையற்றே யலைந்த நெஞ்சே.

(இ-ள்.) நிலை அற்று - உண்மைநிலையை நீங்கி, அலைந்த நெஞ்சே - அலைந்தமனமே, பழுத்த மரம் தனில் - பழம் பழுத்தமரத்தில், பறவை நிறைந்திருந்து - பறவைகள் நிரம்பியிருந்து, பழம்ஒய - பழங்களொழிய, பறந்ததேபோல் - அந்த மரத்தைவிட்டுப் பறந்துபோவது போலவே, கொழுத்தநிதி - மிகுந்த செல்வமானது, சிறுத்தவுடன் - சுருங்கின வுடனே, சுற்றம் அகன்றிடுமல்லால் - சுற்றங்கள் நீங்கிவிடுமேயன்றி, கூடுமோ - சேர்ந்திருக்குமோ, மண்வழுத்த - மண்ணுலகத்தார் துதிக்கவும், மன்னர் முடிதாழ - அரசர்களுடைய மகுடங்கள் தாழவும், புவி ஆண்டோர் - பூமி முழுதும் ஆண்டவர்களாகிய சக்கரவர்த்திகளும், இரந்து உண்டுவாடும் போதில் - பிச்சையேற்றுண்டு வருந்தும்பொழுதில், அழுத்தமுடன் ஆதரித்த - முன்னே தாம் செவ்வையாய் ஆதரித்த, சுற்றம் உண்டோ - சுற்றம்வந்துதவுதலுண்டோ. எ-று.

(பொ-ரை.) உண்மை நிலையை நீங்கியலைந்தமனமே, பழம் பழுத்தமரத்தில் பறவைகள் நிரம்பியிருந்து, பழங்களொழிய

அந்த மரத்தைவிட்டுப் பறந்து போவதுபோலவே, மிகுந்த செல்வமானது சுருங்கினவுடனே சுற்றங்கள் நீங்கிவிடுமே யன்றிச் சேர்ந்திருக்குமோ, மண்ணுலகத்தார் துதிக்கவும், அரசர்களுடைய மகுடங்கள் தாழவும் பூமிமுழுதும் ஆண்டவர்களாகிய சக்ரவர்த்திகளும் பிக்ஷையேற்றுண்டு வருந்தும் பொழுதில், முன்னே அவர்களால், செவ்வையாய் ஆதரிக்கப்பட்ட சுற்றத்தார் வந்துதவுதலுண்டோ. எ-று.

(வி-ரை.) "ஆலிலை பழமுங்காயு மதனுடைப் பழமுமுண்டேல், சாலவே பறவையெல்லாந் தயங்கிளையென்றே வாழும்" என்று கூறுதலால், இங்குப் பழுத்த மரம் என்றது பழுத்த ஆலமரத்தையே கொள்க. நிதிமிகுத்தபோது கூடியிருந்து சிறுத்தவுடன் அகன்றிடுவோர் உறவின ரல்லர். "அற்ற குளத்தி லறுநீர்ப் பறவைபோ, லுற்றுழித் தீர்வாருறவல்லர், அக்குளத்திற், கொட்டியுமாம்பலு நெய்தலும்போலவே, யொட்டியுலர்வாருறவு" என்பதுபோல் எப்போதும் பிரியாதிருப்போரே நல்லுறவினராவர். மண்வழுத்த என்றது மண்ணுலகத்துள்ளவர் வாழ்த்த என்றபடி. மன்னர் முடிதாழ என்ற விசேடணத்தால் புவியாண்டோர் என்றது உலகமுழுதுமாளும் சக்ரவர்த்திகளே. (கசு)

தந்தை யன்னை சுற்றமொடு தனயாகளு
மடந்தையருந் தரணிதன்னிற்
சுந்தரமாய்நெருங்கியிடப புவியாளப்
பெற்றாலுஞ் சொல்லொணுதை
வந்தமஷ்நடுவாகு மருண்மவுனப்
பரஞ்சுடரி னமைப்பு நீங்கி
யிந்த வுடலிறந்திடும்போ தெவரா லென்
னிதமபெறுவா யேழை நெஞ்சே.

(இ-ள்.) தந்தை அன்னை சுற்றமொடு - தந்தைதாய் சுற்றத்தார் என்பவர்களுடன், தயர்களும்-புதல்வரும், மடந்தைய

ரும்-மாதரும்,தரணிதன்னில்-இவ்வுலகத்தில், சுந்தரமாய்நெரு ங்கியிட-அழகாகநெருங்க, புவிஆளப்பெற்றாலும்-பூமிமுழுதும் அரசாட்சி செய்யப்பெற்றாலும், சொல்லொணாத-சொல்லக்கூடாத, அந்தம் அடிநடு ஆகும் - முடிஅடி நடுவாகிய, அருள் - அருளையுடைய, மவுனம் - மவுனநிலையிற் றோன்றுகிற, பரஞ்சுடரின் - பரஞ்சோதியின், அமைப்பு நீங்கி - அமைப்பொழிந்து, இந்தவுடல் இறந்திடும்போது - இந்தவுடம்பை விட்டுநீங்கும் போது, எவரால் - யாவரால், என் இதம்பெறுவாய் - என்னநன்மையை யடைவாய், ஏழைநெஞ்சே - அறியாமையுள்ள மனமே. எ-று.

(பொ-ரை.) தந்தைதாய் சுற்றத்தார் என்பவர்களுடன் புதல்வரும் மாதரும் இவ்வுலகத்தில் அழகாக நெருங்க பூமிமுழுதும் அரசாட்சி செய்யப் பெற்றாலும், சொல்லக்கூடாத முடி அடி நடுவாகிய அருளையுடைய மவுனநிலையிற் றோன்றுகிற பரஞ்சோதியின் அமைப்பொழிந்து இந்தவுடம்பை விட்டுநீங்கும் போது யாவரால் என்னநன்மையை யடைவாய், அறியாமையுள்ளமனமே, எ-று.

(வி-ரை.) மடந்தையர் என்றது இவ்விடத்து மனைவியரைக குறித்தது. தந்தை தாயார் முதலானோர் நெருங்கிச் சூழ்ந்திருக்க நிலவுலகமுழுது மாண்டாலும் ஆதிமத்யாந்தங்களும் தானேயா யிருக்கிற பரஞ்சுடர் அமைத்தபடியேயன்றி, இவ்வுடலை விட்டு நீங்கும்போது அந்தத் தாயார் முதலா னோரால் என்ன நன்மை யடையப் போகிறாய் என்பது கருத்து. "உற்றாருளரோ, வுயிர்கொண்டு போம்பொழுது, குற்றாலத்துறை கூத்தனல்லா னமக், குற்றாருளரோ" என்று திருநாவுக்கரசுசுவாமிகளும் கூறியிருக்கின்றனர். அக்காலத்தில் அஞ்சேலென் றருள்புரிபவன் சிவபெருமானே. இதனை "புலனைந்தும் பொறிகலங்கி நெறிமயங்கி யறிவழிந்திட் டைம்மேலுந்தி, யலமந்தபோதாக வஞ்சேலென் றருள்செய்வா னமருங் கோயில், வலம்வந்த மடவார்க ணடமாட முழவதிர மழை

யென்றஞ்சிச. சிலமந்தி யலமந்து மாமேறி முகில்பார்க்குந் திருவையாறே" என்று திருஞான சம்பந்தசுவாமிகள் திருவாய் மலர்ந்தருளி யிருக்கின்றனர். பாஞ்சுடரி னமைப்பு-புண்ணிய பாபங்களின் பயன்களாகிய சுகதுக்கங்கள். (கசு)

குலமென்றுஞ் சுற்றமென்று மகவென்று
மனைவியென்றுங் கூட்ட மெல்லாம
அலமந்த கற்பனையா லலகலுற்ற
தல்லாம லாவ துண்டோ
மலமென்ற மாயையித் லெவரிருந்தெ
னெவரழிந் தென்மடமை நெஞ்சே
பலனுண்டோ சுற்றமதாற் பரமசுக
மடைவதுண் டோ பகர்ந் திடாயே.

(இ-ள்) குலம் என்றும் - குலமென்றும், சுற்றம் என்றும்-உறவினரென்றும், மகவுஎன்றும - மைந்தரென்றும், மனைவியென்றும் - மனையாளென்றும் சொல்லப்பட்ட, கூட்டம் எல்லாம் - கூட்டமுழுதும், அலமந்த-பிறவித்துன்பத்தில் சுழலுதற்கேதுவாகிய, கற்பனையால் - கற்பனைவயத்தால், அலகலுற்றதல்லாமல் - தங்கியிருப்பதல்லாமல், ஆவதுஉண்டோ-இவைகளால் ஆகும்பயன் எதாயினுமுண்டோ, மலம்என்ற-மலம் என்று சொல்லப்பட்ட, மாயை இதில் - மாயையாகிய இதனிடத்தில், எவர் இருந்துஎன்-எவரிருந்தாலென்ன, எவர் அழிந்துஎன்-எவரழிந்தாலென்ன, மடமை நெஞ்சே - அறியாமையுள்ள மனமே, சுற்றமதால் - சுற்றத்தால், - பலன் உண்டோ - பலனுண்டோ, பரமசுகம் அடைவது உண்டோ - மேலான இன்பத்தை யடைவதுண்டோ, பகர்ந்திடாய் - நீ சொல்லுவாயாக. எ-று.

(பொ-ரை.) குலமென்றும், உறவின ரென்றும், மைந்தர் என்றும், மனைவியாள் என்றும் சொல்லப்பட்ட கூட்டமுழுதும்,

பிறவித்துன்பத்தில் சுழலுதற் கேதுவாகிய கற்பனைவயத்தால் தங்கியிருப்பதல்லாமல் இவைகளால் ஆகும் பயன் ஏதாயினு முண்டோ, மலமென்று சொல்லப்பட்ட மாயையாகிய இத னிடத்தில் எவரிருந்தாலென்ன எவர் அழிந்தாலென்ன, அறியாமையுள்ள மனமே, சுற்றத்தால் பயனுண்டோ, மே [redacted] இன்பத்தையடைவதுண்டோ,நீ சொல்லுவாயாக.(எ-று

(வி-ரை.) குலம் - சாதி - சுற்றம் - உறவினர், இவர் சுற் றிக்கொண்டிருப்பவராதலால் இவர்க்கு இப்பெயர் வழங்கும். "சுற்றத்திற் கழகு சூழவிருத்தல்" என்றார் மூதறிவாட்டியா ரும். கற்பனை - இல்லாததை உள்ளதுபோற் செய்துகாட் டல். அல்கல் - தங்குதல் (நிலைபெறல்), குலம் சுற்றமுதலி யன கற்பனையால் வந்ததென்பதை, "தந்தைதாய் தமர்தார மகவென்னு மிவையெலாஞ் சந்தையிற் கூட்டமிதிலோ, சந் தேகமில்லை மணிமாடமாளிகை மேடை சதுரங்க சேனையுட னே, வந்ததோர்வாழ்வு மோரிந்த்ர சாலக்கோலம்" என்றும், எவரிருந்தென் னெவரழிந்தென் என்பதை "ஆரிருந்தென் னர்போயென்னாமுதா நின்னருளின் சீரிருந்தாலுய்வேன் சிவமேபராபரமே"என்றும் தாயுமானசுவாமிகளும், "வெங்கா தற் பெரும்பாம்பு நெளிபுற்றாங் குடும்பபரம் வெறும்பொய்யெ ன்றே,இங்காசையறநீக்கி யெல்லையிலாப்பரமபதத்திருந்துவா ழ்வாய், சிங்காரகந்தர்ப்ப நகரிருந்தென் சிதைவுற்றென் நீதோ நன்றோ, பங்கானமனைமக்கள் வாழ்ந்தாலென் கெட்டாலென் பாசமாயை" என்றுபிறஅறிஞருங்கூறுதலால் "இவரும்,மலமெ ன்றமாயை யிதிலெவரிருந்தெ னெவரழிந்தென் மடமனெஞ் சே, பலனுண்டோ சுற்றமதாற் பரமசுக மடைவதுண்டோ பகர்ந்திடாயே" என்றார். (௧௭)

அத்துவித நிலையாகிப் பூரணமாய்
நிட்களமா யறிவாய் மோன
தத்துவமாய்ச் சுழுமுனையிற் கற்பூர
தீபமெனச் சார்ந்தே யோங்கு

நித்தியத்தைச் சுற்றமென நெருங்கியதிற்
சேராம னில்லா வாழ்வை
யொத்தபெருஞ் சுற்றமென வலைந்தனையே
யெனநெஞ்ச முரைக்கு மன்றே.

(ப-ரை,) அத்துவிதநிலையாகி - இரண்டற்றநிலையுளதாகி, பூரணமாய் - எங்கும் நிறைந்ததாகி, நிட்களமாய்-நிஷ்களமாகி, அறிவாய் - ஞானவடிவாகி, மோனதத்துவமாய் - மௌனநிலையின் உண்மையாகி, சுழுமுனையில் - சுழுமுனையில், கற்பூரதீபம் எனசார்ந்து - கற்பூரதீபம் போலப் பொருந்தி, ஓங்கும், உயர்ந்த, நித்தியத்தை-சாசுவதமான பொருளை, சுற்றம் நெருங்கி - நமக்கு உண்மையாகிய சுற்றமென் றடைந்து, அதில்சேராமல் - அந்தப் பொருளிற் சேராமல், நில்லாவாழ்வை - நிலையற்றவாழ்வை, ஒத்தபெருஞ் செல்வம் என - நமக்குப் பொருத்தமான பெருஞ் செல்வமென்றெண்ணி, அலைந்தனையே என - அலைந்தாயேயென்று அறிவுகூற, நெஞ்சம்-மனமானது, உரைக்கும் - சொல்லா நின்றது, எ-று.

(பொ-ரை.) இரண்டற்ற நிலையுளதாகி, எங்கும்நிறைந்ததாகி, நிஷ்களமாகி, ஞானவடிவாகி, மௌனநிலையின் உண்மையாகி, சுழுமுனையில் கற்பூரதீபம் போலப் பொருந்தி, உயர்ந்த சாசுவதமான பொருளை, நமக்கு உண்மையான சுற்றமென்றடைந்து அந்தப்பொருளிற் சேராமல், நிலையற்ற வாழ்வை நமக்குப் பொருத்தமான பெருஞ்செல்வமென்றெண்ணி அலைந்தாயே யென்று அறிவுகூற, மனமானது சொல்லா நின்றது. எ-று.

(வி-ரை) நித்தியப் பொருளாகியகடவுளைசுற்றமென்பதை 'உடல்பொய்யுறவாயி னுண்மையுறவாகக், கடவாரார் தண்ணருளே கண்டாய்'' என்று ஸ்ரீதாயுமானசுவாமிகளும், நில்லாவாழ்வென்பதனை வாழ்வாவது மாயம்மிது மண்ணாவது திண்ணம் ''என்று ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகளும் கூறியிருத்தலைக்காண்க, எ-று.

என்னுடைய குலத்தோரைச் சுற்றமல்ல
வெனவுரைத்தேயிகழ்ந்தாய் சான்றோர்
சொன்னமொழி புகழ்வேண்டிற் சுற்றமடை
கெனவிருப்பச் சுற்றந் தன்னை.
சின்னமிது நிலையல்லவெனத் துறந்தாற்
புகழ்வாரார் செப்புமென்ற
தன்னிகரி னீமைநெஞ்சுக் கெதிராக
வறிவு மொழிசாற்று மம்மா

(ப-ரை.) என்னுடையகுலத்தோரை-எனது குலத்தோரை, சுற்றம் அல்ல என உரைத்து இகழ்ந்தாய் - சுற்றத்தாரல்லரென்று சொல்லி யிகழ்ந்தனை, சான்றோர்சொன்னமொழி - பெரியோர் சொல்லியபழமொழி, புகழ்வேண்டின் - புகழை விரும்பினால், சுற்றம் அடைக [redacted] இருப்ப - சுற்றத்தாரைச சேரக்கடவை என்றிருக்க, சுற்றம் தன்னை - சுற்றத்தை, சின்னம் இது - அற்பமாகிய இது, நிலையல்ல என - நிலையல்லவென்று, துறந்தால் - விட்டுவிட்டால், புகழ்வார் ஆர் - புகழ்வோர்யாவர், செப்பும் என்ற - சொல்லும் என்ற, தன்நிகர் இல் - தனக்குச சமானமில்லாத, நீமை - நீமையையுடைய, நெஞ்சுக்கு - மனத்துக்கு, எதிராக - விடையாக, அறிவு - அறிவானது, மொழிசாற்றும் - சிலவார்த்தைகளைச சொல்லாநின்றது, எ-று.

(பொ-ரை) எனது குலத்தோரைச சுற்றத்தாரல்லரென்று சொல்லியிகழ்ந்தனை, பெரியோர் சொல்லியபழமொழி, புகழைவிரும்பினால் சுற்றத்தாரைச் சேரக்கடவையென்றிருக்க, சுற்றத்தை அற்பமாகிய இதுநிலையல்லவென்று விட்டுவிட்டால் புகழ்வோர்யாவர், சொல்லும் என்ற, தனக்குச்சமானமில்லாத நீமையையுடைய மனத்துக்கு விடையாக, அறிவானது சிலவார்த்தைகளைச் சொல்லாநின்றது, எ-று.

(வி-ரை) இகழ்தல்-அவமதித்தல், சின்னம்-தாழ்வுள்ளது, பிறவித்துன்பமுழுது முண்டாவது மனத்தாலேயாதலால் "தன்னிகரிதீமை நெஞ்சு" என்றார். "தன்னெஞ்ச மினைப்பொழியாதறிவிலிநான் ஞானமெனுந் தன்மைபேச, வுன்னெஞ்ச மகிழ்ந்தொருசொல் லுரைத்தனையே யதனையுன்னி யுருகேனையா, வன்னெஞ்சோ விரங்காதமரநெஞ்சோ விருப்புநெஞ்சோவைரமான, கன்னெஞ்சோவலதுமண்ணுங் கட்டிநெஞ்சோவெனது நெஞ்சங் கருதிற்றுனே" என்று தாயுமான சுவாமிகளும் அதன்கடுமையைக் கூறியுள்ளார். (கக)

பெருமையொடு புகழ்வேண்டிற் பொருள்வேண்டும்
பொருளீட்டிப் பேண வென்றால்
அருமைகெடும் படிச்சிறியோர்க் காளாகி
யேவல்புரிந் தலைந்து நொந்தே
இருவகைக்குண் மருண்டுபொரு ளீட்டியிசை
படைப்பது வா யிசையு மற்றப்
பெரும்புகழ்கள் வருமுன்னம் வருஞ்சிறுமை
யறிந்திலையோ பேதை நெஞ்சே.

(ப-ரை.) பெருமையொடு புகழ்வேண்டின் - (உலகத்தில்) பெருமையும் புகழும்வேண்டுமானால், பொருள்வேண்டும் - பொருள்வேண்டும், பொருள் ஈட்டி - பொருளைச்சம்பாதித்து, பேண என்றால் - காப்பாற்றவேண்டுமானால், அருமைகெடும்படி - அருமையழியும்படி, சிறியோர்க்கு - கீழ்மக்களுக்கு, ஆளாகி - அடிமையாகி, ஏவல்புரிந்து அலைந்து நொந்து - (அவரிட்ட) குற்றேவல்களைச்செய்து அலைந்து வருந்தி, இருவகைக்குள் மருண்டு - (சுகதுக்கங்களாகிய) இரண்டுவகை யிலகப்பட்டு மயங்கி, பொருள் ஈட்டி - திரவியத்தைச் சம்பாதித்து, இசைபடைப்பதுவாய் இசையும் - புகழ்படைப்பதாகமுடியும், அப்பெரும்புகழ்கள் வருமுன்னம் - (மேற்கூறிய) அந்தப்பெருமையும் புகழும்வருதற்குமுன்னமே, வரும்சிறுமை

அறிந்திலையோ - வருகின்ற இழிவை நீயறிந்தாயில்லையோ, பேதை நெஞ்சே - அறியாமையையுடைய மனமே, எ-று.

(பொ-ரை) உலகத்தில் பெருமையும்புகழும்வேண்டுமாகு ல்பொருள்வேண்டும், பொருளைசசம்பாதித்துக் காப்பாற்ற வேண்டுமாதலால் அருமையழியும்படி கீழ்மக்களுக்கு அடிமை யாகி, அவரிட்ட குற்றேவல்களைசசெய்து அலைந்துவருந்தி (சுகதுக்கங்களாகிய) இரண்டுவகையிலகப்பட்டுமயங்கி, திர வியத்தைசசம்பாதித்து புகழ்படைப்பதாகமுடியும், மேற்கூ றிய அந்தப்பெருமையும் புகழும்வருதற்கு முன்னமே, வருகி ன்ற இழிவை நீ யறிந்தாயில்லையோ, அறியாமையையுடைய மனமே, எ-று.

(வி-ரை.) புகழ்வேண்டிற் பொருள்வேண்டும் என்பதை, "அருளில்லார்க்கவ்வுலகமில்லை பொருளில்லார்க், கிவ்வுலகமி ல்லாதியாங்கு" என்றும், பொருள்தேடிப் புகழ்பெறுமுன் னம் வருஞ்சிறுமையறிந்திலையோ என்பதை, "இன்னாறும் பொருளை யீட்டுதலுந் துன்பமே, பின்னதனைப்பேணுதலுந் துன்பமே, யன்ன, தழித்தலுந்துன்பமே யந்தோபிறர்பா, வி ழுத்தலுந்துன்பமேயாம்" என்றும் பெரியோர் மொழிந்திருக் கின்றனர். பெருமை - கௌரவம், புகழ் - கீர்த்தி, பேணல்-கா ப்பாற்றல், ஏவல் - ஏவப்பட்டவேலைகள், இருவகை - விரு ப்புவெறுப்புக்கள் எனினுமமையும். (உ0)

பரமகுரு வருணிலையிற் பிணம்போலக்
கிடந்து சகப்பாங்கை நீங்கி
யுரமுடனே சுகவடிவாய்க் கிடப்பதல்லா
லிப்புக ழாலாக்க முண்டோ
பெருமயக்க வுலகிலழுந்திடு மவர்வாய்ப்
புகழ் மிகவும் பெருமையென்றே
வருமயக்கிற் சிக்கிநெஞ்சே யலைந்தழன்று
மடங்காமல் வாதற்றுயே.

(பதவுரை) பரமகுரு - மேன்மையையுடைய சற்குருவின், அருள்நிலையில் - அருள்வசப்பட்டு, பிணம்போலக்கிடந்து சவம்போல அசைவறக்கிடந்து, சகம்பாங்கை நீங்கி - உலகவாசனையையொழிந்து, உரமுடனே - மனவுறுதியோடு,* சுகவடிவாய் கிடப்பதல்லால் - இன்பவுருவாயிருப்பதே பயனல்லாமல், இப்புகழால் - இந்தக்கீர்த்தியினால், ஊக்கம் உண்டோ - இன்பமுண்டோ, பெருமயக்கம் - பெரியமயக்கங்கொண்ட, உலகில் - பிரபஞ்சவாசனையில், அழுந்திடுமவர்வாய் புகழ் - மூழ்குவோரிடத்துண்டாகும் புகழ், மிகவும்பெருமையென்றேவரும் மயக்கில்சிக்கி - மிகுதியாகிய பெருமையென்றெண்ணி அவ்வெண்ணத்தாலுண்டாகிற மயக்கத்திலகப்பட்டு, நெஞ்சே - மனமே, அலைந்து உழன்றும் அடங்காமல் - அலைந்துதிரிந்தும் இன்னமும் அடங்காமல், வாதுற்றாயே - என்னுடன் வாதுசெய்யத்துடங்கினையே, எ-று.

(பொழிப்புரை) மேன்மையையுடைய சற்குருவின் அருள்வயப்பட்டு சவம்போல அசைவறக்கிடந்து உலகவாசனையையொழிந்து மனவுறுதியோடு இன்பவுருவாயிருப்பதே பயனல்லாமல் இந்தக்கீர்த்தியினால் இன்பமுண்டோ, பெரியமயக்கங்கொண்ட பிரபஞ்சவாசனையில் மூழ்குவோரிடத்துண்டாகும் புகழ்மிகுதியாகிய பெருமையென்றெண்ணி அவ்வெண்ணத்தாலுண்டாகிற மயக்கத்திலகப்பட்டு மனமே அலைந்துதிரிந்தும் இன்னமும் அடஙகாமல் என்னுடன் வாதுசெய்யத்துடஙகினையே, எ-று.

(விசேடவுரை.) பரமகுரு வருணிலையிற் பிணம்போற்கிடத்தலை, "பேய்போற்றிரிந்து பிணம்போற்கிடந்திட்ட பிச்சையெல்லாம், நாய்போலருந்தி நரிபோலுழன்று நன்மங்கையரைத், தாய்போற்கருதித்தமர்போலனைவர்க்குந் தாழ்மைசொல்லிச, சேய்போலிருப்பர்கண்டீருண்மை ஞானந்தெளிந்தவரே" என்னும் பட்டினத்தடிகள் திருவாக்கின்படியே இவரும் "பிணம்போலக்கிடந்து" என்றார். சகப்பாங்கு - உலகாவடையெனினும், பொருந்தும் உரம் - அறிவுமாம். (உக)

நில்லாத வாழ்வதனை நிலையென்று
சகமயக்கை நிசமென் றெண்ணிப்
பொல்லாத புகழ் வேண்டி வருத்தமுற்றாய்
நிலையதனாற் பொருந்த லாமோ
எல்லாருங் கண்டிடவே நாயேறி
யோர் பெருமை யெய்து மானாற்
புல்லாண்மை யுள்ளநெஞ்சே புகழதனாற்
பலம் பெற்றுப் பொருந்தலாமே

(ப-ரை.) நில்லாதவாழ்வை - நிலையற்றவாழ்வை, நிலையென்று - நிலையுள்ளதென்று, சகமயக்கை - பிரபஞ்சமயக்கத்தை, நிசம்என்று எண்ணி - உண்மையென்று நினைத்து, பொல்லாத புகழ்வேண்டி - இழிவானபுகழைவிரும்பி, வருத்தமுற்றாய் - துன்பமடைந்தாய், அதனால் - அந்தப்புகழால், நிலை - உண்மை நிலையை, பொருந்தல் ஆமோ - அடையக்கூடுமோ, எல்லாரும் கண்டிட - யாவருங்காணும்படி, நாயேறி - ஒருவன் நாய்மேலேறி, ஓர்பெருமை எய்துமானால் - ஒருபெருமையடைவானாயின், புல்லாண்மை உள்ள நெஞ்சே - அற்பஅறிவையுடையமனமே, புகழதனால் - புகழினால், பலம்பெற்று பொருந்தலாம் - முத்திப்பயனையடைந்து வாழலாம், எ-று.

(பொ-ரை.) நிலையற்றவாழ்வை நிலையுள்ளதென்று பிரபஞ்சமயக்கத்தை உண்மையென்று நினைத்து இழிவானபுகழை விரும்பித்துன்பமடைந்தாய், அந்தப்புகழால் உண்மைநிலையை அடையக்கூடுமோ, யாவருங்காணும்படி ஒருவன் நாய்மேலேறி ஒருபெருமையை அடைவானாயின், அற்ப அறிவையுடையமனமே, புகழினால் முத்திப்பயனையடைந்து வாழலாம், எ-று.

(வி-ரை.) நில்லாத வாழ்வு என்பதனை "நேற்றுளாரின்றுமாளாரின்றனாரதனைக்கண்டும், போற்றிலேனின்னையந்தோ. பொய்க்கினேன்வினைகால, மாற்றிலேனகண்டானந்த வள்ளலேய

ளவின்மாயைச், சேற்றிலேயின்னம்வீழ்ந்து இளைக்கவோ சிறி யனேனே" என்று ஸ்ரீதாயுமானசுவாமிகளுங் கூறியுள்ளார்.— நாயேறினவனுக்கு உண்டாவது இழிவேயன்றி உயர்வில்லை யென்பதுதோன்ற 'நாயேறியோர்பெருமை யெய்துமாஞல், புல்லாண்மையுள்ளநெஞ்சே புகழதனாற்பலம்பெற்றுப் பொரு ந்தலாமே" என்றார். "நாயேறிவீழ்ந்தென்னடாத்துகிலென் ஞானிக்குப், பேயாஞ்சகம்பழித்தென் பேணுகிலென்" என் றார் மேலோரும். பொல்லாதபுகழ் - பொய்ப்புகழ். (உஉ)

பிரியாத பேரன்பாற்புகழ்ந் தழைத்தாற்
பரமசுகம் பெறுவ தல்லாற்
பரியாசத் துட னிகழ்ந்து பழிகாரக்
கொலைக்கள்வன் பாவி யென்றுங்
கருதரிய கோளனிவ னெனப் புவியோ
ருரைத்த தனற்காணு ணாத
துரியநடு நிலையான குருவருடா
னகன்றிடுமோ சொல்லாய் நெஞ்சே.

(ப-ரை.) பிரியாத - நீங்காத, பேரன்பால் - பேரன்பினால், புகழ்ந்து அழைத்தால் - புகழ்ந்து சொன்னால், பரமசுகம்பெ றுவது அல்லால் - மேலான இன்பத்தையடைதலன்றி, பரி யாசத்துடன் இகழ்ந்து - பரிகாசத்தோடு அவமதித்து, பழி காரக்கொலைக்கள்வன்பாவியென்றும் - பழிகாரனுகிய கொ லைக்கள்வனென்கிற பாவியென்றும், கருது அரிய- நினைத்தற் கரிதாகிய, கோளன் இவன் என - கோட்சொல்வோன் இவ னென்று, புவியோர் உரைத்தனல் - உலகத்தார் சொன்னத ஞல், காணுத - காணக்கூடாத, துரியநடுநிலையான - துரியபதத்தின் நடுநிலையாகிய, குருஅருள்தான் அகன்றிடுமோ- சற்குருவின் திருவருளானது உனக்குக்கிடையாமற்போகு மோ, நெஞ்சே - மனமே, சொல்லாய் - நீ கூறுவாயாக, எ-று

(பொ-ரை.) நீங்காதபேரன்பினால் புகழ்ந்துசொன்னால்மேலான இன்பத்தையடைதலன்றி பரிகாசத்தோடு அவமதித்து பழிக்காரனாகிய கொலைக்கள்வன் என்கிறபாவியென்றும்,நினைத்தற்கரிதாகிய கோட்சொல்வோன் இவனென்றும் உலகத்தார்சொன்னதனால், காணக்கூடாத துரியபதத்தின் [redacted] யாகிய சற்குருவின் திருவருளானது உனக்குக்கிடையாமற்போகுமோ, மனமே, நீ கூறுவாயாக, எ-று.

(வி-ரை.) உலகத்தாரிற் புகழ்ச்சியிகழ்ச்சிகளால் முத்திப்பலாபலனுண்டாகாமை நன்குணர்ந்தவர்களாதலால், ஞானிகளவற்றையொரு பொருளாகமதியார். இதனை, "எனையெனையாருதுவிரும்பி, நல்லனெனினுமென்கவவரே, யல்லனெனினுமென்கவில்லாத், திருவொடுகிளைத்துப் பெருவளஞ்சிதையா, தின்பத்தழுந்தினுமழுந்துகவல்லாத், துன்பத்துறைதயினுந்துதைகமுன்பி, விளமையொடுபழகிச்சுழிமூப்புக்குறுகா, தென்றுமிருப்பினு மிருக்கவன்றி, யின்றேயிறக்கினுமிறக்கவொன்றினும், வேண்டலுமிலனே வெறுத்தலுமிலனே" என்னும் திருவெண்காட்டடிகள் திருவாக்கானுமுணர்க. [redacted] ழைத்தல் - இவ்விடத்துச சொல்லுதல் எனப்பொருள்பட்டது, பரமசுகம் - முத்தியின்பம், பரியாசம் - ஆசியம், பாவி - பாவஞ்செய்பவன், குருவருள் - சற்குருவின் அநுக்கிரகம், பேரன்பு - இடையறாத அன்பு, இதுஉழுவலன்பு எனப்படும்- உழுவலன்பாவது எழுமையுந் தொடர்ந்த அன்பு, (உ௧)

பொய்யாகும் புகழதன்மே லாசைதனை
யொழிந்திடெனப் பொருந்தி நெஞ்சம்
மையாருங் கடற்புவியிற் சொந்தமதாய்
நிலைபெற மண்மே லிச்சை
ஐயாவென்றனை வாட்டுதென மண்ணி
லாசையுற்று லதிலே சொக்கு
மெய்யான தறியசமலலைவாயென்
றறிவுமினி விளம்பு மன்றே.

(ப-ரை.) பொய்யாகும் - பொய்யாகிய, புகழதன்மேல் - புகழின்மீது, ஆசைதனையொழிந்திடு - ஆசையை [illegible] விட்டுவிடக்கடவாய், என - என்று அறிவுகூற, நெஞ்சம்பொருந்தி - மனமானது அதற்கிணங்கி, ஐயா - ஐயனே, மைஆரும் - கருநிறம் பொருந்திய, கடல் - சமுத்திரஞ்சூழ்ந்த, புவியில் - இவ்வுலகத்தில், சொந்தமதாய் நிலைமைபெற - சொந்தமாக நிலைபெறும்படி, மண்மேல் இச்சை - மண்மேலுள்ள ஆசையானது, [illegible]ன்றனைவாட்டுது - என்னைவாட்டுகிறது, [illegible] - என்றுகூற, மண்ணில்ஆசை உற்றால் - மண்மீதில் ஆசைவைத்தால், அதிலேசோர்ந்து - அதிலேயயர்ந்து, மெய்யானது அறியாமல் - உண்மைநிலையையுணராமல், அலைவாயென்று - அலைவையென்று, அறிவும் - அறிவானதும், இனிவிளம்பும் - இனிச்சொல்லாநின்றது, எ-று.

(பொ-ரை.) பொய்யாகிய புகழின்மீது ஆசையை நீ விட்டுவிடக்கடவாய், என்று அறிவுகூற, மனமானது அதற்கிணங்கி, ஐயனே, கருநிறம்பொருந்திய சமுத்திரஞ்சூழ்ந்த இவ்வுலகத்தில் சொந்தமாக நிலைபெறும்படி மண்மேலுள்ளஆசையானது என்னைவாட்டுகின்றது என்றுகூற, மண்மீதிலாசைவைத்தால் அதிலேயயர்ந்து உண்மைநிலையையுணராமல் அலைவையென்று அறிவானதும் இனிச்சொல்லாநின்றது, எ-று.

(வி-ரை.) மைஆருங்கடல் என்பதற்கு மேகங்கள் நீருண்பதற்கிடமாகிய கடலென்றுரைப்பினுமாம், மை-மேகம், ஆர்தல்-உண்டல், மெய்யானது - மெய்ப்பொருள், அதுபிரமப்பொருள், என்றிவ்வாறு கூறுதலும் அமையும். (உ௪)

குருதிதசை நரம்பெலும்பு தோல்குடல்சி
நிணங்களொழுங் கூட்டங்கூடி
மருவுபுழுக் கிடமாகு மிவ்வுடற்குக்

சொந்தமா மண்ணை வேண்டித்
திரியலுற்றா யுடன் மாண்டே யெவ்விதமு
மண்ணாகச் சேரு மென்றே
கருதிநிலை பெற்றிலையே மண்மனையே
சொந்தமெனக் கவரு நெஞ்சே.

(ப-ரை.) குருதி - உதிரம், தசை - மாமிசம், நரம்பு - நரம்பு, எலும்பு - எலும்பு, தோல் - தோல், குடல் - குடல், [illegible] - சீ, நிணங்கள் - நிணங்கள் என்று சொல்லப்பட்ட, கூட்டம்கூடி, தொகுதியானது ஒன்றாய்ச்சேர்ந்து, மருவுபுழுக்கு இடமாகும் - பொருந்தியபுழுக்களுக்கிடமாகிய, இவ்வுடற்கு சொந்தமாம் - இந்தவுடம்புக்குச் சொந்தமாகிற, மண்ணைவேண்டி - மண்ணை விரும்பி, திரியலுற்றாய்-அலையத்தொடங்கினாய், உடல்மாண்டே - இவ்வுடம்பு மடிந்தே, எவ்விதமும் - எந்தவகையாலும், மண்ணாகச்சேரும் என்றேகருதி - மண்ணாகவே போமென்று நினைத்து, மண்மனையே சொந்தம்என - மண்ணையும் வீட்டையுமே சொந்தமென்றெண்ணி, கவரும்நெஞ்சே - அவைகளை ஆசைகொள்ளுகிறமனமே, நிலைபெற்றிலையே - உண்மை நிலையையடைந்தாயில்லையே, எ-று.

(பொ-ரை) உதிரம் மாமிசம் நரம்பு எலும்புதோல் குடல்கள் என்று சொல்லப்பட்ட தொகுதியானது ஒன்றாய்ச்சேர்ந்து, பொருந்திய புழுக்களுக்கிடமாகிய இந்த வுடம்புக்குச்சொந்தமாகிற மண்ணைவிரும்பி அலையத் தொடங்கினாய், இவ்வுடம்பு மடிந்தே எந்தவகையாலும் மண்ணாகவே போமென்று நினைத்து, மண்ணையும் வீட்டையுமேசொந்த மென்றெண்ணி அவைகளை ஆசைகொள்ளுகிறமனமே, உண்மை நிலையை யடைந்தா யில்லையே எ-று.

(வி-ரை.) "கொண்டதோலெலும்புமச்சை குருதிநீர்நரம்பு மூளை, மண்டியகுரம்பைவாழ்க்கை வாழ்வினிப் போதும்போதும்" என்றும் "குடருங்கொழுவுங் குருதியுமென்பும், தொடரு நரம்பொடு தோலும், இடையிடையே, வைத்ததடியும் வழும்புமாமற்றிவற்றுள், எத்திறத்தாளீர்ங்கோதையாள்" என்றும்

பெரியோர் கூறியபடியே, இவரும், 'குருதிதசைகரம்பெலும்பு தோல்குடல் [illegible] கிளைங்களொளும் கூட்டங்கூடி, மருவுபுழுக்கி டமாகுமிவ்வுடல்', என்றூர். உடல்மாண்டு மண்ணுகச்சேரு மென்பதை "எரியெனக்கென்னும் புழுவோவெனக்கென்னு மிந்தமண்ணுஞ்,சரியெனக்கென்னும் பருந்தோவெனக் கென்னுந்தான் புசிக்க, கரியெனக்கென்னும் புன்ஞயெனக்கென்னு மிக்காறுடலைப்,பிரியமுடன்வளர்த்தேனிதனுலென்னபே றெனக்கே" என்று பட்டினத்தடிகளும் பகர்ந்துள்ளார்.(உஇ)

புவிநிரம்பி நித்தியநின்மல வடிவாய்
நிர்க்குணமாய்ப் பொலிந்து மேலாய்த்
தவநெறியாய்ச் சமயமெலாந் தானுரு
மிறைநிலையாந் தடத்தந் தன்னிற்
குவியவுநீ சொக்கியது சொந்தமெனக்
குருவருளைக் குறித் திடாமல்
அவனிதனின் மண்மனைமே லாசையுற்று
யெனநெஞ்ச மறையு மன்றே.

(ப-ரை.) புவிநிரம்பி - உலகமுழுதும் நிறைந்து, நித்தியநி ன்மலவடிவாய் - நித்தியநின்மலரூபமாகி, நிர்க்குணமாய் - நிர்க்குணமாகி, பொலிந்து - விளங்கி, மேலாய் - மேலானபொருளாகி, தவநெறியாய் - தபோமார்க்கமாய், [illegible] எல்லாம் தான் ஆகும் - எல்லாசசமயங்களும் தானேயாகிற, இறைநிலையாம் - இறைவனது நிலையாகிற, தடத்தந்தன்னில் குவியவும் - தடஸ்தத்தில் நீயொடுங்கும்படியாகவும், [illegible] சொக்கி-நீ லயித்து, [illegible] சொந்தம்என - அதுவேசொந்தமென்றெண்ணி, குரு அருளைகுறித்திடாமல் - சற்குருவின் அருளை நினையாமல், அவனிதனில் - உலகத்தில், மண்மனைமேல் ஆசையுற்றாய் - மண்மனை என்பவற்றின்மேல் இச்சைகொண்டாய், [illegible] - [illegible]ன்று அறிவுகூற, நெஞ்சம் அறையும் - மனமானது சொல்லுகின்றது., [illegible].

(பொ-ரை.) உலகமுழுதும் நிறைந்து நித்தியநின்மல ரூபமாகி,நிர்க்குணமாகவிளங்கி, மேலானபொருளாகி, தபோமார்க்கமாய் எல்லாசசமயஙகளும் தானேயாகிற இறைவனது நிலையாகிற தடஸ்தத்தில் நீ யொடுங்கும்படியாகவும் லயித்து,அதுவே சொந்தமென்றெண்ணி சற்குருவின் அருளாகினையாமல், உலகத்தில் மண்மனை என்பவற்றின்மேல் இசைகொண்டாய் என்று அறியுகூற, மனமானது சொல்லுகிறது, எ-று.

(வி-ரை.) நின்மலம் - மலரஹிதம், நிர்க்குணம் - குணரஹிதம், மண்மனைமேல் - மண்ணின்மேலும் மனையின்மேலும், மேலாய - மேலானபொருளாய், மேலானபொருள் - பிரமப்பொருள், சமயமெலாம் - அறுசமயஙகளுள்ளும், சமயமெலாந்தானாகும் என்பதனை. "வேறுபடுஞ்சமயமெலாம் புகுந்துபார்க்கின், விளஙகுபரம்பொருளேநின் விளையாட்டல்லால், மாறுபடுங்கருத்தில்லை முடிவின்மோன, வாரிதியினதித்திரள்போல் வயங்கிற்றம்மா"என்றும், "ஆறுசமயங்கடொறும்வேறு வேறாகி விளையாடுமுனையாவரறிவார்" என்றும் ஸ்ரீ தாயுமானசுவாமிகள் கூறியுள்ளதுஙகாண்க. குவிய -ஒடுஙக.

ஓதரியவறுமை யுறுங் காலமெய்தி
னுதவ வோங்கு செம்பொன்
ஆதரமாப புதைக்கவென்ற நெஞ்சையிகழ்ந்
தறிவுரைக் குமமல மோனப்
பூதரசிற் செயலையன்றிச் சீருளதே
விரவிமதி பொருந்து நாளிற்
சீதமதிகலம் பெருகக்குட சலத்தி
லிந்து சிறைசெய்த தாமே.

(ப-ரை.) ஓதரிய-சொல்லுதற்கரிதாகிய, வறுமை உறும் தரித்திரம்மிகுகின்ற, காலம் எய்தினல்- காலம் சேரிட்டால், உதவ -அக்காலத்திலுதவும்படி, ஓங்குசெம்பொன் - உயர்ந்த செம்பொன்னைத்தேடி, ஆதரமாய் - ஆசையோடு, புதைக்க

என்றநெஞ்சை - புதைத்துவைக்கவேண்டியதென்று சொன்னநெஞ்சை, இகழ்ந்து-பரிகசித்து, அறிவு உரைக்கும்-அறிவு சொல்லாநின்றது, அமலமோனபூதரம்-மலரஹிதமாய், மோனநிலையுள்ளதாய் மலைபோலசைவற்றதாய், சிற்செயலை அன்றி-ஞானவுருவமாயிருக்கிறபரம்பொருளின்செயலையல்லாமல், சீர்உளதோ - சிறப்புண்டோ, (உண்டாமென்பது) இரவிமதி பொருந்தும் நாளில்-சூரிய சந்திரர்கள் சேர்கிற காலமாகிய அமாவாசையில், சீதமதி நலம்பெருக - குளிர்ச்சியையுடைய சந்திரனது அழகுநோக்க, குடசலத்தில் - குடநீரில், இந்து-சந்திரனை, சிறைசெய்தது ஆம்-சிறைசெய்தல் போலும், எ-று.

(பொ-ரை.) சொல்லுதற் கரிதாகிய தரித்திரம் மிகுகின்ற காலம் நேரிட்டால் அக்காலத்திலுதவும்படி உயர்ந்த செம்பொன்னைத்தேடி ஆசையோடு புதைத்துவைக்கவேண்டியதென்றுசொன்ன நெஞ்சைப்பரிகசித்து, அறிவுசொல்லாநின்றது. மலரஹிதமாய், மோனநிலையுள்ளதாய், மலைபோலசைவற்றதாய் ஞானவுருவாயிருக்கிற பரம்பொருளின் செயலையன்றிச்சிறப்புண்டோ, (உண்டென்பது) சூரியசந்திரர்கள் சேர்கிற காலமாகிய அமாவாசையில், குளிர்ச்சியையுடைய சந்திரனது அழகுநோக்க, குடநீரில் சந்திரனைச் சிறைசெய்தல்போலும், எ-று.

(வி-ரை.) ஓதரியவறுமை-மிகுதியாகிய வறுமை. பல்வகைத் துன்பங்களை விளைத்தற்கேதுவாயிருத்தலால் ஓதரிய வறுமையென்றார். இதனை "கொடிது கொடிது வறுமை கொடிது" என்றும், "வடிவுந்தனமும் மனமுங்குணமுங், குடியுங்குலமுங் குடிபோகியவா, வடியந்தமிலாவயில்வேலரசே, மிடியென்றொருபாவி வெளிப்படினே" என்றும் "நல்குரவென்னுமிடும்பையுட் பல்குறைத், துன்பங்கள் சென்றுபடும்" என்றும் "இன்மையென வொருபாவிமறுமையு - மிம்மையுமின்றிவரும்" என்றும் ஆன்றோர் கூறுதலானுமுணர்க. ஆதா [redacted] - ஆதாரமர்க. பூதரம் - மலை, அது அசைவற்றதாதலால்,

அசைவற்றதாய் எனப்பொருள் கூறப்பட்டது. இரவிமதி பொருந்துநாள் என்றது சூரிய சந்திரர்கள் கூடுகிறநாள், அது அமாவாசை. இந்து-சந்திரன், இது வடசொல், சிறை செய்தல்-காவற்படுத்தல், சீதம் - குளிர்ச்சி, மதி - மதுவையுடையது, மது - அமிர்தம், அமிர்த கிரணங்களையுடையவனாதலால் சந்திரனுக்கு இப்பெயர் வழங்குகின்றது.

தீவினை நல்வினையனைத் தும்தானாகி
  நின்றதொரு தெய்வந்தானே
மேவியொருத் தன்வறுமைத் துயரமுறத்
  திருவுளத்தில் விரும் புங்காலைத்
தாவியதோர் துன்பமுற்றுத்தளர்வதல்லாற்
  சுகமடையத் தருமோ வீட்டில்
ஆவலுடன் புதைதத பொருளானையுண்ட
  விளங் கனியதாகு நெஞ்சே.

(ப-ரை.) தீவினை - தீவினைப்பயனும், நல்வினை - நல்வினைப்பயனும் ஆகிய, அனைத்தும் - எல்லாம், தான் ஆகின்றது - தானேயாகின்றதாகிய, ஒரு தெய்வம்தானே - ஒரு கடவுளே, மேவி - பொருந்தி, ஒருத்தன் - ஒருவன், வறுமைத்துயரம் உற - வறுமைத்துன்பத்தையடையும்படி, திருவுளத்தில் விரும்புங்காலை - திருவுளத்தில் விரும்பும்போது, தாவியது - வந்து பற்றியதாகிய, ஓர் துன்பம் உற்று - ஒப்பற்ற துன்பத்தையடைந்து, தளர்வதல்லால் - தளர்வதேயன்றி, சுகம் அடையத்தருமோ-இன்பமடையக்கூடுமோ, வீட்டில்-மனையில், ஆவலுடன் - ஆசையோடு, புதைத்தபொருள் - புதைத்துவைத்தபொருளும், (அந்தக்காலத்தில்) ஆனை உண்ட விளங்கனியதாகும் - யானையுண்ட விளாங்கனிபோல ஒன்றுமில்லாமற்போய்விடும், நெஞ்சே - மனமே, (இதனை ஆராய்ந்தறிவாயாக) எ-று.

(பொ-ரை.) தீவினைப்பயனும் நல்வினைப்பயனுமாகிய வெல்லாம் தானேயாகின்றதாகிய ஒரு கடவுளே, பொருந்தி ஒருவன் வறுமைத்துன்பத்தை யடையும்படி திருவுளத்தில் விரும்பும்போது வந்துபற்றியதாகிய ஒப்பற்ற துன்பத்தை யடைந்து தளர்வதேயன்றி யின்பமடையக்கூடுமோ. மனையில் ஆசையோடு புதைத்துவைத்த பொருளும் (அந்தக்காலத்தில்) யானையுண்ட விளங்கனிபோல ஒன்றுமில்லாமற்போய் விடும் மனமே (இதனை யாராய்ந்து அறிவாயாக.)

(வி-ரை.) தீவினை - துஷ்கர்மம், நல்வினை - சத்கர்மம், வைஇ இவற்றின்பயன்களாகிய பாபபுண்ணியங்களை புணர்த்தின. எல்லாஞ்செய்விப்பவன் கடவுளொருவனே யாதலால், தீவினை நல்வினையனைத்தும் தானுகின்றதொரு தெய்வம் என்றார். இக்கருத்தையே, "ஊட்டுவிப்பானு முறங்குவிப்பானுமிங் கொன்றொடொன்றை, மூட்டுவிப்பானு முயங்குவிப்பானு முயன்றவினை, காட்டுவிப்பானுமிருவினைப் பாசக் கயிற்றின்வழி, யாட்டுவிப்பானு மொருவனுண்டே தில்லையம்பலத்தே" என்று பட்டினத்தடிகளும் பகர்ந்துள்ளார். தெய்வம் - தைவம் என்னும் வடசொற்றிரிபு, யதேசசையாய்ச சஞ்சரிக்கிறவன் என்பது பொருள். திருவுளத்தில் விரும்புங்காலே - திருவுளத்தில் சங்கற்பிக்குங் காலத்தில். ஆனையுண்ட விளங்கனிபோல் - ஆனைவிழுங்கின விளங்கனி மலத்துவாரவழியாக வெளிப்படுங்காலத்தில் உருவங் கெடாதிருப்பினும் உள்ளீடில்லா திருப்பதைப்பற்றி யுவமை கூறுவது சிஷ்டாசாரம், உள்ளீடில்லாமற்போதல் - ஒன்றுமில்லாமற்போதல், அதாவது ஓடு மாத்திரமாயிருத்தல்.

இனிப்புசிக்க வேண்டு மெனவாசையிலா
தீப்புசிப்ப தென்ன நீயுந்
தனிப்பொருளி னமைப்பதனுற் கிட்டுவதை
யுண்டுபசி தணித்திடாமல்

அனிச்சமலர் வனந்தோறு மலைந்து கொடுந்
தேனீக்களருந்தே னீட்டிக்
குனித்தசிலை வேடனுக்குக கொடுப்பது போற்
பொருளீட்டக் குறித்தாய் நெஞ்சே.

(ப-ரை) நெஞ்சே - மனமே, இனி புசிக்கவேண்டும் எனும்-னிருங்வழி காலத்தில் நாம் உண்ணுதற்கு வேண்டுமென்கிற, ஆசை இல்லாது - இசசையில்லாமல், ஈபுசிப்பது என்ன - ஈயுண்ணுதல்போல, நீயும் - நீயும், தனிபொருளின் - ஒப்பற்ற பொருளாகிய கடவுளின், அமைப்பதனால் - அமைப்பினால், கிட்டுவதை உண்டு - கிடைப்பதையுண்டு, பசிதணிததிடாமல் - பசியை நீக்கிக்கொள்ளாமல், அனிசசமலர்வனம்தோறும் - அனிசசம்பூக்களுள்ள சோலைகள்தோறும், அலைந்து - திரிந்து, கொடு - கொடுமையுள்ள, தேன் ஈக்கள் - தேன் வண்டுகள், அருதேன் ஈட்டி - அரிதாகிய தேனைசசம்பாதித்து, குனித்த - வளைக்கப்பட்ட, சிலை - வில்லையுடைய, வேடனுக்கு கொடுப்பதுபோல் - வேடனுக்குத தருவதுபோல, பொருள் - திரவியத்தை, ஈட்டக் குறித்தாய் - சம்பாதிக்க நினைத்தாய், எ-று.

(பொ-ரை) மனமே இனிவருங்காலத்தில் நாம் உண்ணுதற்கு வேண்டுமென்கிற இசசையில்லாமல் ஈயுண்ணுதல் போல நீயும் ஒப்பற்ற பொருளாகிய கடவுளின் அமைப்பினால் கிடைப்பதையுண்டு பசியை நீக்கிக்கொள்ளாமல் அனிசசம்பூக்களுள்ள சோலைகள்தோறும் திரிந்து கொடுமையுள்ள தேன் வண்டுகள் அரிதாகிய தேனைச சம்பாதித்து வளைக்கப்பட்ட வில்லையுடைய வேடனுக்குத் தருவதுபோலத திரவியத்தைச சம்பாதிக்க நினைத்தாய்.

(வி ரை.) "நசசரவம் பூண்டானை நன்றாய்த்தொழுவதுவு-மிசசையிலே தானங் இருப்பதுவும் - பிசசைதனை - வாஙகுவது முண்பதுவும் வந்து திருவாயிலிலே - தூஙகுவதுந்தா

னே சுகம்" என்றுபட்டினத்தடிகள் கூறியுள்ளபடி இவரும் கிட்டுவதையுண்டு பசிதணித்திடாமல் பொருளீட்டக் குறித்தாய் என்று நெஞ்சைநோக்கிக் கூறினர். தனிப்பொருள் கடவுள், கடவுள் என்பதற்கு எல்லாத்தத்துவங்களையுங் கடந்தவன் என்பது பொருள். அமைப்பு - சங்கற்பம். வண்டுகள் பலமலர்களிலுஞ்சென்று அவற்றிலுள்ள தேனைசசேகரித்துத் தாமுமுண்ணுமல் வேடனுக்குக் கொடுப்பதுபோல் நீயும் பொருளீட்டிப் பிறர்க்குக் கொடுக்கனைத்தாய், இதென்ன அறியாமையென்பது கருத்து,இதற்கு உதாரணமாக, "உடாஅது முண்ணுதுந் தம்முடம்பு செற்றும், கெடாஅதநல்லறமுஞ் செய்யார், கொடாஅது, வைத்தீட்டினுரிழப்பர் வான்றோய் மலைநாட, உய்த்தீட்டுந் தேனீக்கரி" என்ருர் பிறரும்.

காசினியில் வெறுப்புடனே கடனடுவில்
விட்டிடினுங் கனத்தசெம்பொன்
நேசமுறவுரிமை யொடு முனைச்சேரு
முனக்குரித்தாய் நெருங்குங்காலை
ஆசையுடன் பொருள் புதைத்துப் பொன்காத்த
பூதமென வருகினின்றும்
நாசமுறுங் காலம்வந்தா லழிந்திடுமென்
றுரைக்க நெஞ்சுநவில் வதன்றே.

(ப-ரை.) காசினியில்-இவ்வுலகத்தில், வெறுப்புடனே-வெறுப்போடு, கடல்நடுவில் விட்டிடினும் - கடலின் மத்தியில் போட்டுவிட்டாலும், கனத்தசெம்பொன்- (உன்)பெரும் பொருளானது. உனக்கு உரித்தாய் நெருங்குங்காலை - உனக்கே உரியதாகி உன்னைச் சேருங்காலம் வந்தால், நேசம்உற-ஆசைமிக, உரிமையொடும் - பாத்தியதையோடும், உன்னைசேரும் - உன்னையே தேடிக்கொண்டுவந்து சேரும், ஆசையுடன் - ஆசையோடு, பொருள்புதைத்து-பொருளைப்புதைத்து வைத்து, பொன்காத்த பூதம்என - பொன்காத்த பூதம்போல, அருகில்

நின் றும் - அருகேயிருந்தாலும், நாசம் உறும் காலம் வந்தால்- நாசமடையுங்காலம் நேரிட்டால்,அழிந்திடும் என்று உரைக்க- நசித்துப் போமென்று (அறிவு)கூற, நெஞ்சம் - மனமானது நவிலும் - சொல்லா நின்றது, எ-று.

(பொ-ரை) இவ்வுலகத்தில் வெறுப்போடு கடலின்மத்தியில் போட்டுவிட்டாலும் உன் பெரும் பெருளானது உனக்கேயுரியதாகி யுன்னைச்சேருங் காலம்வந்தால் ஆசைமிகப் பாத்தியதை யோடும் உன்னையே தேடிக்கொண்டு வந்து சேரும், ஆசையோடு பொருளைப்புதைத்துவைத்துப்பொன்காத்தபூதம் போல அருகேயிருந்தாலும் நாசமடையுங்காலம் நேரிட்டால் நசித்துப் போமென்று அறிவுகூற மனமானது சொல்லா நின்றது.

(வி-ரை) ஆங்காலத்தில், வெறுப்புடனே கடலிற் போட்ட பொருளும் போட்டவனையே வந்து சேரும், போங்காலத்தில் எவ்வளவு சாக்கிரதையாக பத்திரப் படுத்தினலும் அப்பொருள் நிலைபெற்றிராமல் அழிந்துபோம் என்பது கருத்து. இதனை ''எண்ணி யொருகரும மியார்க்குஞ்செய்யொண்ணுதுபுண்ணியம்வந்தெய்து போதல்லாற், கண்ணி ல்லான், மாங்காய்விழவெறிந்த மாத்திரைக் கோலொக்குமே, யாங்காலமாகுமவர்க்கு'' என்னும் ஔவையாருடைய முதுமொழியாலுமுணர்க.

குடும்பமெனுஞ் சமுசாரக் கூட்டமஃ
தென்றனையே குறித்து நம்பித்
திடம்பெறலா மெனவிருக்கவது தனையே
காக்கநிதங் திகைத்தே னென்றே
யடர்ந்த நெஞ்சமுரைத்திடவே சமுசாரக்
கடலதனி லமுழ்ந்தித்துன்பம்
படர்ந்ததனை தனைத் தளைத்துக்கொண்டாயென்
றறிவுமினிப் பகருமன்றே.

(ப-ரை) குடும்பம் என்னும்-குடும்பமென்று சொல்லப்படுகிற சமுசாரக்கூட்டம்-சமுசாரக்கும்பலாகிய, அஃது-அது, என்றனையேகுறித்துநம்பி-என்னையே ஆதாரவாய் நினைத்து நம்பி, திடம்பெறலாம் என இருக்க-உறுதிபெறலாமென் றிருப்பதனுல், அதுதனையே காக்க - இதனையேகாப்பாற்றும் பொருட்டு நிதம் - நாள்தோறும், திகைத்தேன் என்று - அலைந்துழன்றேனென்று, அடர்ந்த - குடும்பப்பாதுகாப்பில் பற்றுமிகுந்த, நெஞ்சம் - மனமானது, உரைத்திட-சொல்ல, அறிவும் - அறிவானதும், சமுசாரக்கடலதனில்-சமுசாரசாகரத்தில், அழுந்தி-ஆழ்ந்து, துன்பம் - துன்பமாகிய, படர்ந்த - நெடிதாகிய, தளைதனை தளைத்துக்கொண்டாய் என்று - விலஙகைப் பூண்டுகொண்டனை யென்று சொல்லி, இனி - மேலும், பகரும் - சொல்லாநின்றது, எ-று.

(பொ-ரை) குடும்பமென்று சொல்லப் படுகிற சமுசாரக் கும்பலாகிய அது என்னையே ஆதாரவாய் நினைதது நம்பி உறுதிபெறலா மென்றிருப்பதனுல் அதனையே காப்பாற்றும் பொருட்டு நாள்தோறும் அலைந்துழன்றே னென்று குடும்பப்பாதுகாப்பில் பற்றுமிகுந்த மனமானது சொல்ல, அறிவானதும் சமுசார சாகரத்தில் ஆழ்ந்து துன்பமாகிய நெடியவிலஙகைப் பூண்டுகொண்டனை யென்று சொல்லி மேலும் சொல்லாநின்றது.

(வி-ரை.) "குடும்பபாரந்தலைக் கொண்ட வர்க்கல்லல், விடும்பரி சின்மையாலுந் தீபற, மெய்யுணர் வெஙஙனு முந்தீபற' என்றும், "தாரதன (கிருமென்னிற்றளையாகு மப்பாசந் தளைத்துக் கொண்டால், ஆரதனை யறுத்தகலும் வி'ருடையார்" என்றும் மேலோர் கூறியபடியே குடும்ப சாகரத்திலழுந்தி யிருக்கிற நெஞ்சைநோக்கி அறிவானது'சமுசாரக்கடலதனிலழுந்தித்துன்பம், படர்ந்ததளை தனைத்தளைத்துக் கொண்டாய்' எனஇரங்கிக் கூறியதென்பது கருத்து.

அடுத்தவரைக் காக்கநிதமல் கலுற்றே
னென்றநெஞ்சே யாவிமாண்டு
படுத்துவிடிற் காப்பாயோ வெனவிருக்கு
மளவவரைப் பரிந்து காக்கத்
தொடுத்தாசை யுற்றதென வறிவுரைக்கும்
பிணிதொடரினலதோர்வேளைக்
கெடுத்தரசர்சிறை யிடினுங்காப்பாயோ
வெனநெஞ் சங்கிளத்து மன்றே.

(ப-ரை.) அடுத்தவரைகாக்க -*அடுத்திருப்பவர்களைக் காக்கும்பொருட்டு, நிதம்-நாள்தோறும், அல்கலுற்றேன் என்ற-(சமுசாரவாழ்க்கையில்) தங்கியிருக்கிறேனென்று சொல்லிய, நெஞ்சே - மனமே, ஆவிமாண்டு படுத்துவிடின் - உயிர் நீங்கி நீ யிறந்துவிட்டால், காப்பாயோ என - (அவர்களைக்) காப்பாற்றுவாயோவென்று அறிவுகேட்க, இருக்கும் அளவு - உயிர்நீங்காதிருக்குமளவாயினும், அவரை - அவர்களை, பரிந்து காக்க - அன்போடுகாக்கும் பொருட்டு, தொடுத்த ஆசை உற்றது என - என்னைப்பற்றின ஆசையானது மிகுகின்றதென்று மனம்சொல்ல, அறிவு உரைக்கும் - அறிவுசொல்லாநின்றது, (எப்படி யெனின்) பிணிதொடரின் - பிணிகள் பற்றிவருத்தினும், அல்லது ஓர்வேளை - அன்றி ஒரு காலத்தில், அரசர் - வேந்தர், கெடுத்து - வருத்தி, சிறையிடினும் காவல் செய்தாலும், •காப்பாயோ என - வந்து இவர்களைக் காப்பாற்றுவாயோ வென்றுகேட்க, நெஞ்சம் கிளத்தும்-மனம் சொல்லாநின்றது, எ-று.

(பொ-ரை.) அடுத்திருப்பவர்களைக் காக்கும் பொருட்டு நாள்தோறும் (சமுசாரவாழ்க்கையில்) தங்கியிருக்கிறேனென்று சொல்லிய மனமே, உயிர்நீங்கி நீ யிறந்துவிட்டால் (அவர்களைக்)காப்பாற்றுவாயோவென்று அறிவுகேட்க, உயிர்நீங்காதிருக்குமளவாயினும் அவர்களை அன்போடு காக்கும்

பொருட்டு என்னைப்பற்றின ஆசையானது மிகுகின்றதெ ன்று மனம்சொல்ல, அறிவுசொல்லாநின்றது(எப்படியெனின்) பிணிகள் பற்றிவருத்தினாலும் அன்றி ஒரு காலத்தில் வேந்தர் கருத்திக் காவல்செய்தாலும் வந்து இவர்களைக் காப்பாற்று வாயோவென்று கேட்க மனம் சொல்லாநின்றது.

(வி-ரை) அடுத்தவர்-நம்பினவர், அவர் மனைவிமக்கள் முத லானோர். "கவினிம் மனைமக்களுக் கொருதுணை நாமலதில்லை யென்றே, கவலையுற்றன் றுண்மறந் தனையுனைக் காலனார் கொடுபோயிற், குவலயத்தடைந்தி வரைநாடொறும் புரந்திடு வையோ குறிக்குங்கால், சவலைநெஞ்சமே சிவனலாதுயிர்க்கு யிர்தானு மோர்துணையாமே" என்ற மேலோர் திருவாக்கை இச்செய்யுட் கருத்துக்கு உதாரணமாகக் கொள்ளலாம்.

வக்கணையாய் வெகுசமர்த்தா யுரைத்தாயென்
குடும்பமதை வண்மையாகப்
பக்குவமாய்க் காக்க வெனையல்லாம
லொருவருண்டோ பகாயென்ன
அக்கணமே யதிசயித்தே யறிவுரைக்கு
மலரின்மணமாக வெங்கும்
புக்கியுயிர் களைக்காக்க விறையிருப்ப
தறியாமற் புகல் கின்றாயே.

(ப-ரை.) வக்கணையாய் - தந்திரமாகவும், வெகுசமர்த்தாய்-மிகவும்சாமர்த்தியமாகவும், உரைத்தாய்-சொன்னாய், என்கு டும்பமதை -எனது குடும்பத்தை, வண்மையாக பக்குவமாய் காக்க - வளமாகவும் பக்குவமாகவும் காப்பாற்றுதற்கு, என் னை அல்லாமல்-என்னை யன்றி, ஒருவர் உண்டோ - வேறொ ருவருளரோ, பகாய்-சொல்லக்கடவை, என-என்று (மனம்) கூற, அறிவு - அறிவானது, அக்கணமே - அந்த க்ஷணமே, அதிசயித்து-ஆதிசயங் கொண்டு, உரைக்கும் - சொல்லாநின்

றது, (எப்படியெனின்) மலரில்மணமாக - மலரில்மணம் போல, எங்கும் - எவ்விடத்தும், புக்கி - புகுந்து, உயிர்களை க்காக்க - உயிர்களைக் காப்பாற்றுதற்கு, இறை இருப்பது, இறைவனொருவனிருப்பதை, அறியாமல்-உணராமல், புகல்கின்றாயே - சொல்லுகின்றனையே, எ-று.

(பொ-ரை.) தந்திரமாகவும் மிகவும் சாமர்த்திய மாகவும் சொன்னாய், எனது குடும்பத்தை வளமாகவும் பக்குவமாகவும் காப்பாற்றுதற்கு என்னையன்றி வேறொருவருளரோ சொல்லக்கடவை என்று மனம் கூற, அறிவானது அந்த க்ஷணமே அதிசயங் கொண்டு சொல்லாநின்றது, எப்படியெனின், மலரில் மணம்போல எவ்விடத்தும் புகுந்து உயிர்களைக் காப்பாற்றுதற்கு இறைவனொருவ னிருப்பதை யுணராமல் சொல்லுகின்றனையே.

(வி-ரை.) பக்குவமாய் - பத்திரமாய், பகர்தல் - சொல்லுதல். உயிர்களைக்காக்க இறைவ னொருவனுள னென்பதை 'எவ்வுயிருங்காக்க வொருவீசனுண்டோ வில்லையோ, வவ்வுயிரில் யானொருவனல்லவோ, வவ்வி, யருகுவது கொண்டிங்கலைவதேனன்னே, வருகுவதுதா னேவரும்'' என்னும் திருவள்ளுவதேவர் திருவாக்கானுமுணர்க.

கோபுரத் திலமைத்துவைத்த பொற்பாவை
கோபுரந்தோட் கொண்டு தாங்கிச்
சோபமுற்ற தெனக் கூனியிருப்ப தொக்கு
நெஞ்சே சொன்னீர்மை
தாபரத் தோடேனையமற்று யிர்களையுங்
காத்து நிலைச்சார்பு நல்கத்
தீபவொளியெனத்தே சோமய மிருப்ப
[illegible]றியாமற் றிகைக்கின்றாயே.

(ப-ரை.) கோபுரத்தில் - கோபுரத்தின்மேல், அமைத்து வைத்த-அமைக்கப்பட்டிருக்கிற, பொன்பாவை - அழகியபது

மையானது, கோபுரம் - அந்தக் கோபுரத்தை, தோள்கொண் டுதாங்கி - தன்தோள்வலியால் சுமந்து, சோபம் உற்றதனை- தளர்வடைந்ததுபோல, கூனியிருப்பது ஒக்கும் - வளைந்திரு ப்பதை யொக்கும், நெஞ்சே - மனமே, நீ சொன்னநீர்மை - நீ சொன்னதன்மை, தாபரத்தோடு - தாபரவுயிர்களோடு, ஏனையமற் றுயிர்களையும் - வேறாகிய மற்றையுயிர்களையும், கா த்து - காப்பாற்றி, நிலைசார்புநல்க - இன்பநிலையும் ஆதரவை யும் அருள்செய்வதற்கு, தீபவொளியென - தீபப்பிரகாசம் போல, தேசோமயம் இருப்பது - தேசோமயமாகிய கடவு ளிருப்பதை, அறியாமல் - உணராமல், திகைக்கின்றாயே - நீ பிரமிக்கின்றனையே, எ-று.

(பொ-ரை.) கோபுரத்தின் மேல் அமைக்கப்பட்டிருக்கிற அழகிய பதுமையானது அந்தக் கோபுரத்தைத் தன்தோள் வலியால் சுமந்து தளர் வடைந்ததுபோல வளைந்திருப்பதை யொக்கும் மனமே நீ சொன்னதன்மை. தாபர வுயிர்களோடு வேறாகிய மற்றவுயிர்களையும் காப்பாற்றி இன்பநிலையையும் ஆதரவையும் அருள் செய்தற்குத் தீபப்பிரகாசம் போலத் தே ஜோமயமாகிய கடவுளிருப்பதை யுணராமல் நீ பிரமிக்கின்ற னையே.

(வி-ரை.) சோபம்—தளர்வு. தாபரம்—அசரவுயிர்கள், அவை மரம்செடி கொடிமுதலாயின. நல்குதல் - அருள்செய்தல். தேசோமயம் - ஒளியுருவாகிய கடவுள். தாபரத்தோடு ஏனை யுயிர்களையுங் காக்கத்தேஜோமயக் கடவுளுண்டென்பதை "அத்திமுதலெறும் பீறானவுயிரத்தனைக்குஞ், சித்தமகிழ்ந்த ளிக்குந்தேசிகன், முற்றவே, கற்பித்தான் போனானோ காக் கக்கடனிலையோ, வற்பனேவன்னையரன்" என்றுமுன்னோரும் கூறியுள்ளார்.

பருத்த மலைக்குட் டேரையுண்டாக்கி
யாகாரம் பருக நல்கி

வருத்தமறக் காத்தளிக்கு நிட்களமுன்
குடும்பமதை வளர்க்கு மென்று
கருத்தினினைந் திருக்காமற் காசினியி
லையுறவாற் கலங்கிநொந்து
செருச்செய்வோர் போலடர்ந்த துயர்க்காளு
யென்றிடவே செப்பு நெஞ்சம்.

(பதவுரை.) பருத்தமலைக்குள்-பெருத்தமலைக்கல்லுக்குள்ளே, தேரை உண்டாக்கி - தேரையைப்படைத்து, (அது) ஆகாரம் பருகால்கி - உணவையுண்ணக்கொடுத்து, வருத்தம் அற - துன்பமில்லாமல், காத்து அளிக்கும் - காத்து ரக்ஷிக்கிற, நிட்களம் - நிஷ்களப்பொருளானது, உன் குடும்பமதை வளர்க்கும் என்று - உன்குடும்பத்தையும் காப்பாற்றுமென்று, கருத்தில் நினைத்து இருக்காமல் - மனத்தில் நினைத்திராமல், காசினியில் - இவ்வுலகத்தில், ஐயுறவால் - சந்தேகபுத்தியால், கலங்கி நொந்து - கலக்கமடைந்து வருந்தி, செருசெய்வோர்போல் - போர் செய்வோர்போல, அடர்ந்த - நெருங்கின, துயர்க்கு ஆளாய் - துன்பத்துக்காளாளுய், என்றிட - என்று அறிவுகூற, நெஞ்சம் செப்பும் - மனம் சொல்லாநின்றது, எ-று.

(பொ-ரை.) பெருத்த மலைக்கல்லுக்குள்ளே தேரையைப் படைத்து அது உணவையுண்ணக்கொடுத்துத் துன்பமில்லாமல் காத்து ரக்ஷிக்கிற நிஷ்களப்பொருளானது உன் குடும்பத்தையும் காப்பாற்றுமென்று மனத்தில் நினைத்திராமல், இவ்வுலகத்தில் சந்தேக புத்தியால் கலக்கமடைந்து வருந்திப் போர்செய்வோர்போல நெருங்கின துன்பத்துக் காளாளுய் என்று அறிவுகூற மனம் சொல்லாநின்றது.

(வி-ரை.) தேரை - கல்லுக்குள்ளிருக்கிற ஓர்வகைத்தவளை. பருத்தமலைக்குள் தேரையுண்டாக்கி, ஆகாரம் பருகால்கி வருத்தமறக்காத்தளிக்கும் நிட்களம் என்பதை "கருப்பைக்

குண்முட்டைக்குங் கல்லினுட்டேரைக்கும், விருப்புற்றமுத ளிக்கு மெய்யன், உருப்பெற்று, ஹட்டிவளர்க்கானே வோ கெடுவாயன்றுய் கேள், வாட்டமுனக்கேன் மகிழ்" என்றுமே லோரும் கூறியுள்ளார். ஐயுறவு - சந்தேகம். செரு - தண்டை. அடர்ந்த என்பதற்கு மிகுந்த எனப்பொருள் கூறினும் பொருந்தும்.

எனேயடுத்த பேர்களுக்கா வேதமுற்று
　வருந்துவதை யிகழ்ந்தீர் மெத்த
கனதனத்தை யுடையோரை யடுத்தவரா
　லியான்பிழைக்கக் கருத்திலுற்றுத்
தினமலேந்தே னென்கின்ற நெஞ்சமதைக்
　குறித்தறிவு செப்புமுன்றன்
இனமதெலாஞ் சுத்தமுற வெதுவுரைத்துந்
　தெரிந்திலேயே யேழை நெஞ்சே.

(ப-ரை.) எனை அடுத்தபேர்களுக்கா - என்னையண்டின பேர்களுக்காக, ஏதம் உற்று வருந்துவதை - துன்பமடைந்து வருந்துவதை, இகழ்ந்தீர் - அவமதித்தீர், மெத்த - மிகுதியாக, கனதனத்தை உடையோரை - பெரும்பொருளுடையோரை, அடுத்தவரால் - அண்டினபேர்களால், யான் பிழைக்க - யான் பிழைக்கும்படி கருத்திலுற்று-மனத்திலெண்ணி தினம் அலேந்தேன் என்கின்ற - நாள் தோறும் அலேந்தேனென்கிற, நெஞ்சமதைக்குறித்து - மனதைக்குறித்து, அறிவுசெப்பும்-அறிவானது சொல்லுகின்றது, (எப்படியெனின்) உன்றன் இனமதெலாம் சுத்தமுற - உன் இனத்தாரெல்லாரும் பரிசுத்தமடைய, எது உரைத்தும் - எந்த நன்மையைச சொன்னலும், தெரிந்திலேயே - அறிந்தாயில்லேயே, ஏழை நெஞ்சே - அறியாமையுடைய மனமே. எ-று.

(பொ-ரை) என்னையண்டின பேர்களுக்காகத் துன்பமடைந்து வருந்துவதை அவமதித்தீர், மிகுதியாகப் பெரும்பொ

ருளுடையோரை அண்டினபேர்களால் யான் பிழைக்கும்படி மனத்திலெண்ணி நாள் தோறும் அலைந்தேனென்கிற மனத்தைக்குறித்து அறிவானது சொல்லுகின்றது (எப்படியெனின்) உன் இனத்தாரெல்லாரும் பரிசுத்தமடைய எந்த நன்மையைச் சொன்னாலும் அறிந்தாயில்லையே அறியாமையையுடைய மனமே.

(வி-ரை) தாய்தந்தை புத்திர மித்திரகளத்திராதியர் யாவரும் பொய்யுறவினராதலின், அவர்கள்பொருட்டுவருந்துவதை அறிவு இகழ்ந்து கூறியதை "ஊருஞ்சதமல்ல வுற்றார் சதமல்லவுற்றுப்பெற்ற, பேருஞ்சதமல்ல பெண்டீர் சதமல்ல பிள்ளைகளுஞ், சீருஞ்சதமல்ல செல்வஞ்சதமல்ல தேசத்திலே, யாருஞ்சதமல்ல நின்றாள் சதங்கசசியேகம்பனே" என்னும் பட்டினத்துப்பிள்ளையார் திருவாக்காலுணர்க. ஏதம் - துன்பம், தனம் - செல்வம், குறித்து - சுட்டி 'இனமதெலாஞ் சுதகமுற, என்றது - சந்ததியெல்லாம் பரிசுத்தமடைந்து வீடுபெறும்பொருட்டு என்றபடி.

மன்னுமெழிற் பசுங்கிள்ளை யிலவதனைக்
காத்துமனமலைந்த தென்னப்
பொன்னுடையோர் தமைக்காத்துப் புல்லறிவோ
ரலைந்துலைந்து போவர்நாளும்
தன்னிகரிலாவறிவோர் சற்குருவின்
பதம்போற்றித் தனித்தானந்த
இன்னமுதமுண்பரென வறிவிரைக்க
நெஞ்சமினியேங்கக்கூறும்.

(ப-ரை.) மன்னும் எழில் - நிலைபெற்ற அழகையுடைய, பசுங்கிள்ளை - பசசை நிறமுள்ள கிளியானது, இலவதனைக் காத்து - இலவமரத்தைக்காத்து, மனம் அலைந்தது என்ன - மனம் வாடினதுபோல, பொன் உடையோர் தமைகாத்து - பொருளுடையோரைக்காத்து, புல்லறிவோர் - அற்ப அறி

வினையுடையவர், அலைந்து உலைந்துபோவர் - திரிந்து கெட்டுப்போவார்கள், நாளும் - எந்நாளும், தன்நிகர் இல்லா அறிவோர் - தனக்கு நிகரில்லாத அறிவுடையோர், சற்குருவின் பதம்போற்றி - சதாசாரியனுடைய திருவடியை வணங்கி, தனித்த ஆனந்தம் - ஒப்பற்ற ஆநந்தமாகிய, இன் அமுதம் உண்பர் என -இனிமையாகிய அமிர்தத்தை யுண்பாரென்று, அறிவு உரைக்க - அறிவானது சொல்ல, நெஞ்சம் - மனமானது, இனி - இதற்குமேல், எங்கிக்கூறும் - ஏக்கமடைந்து சொல்லாநின்றது, எ-று.

(பொ-ரை.) கிலைபெற்ற அழகையுடைய பச்சை நிறமுள்ள கிளியானது இலவமரத்தைக்காத்து மனம் வாடினதுபோலப் பொருளுடையோரைக் காத்துஅற்ப அறிவினையுடையவர் திரிந்து கெட்டுப்போவார்கள். எந்நாளும்தனக்கு நிகரில்லாத அறிவுடையோர் சதாசாரியனுடைய திருவடியை வணங்கி, ஒப்பற்ற ஆநந்தமாகிய இனிமையுள்ள அமிர்தத்தை யுண்பாரென்று அறிவானது சொல்ல மனமானது இதற்குமேல் ஏக்கமடைந்து சொல்லாநின்றது.

(வி-ரை.) இலவதனைக்காத்துமனமலைதலாவது - இலவம்பழத்னைநோக்கி இது அழகாயிருக்கின்றதே, இதன் உள்ளீடுமிகவும் இன்சுவையுள்ளதாயி ருக்குமென்றெண்ணிக் காத்திருந்த கிளிகள், அப்பழம் வெடித்தவுடனே அதிலிருந்த பஞ்சு வெளிப்பட்டுக் காற்றிற் பறப்பதை நோக்கி மனம்வருந்துதல். இம்மியளவும் ஈயாத உலோபராயிருந்தாலும் பொன்னுடையோரைக் காத்துப் புல்லறிவோர் அலைந்துலைந்துபோவர் என்பதை "என் சொலினும், கைத்துடையான் காற்கீ ழொதுங்குங் கடன் ஞாலம், பித்துடையதல்லபிற" என்னும் சிவப்பிரகாச சுவாமிகள் திருவாக்கானுணர்க. ஆநந்தம் - பிரமாநந்தம். இன்சுவையிற் சிறந்தது அமிர்தமென்பதை எல்லாருமறிவரன்றே, அப்படியிருக்க அதற்கு இன் என்னும் அடைகொடுத்தார் அந்த அமிர்தத்தின் சுவையினும் பிரமாநந்தசுசுவை சிறந்ததென்பதை வற்புறுத்தற்கென்க.

பொருளுடைய வேந்தர்தமை யடுப்பதனை
யிகழ்ந்தீரியான் புசிப்பதற்கே
அருளுடனல்லன்னமது நல்குவாரா
ரெனநெஞ்ச மறைந்தகாலை
உரமறிந்தாயில்லைவன விலங்கினுக்கும்
பறவைமுத லுயிர்கட்கெல்லாம்
பருகவுணவருளுமந்த நிலையறியா
யென்றறிவு பகருமன்றே.

(ப-ரை) பொருள் உடைய - செல்வத்தையுடைய, வேந்தர்தமை அடுப்பதனை - அரசரையண்டிவாழ்வதை, இகழ்ந்தீர் - அவமதித்தீர், யான் புசிப்பதற்கே - நான் உண்பதற்கே, அருளுடன் - அன்போடு, நல் அன்னமது - நல்ல அன்னத்தை, நல்குவர் ஆர் - கொடுப்பவர் யார், என - என்று, நெஞ்சம் அறைந்த காலை - மனம் சொன்னபோது, உரம் அறிந்தாயில்லை - மெய்யறிவைப்பெற்றாயில்லை, வனவிலங்கினுக்கும், காட்டுமிருகங்களுக்கும், பறவை முதல் உயிர்கட்கு எல்லாம் - பறவை முதலாகிய உயிர்களுக்கெல்லாம், பருக - உண்ண - உணவு அருளும் - உணவைக்கொடுக்கிற, அந்தநிலை அறியாய் என்று - அந்தக்கடவுளின் செயலையறியமாட்டாய் என்று, அறிவுபகரும் - அறிவானது சொல்லாநின்றது எ-று.

(பொ-ரை) செல்வத்தையுடைய அரசரையண்டி வாழ்வதையவமதித்தீர் நான் உண்பதற்கே அன்போடு நல்ல அன்னத்தைக் கொடுப்பவர் யார் என்று மனம் சொன்னபோது, மெய்யறிவைப் பெற்றாயில்லை காட்டுமிருகங்களுக்கும் பறவை முதலாகிய உயிர்களுக்கெல்லாம் உண்ண உணவைக்கொடுக்கிற அந்தக் கடவுளின் செயலையறியமாட்டாய் என்று அறிவானது சொல்லாநின்றது.

(வி-ரை.) வனவிலங்கு பறவைமுத லுயிர்கட்கெல்லாம் பருகவுணவருளுமந்த நிலையறியாயென்பதனை, "அத்தி முத

லெறும் பிறனுயிரத்தனைக்குந், சித்தமகிழ்ந்தளிக்குந் தேசி கன், முற்றவே, கற்பித்தான் போறுனே காக்கக் கடனிலை யோ, அற்பனேனுவன்றுயரான்" என்றுமேலோர் கூறியுள்ளார் உரம் - அறிவு, (ஞானம்) "உரனென்னுந் தோட்டியானே ரைந்துங் காப்பான், வரனென்னும் வைப்புக்கோர்வித்து" என்ற விடத்தும் உரம் இப்பொருள் தருதல் காண்க.

அரவுதனக் கமுதளித்துவளர்த்துமுல
குயிர்தனக்கு மன்பாயன்னம
பருகவருள்புரிந்து கடற்பலவுயிர்க்கு
முணவருளிப் பண்பாய்நின்று
தருநெருங்கும் பருவனத்தின் மரந்தனக்குந்
தாரகமாய்த் தண்ணீர்நல்கி
அருமையொடுவளர்த்திடு நற்பொருளிருக்க
வுழன்றனையே யலையுநெஞ்சே.

(ப-ரை) அரவுதனக்கு - பாம்புக்கு, அமுது அளித்து வளர்த்தும் - உணவுகொடுத்து வளர்த்தும், உலகு - உலகத்திலுள்ள, உயிர்தமக்கும் - உயிர்களுக்கும், அன்னம்பருக - அன்னமுண்ணும்படி, அன்பாய் - அன்போடு, அருள்புரிந்து - அருள்செய்து, கடல் - சமுத்திரத்திலுள்ள, பலவுயிர்க்கும் - பலவுயிர்களுக்கும், உணவு அருளி - ஆகாரந்தந்து, பண்பாய்நின்று - அருட்குணத்தோடு நிலைபெற்று, தருநெருங்கும் - மரங்கள் நெருங்கிய, பருவனத்தின் - பெருங்காட்டிலுள்ள, மரந்தனக்கும்-விருட்சங்களுக்கும், தாரகமாய் - ஆதரவாய், தண்ணீர் நல்கி - தண்ணீர்கொடுத்து, அருமையோடு வளர்த்திடும்-அருமையுடன் வளர்க்கின்ற, நல்பொருள் இருக்க - நன்மையாகிய பரம்பொருள் ஒன்றிருக்க, (அப்பொருளை நம்பியிராமல்விட்டு) அலையும் நெஞ்சே - அலையுமியல்புள்ளமனமே! உழன்றனையே - நீவீணே வருந்தினையே, எ-று.

(பொ-ரை) பாம்புக்குப் பால்வார்த்து வளர்த்தும் உலகத்திலுள்ள உயிர்களுக்கும் அன்னமுண்ணும்படி அன்போடு அருள்செய்து சமுத்திரத்திலுள்ள பலவுயிர்களுக்கும் ஆகாரங்கந்து அருட்குணத்தோடு நிலைபெற்று மரங்கள் நெருங்கிய பெருங்காட்டிலுள்ள விருட்சங்களுக்கும் ஆதாரவாய்த் தண்ணீர்கொடுத்து அருமையுடன் வளர்க்கின்ற நன்மையாகிய பரம்பொருள் ஒன்றிருக்க (அப்பொருளை நம்பியிராமல்விட்டு) அலையுமியல்புள்ள மனமே நீ வீணே வருந்தினையே.

(வி-ரை.) உலகுயிர், என்றது உலகிலுள்ள மக்களுயிரை. அன்னம்பருகவருள்புரிந்து, என்றதனால் அன்னமுண்பதற்குரிய மக்களுயிரெனவேண்டிற்று. கடற்பலவுயிர், என்றது மீன்முதலியவற்றை, இவை சலசரம் எல்லாவுயிர்களையும் காப்பாற்றுங்குணமிருப்பதனால் இறைவனை நற்பொருள்என்றார்.

முட்டையினுட் குஞ்சினுக்குமமுதீந்து
வளர்த்துமொய்த்த தளிர்க்குச்சாயந்
திட்டமுடனிட்டு வளர்தெங்கினுக்கு
ணீரருளிச்சேணீர் மீனின்
குட்டிதனக்குள் ளிருக்குமட்டனக்குக்
கூர்மைதனைக் கொடுத்துமோன
வெட்டவெளியாயபரஞ் சுடரிருக்க
வீணாமெலிந்தாய் நெஞ்சே.

(ப-ரை.) முட்டையினுள் - முட்டைக்குளிருக்கிற, குஞ்சக்கும் - குஞ்சுக்கும், அமுது ஈந்துவளர்த்து - உணவுதந்து வளர்த்து, மொய்த்த தளிர்க்கு - நெருங்கின தளிர்களுக்குச் சாயம் - நிறத்தை, திட்டமுடன் இட்டு - திட்டமாய் அமைத்து, வளர் தெங்கினுக்குள் நீர் அருளி - வளராநின்ற தென்னங்காய்க்குள்ளே நீரையமைத்து, சேண்நீர் மீனின் - ஆழ்ந்த நீரிலுள்ள மீனினது, குட்டி தனக்கு உள் இருக்கும் -

குட்டிக்குள்ளேயிருக்கிற, முள் தனக்கு - முள்ளுக்கு, கூர் மைதனைகொடுத்து - கூர்மையையுண்டாக்கி, மோனவெட்ட வெளியாய - மோனமயமான பரமாகாச வடிவமாயுள்ள - பரம்சுடர் இருக்க - பரஞ்சுடராகிய கடவுளிருக்க, வீணை - வீணாய், மெலிந்தாய் - இளைத்தாய், நெஞ்சே - மனமே, எ-று.

(பொ-ரை.) முட்டைக்குளிருக்கிற குஞ்சுக்கும் உணவு தந்து வளர்த்து நெருங்கின தளிர்களுக்கு நிறத்தைத் திட்டமாய் அமைத்து வளராநின்ற தென்னங்காய்களுக்குள்ளே நீரையமைத்து ஆழ்ந்த நீரிலுள்ள மீனினது குட்டிக்குள்ளேயிருக்கிற முள்ளுக்குக்கூர்மையை யுண்டாக்கி மோனமயமான பரமாகாசவடிவமாயுள்ள பரஞ்சுடராகிய கடவுளிருக்க வீணாய் இளைத்தாய் மனமே.

(வி-ரை) "கருப்பைக்குண் முட்டைக்குங் கல்லினுட்டேரைக்கும், விருப்புற்றமுதளிக்குமெய்யன்" என்று ஆன்றோர் கூறியபடி இவ்வாசிரியரும், "முட்டையினுட் குஞ்சினுக்குமமுதீந்துவளர்த்து" என்று கூறினர். சேண் - தூரம், அது இவ்விடத்து ஆழம் எனப்பொருள் படவந்தது.

கரையற்றவுவராழி காசினியைக்
காக்கவைத்துக் காரின்கூட்டம்
விரைவாகப் பொழிந்துலாது செழித்திடவே
யமைத்துவைத்து வெளியினித்தம்
இரவிமதிசுதியாறு தில்ங்கவைத்து
மலப்பிற்றவிருக்குங் கூட்டிற்
பரிவாகவைம்பூதம் வாழவைத்த
பொருளிருக்கப் பயமென்னெஞ்சே.

(ப-ரை.) கரையற்ற - கரையில்லாத, உவர் ஆழி - உப்பு நீர்க்கடலே, காசினியைக் காக்கவைத்து - உலகத்தைக் காக்கும்படி நியமித்து, காரின் கூட்டம் - மேகக்கூட்

டம், விரைவாக - சீக்கிரமாக, பொழிந்து - பெய்து, உலகு செழித்திட - உலகஞ்செழித்திட, அமைத்துவைத்து - ஏற்படுத்திவைத்து, வெளியில் - ஆகாயத்தில், நித்தம் - நாள்தோறும், இரவிமதி - சூரிய சந்திரர்கள், கதிமாறாது - செல்லுங் கதி மாறாமல், இலங்கவைத்து - பிரகாசிக்க ஏற்படுத்தி, [illegible]ப்பீற்றல் இருக்கும கூட்டில் - மலம் நிறைந்த நவத்துவாரங் களிருக்கின்ற உடம்பில், பரிவாக - அன்பாக, ஐம்பூதம்வாழ வைத்த - ஐம்பூதங்களும் வாழும்படிஅமைத்த, பொருள் இருக்க - பரம்பொருளிருக்க, நெஞ்சே-மனமே, பயம் என்- உனக்குப்பயம் யாதுக்கு, எ-று.

(பொ-ரை.) கரையில்லாத உப்புக்கடலை யுலகத்தைக் காக்கும்படி நியமித்து மேகக்கூட்டம் சீக்கிரமாகப் பெய்து உலகஞ் செழித்திட ஏற்படுத்திவைத்து ஆகாயத்தில் நாள் தோறும் சூரிய சந்திரர்கள் செல்லுங்கதி மாறாமல் பிரகாசிக்க ஏற்படுத்தி மலம்நிறைந்த நவத்துவாரங்களிருக்கின்ற உடம்பில் அன்பாக ஐம்பூதங்களும் வாழும்படி அமைத்த பரம்பொருளிருக்க மனமே உனக்குப் பயம்யாதுக்கு.

(வி-ரை.) "உரையிறந்து பெருமைபெற்றுத திரைக்கைநீட்டி யொலிக்கின்ற கடலே யிவ்வுலகஞ்சூழக், கரையுமின்றி யுன்னை வைத்தாரியாரே யென்பேன்" என்று ஸ்ரீதாயுமான சுவாமிகள் கூறியுள்ளபடி, "கரையற்றவுவராழி காசினியைக் காக்கவைத்து" என்று கூறினர். உவர் - உப்புசசுவை யுடையது, கார் - மேகம், இது கருநிறமுள்ளதாதலால் இதற்குக் கார் என்னும் பெயரமைந்தது. கதி - நடை, ஐம்பூதம் - பஞ்சபூதங்கள், அவை - பிருதவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம் என்பன,

விந்துவெனு நீ தனையுருவாகக்
கருப்பமதில் விரும்பி காத்துத்
தந்திரயாப்புவியில் வாசத்தயவுபுரிந்

திவ்வளவுந் தனித்துக்காத்த
அந்தமிலாவிறை யிருக்கவலேகின்று
யென்றிடவே யறையும்பாசச்
சிந்தையற்றே னுதரபசிக்கென்செய்வே
னெனவறிவு செப்புமன்றே.

(ப-ரை.) விந்துவெனும் நீர் அதனை - விந்து என்கின்ற நீரை, உருவாக்கி - வடிவாக்கி, கருப்பமதில் - தாய் வயிற்றில், விரும்பி காத்து - விருப்பத்தோடு காத்தருளி, தந்திரமா - உபாயமாக, புவியில்வர - பூமியில் விழும்படி, தயவு புரிந்து - தயைசெய்து, இவ்வளவும் - இதுவரைக்கும், தனித்துக்காத்த - ஒப்பறக்காத்த, அந்தம் இல்லா - முடிவில்லாத, இறை இருக்க - இறைவனிருக்க, அலேகின்றாய் என்றிட - அலேகிறெனென்னையென்று அறிவுசொல்ல, அறையும்-இதுவரைக்கும் ▮ சொல்லிவந்த, பாசம்-உலகபாசத்திலவைத்த, சிந்தை-சிந்தையை, அற்றேன் - ஒழித்துவிட்டேன், உதரபசிக்கு - வயிற்றினெழுகின்ற பசிக்கு, என்செய்வேன் என-என்னசெய்வேனென்று மனம்கேட்க, அறிவு செப்பும் - அறிவானது சொல்லாநின்றது, எ-று.

(பொ-ரை) விந்து என்கின்ற நீரை வடிவாக்கித் தாய்வயிற்றில் விருப்பத்தோடு காத்தருளி உபாயமாகப் பூமியில்விழும்படி தயைசெய்து இதுவரைக்கும் ஒப்பறக்காத்த முடிவில்லாத இறைவனிருக்க அலேகின்றனையென்று அறிவுசொல்ல, இதுவரைக்கும் நீ சொல்லிவந்த உலகபாசத்திலவைத்த சிந்தையை ஒழித்துவிட்டேன், வயிற்றினெழுகின்ற பசிக்கு என்னசெய்வேனென்று மனம்கேட்க அறிவானது சொல்லாநின்றது.

(வி-ரை.) "ஒருமடமாது மொருவனுமாகி, யின்பசுகந்தருமன்புபொருந்தி, புணர்வுகலங்கி யொழுகியவிந்து, வூறசுரோணித மீதுகலந்து, பனியிலோர்பாதி சிறுதுளிமாது,-பண்

டியில்வந்துபுகுந்து திரண்டு, பதுமவரும்பு கமடமிதென்ற, பார்வைமெய்வாய் செவிகால்கைகளென்ற, வுருவமுமாகி" என்று பட்டினத்தடிகள் பகர்ந்துள்ளவாறு இவ்வாசிரியரும் "விந்துவெனு நீரதனையுருவாக்கி" என்று கூறினர். விந்து - நாது (வீரியம்) உதரம் - வயிறு.

காசினியிலுள்ளபல வகங்களெலாம்
வாழ்ந்திருக்கக் கருதும்வேளை
நேசமற்றபரிகலங் களிருக்கவருஞ்
சுவைக்கனிகாய் நெருங்கியோங்கும்
பாசிலையின்மரங்கடழைத் திருக்கநீர்
படர்ந்திருக்கப் பரிவாயானும்
பூசிக்கும் பாமகுருவருளிருக்கத்
தவிப்பதேனென்று புகலாய்நெஞ்சே.

(ப-ரை.) காசினியில் உள்ள-உலகத்திலுள்ள, பல அகங்கள் எல்லாம் வாழ்ந்திருக்க - பல வீடுகளெல்லாம் வாழ்ந்திருக்க, கருதும்வேளை - நினைக்கும்வேளையில், நேசம் அற்ற - யாருக்கும் விருப்பமில்லாத, பரிகலங்கள் இருக்க - பாத்திரங்களிருக்க, அருசுவை - அருமையான சுவையுள்ள, கனிகாய் - பழம் காய்களும், நெருங்கி ஓங்கும் - நெருங்கி உயர்ந்திருக்கின்ற, பா இலையின் மரஙகள்-பசிலையையுடைய மரங்கள், தழைத்து இருக்க் - செழித்திருக்க, நீர் - தண்ணீர், படர்ந்து இருக்க - எங்கும் வியாபித்திருக்க, பரிவாய் - அன்பாய், யானும் - நானும், பூசிக்கும் - பூசிக்கிற, பாமகுரு அருள் இருக்க-மேலான சற்குருவின் கருணையிருக்க, தவிப்பது என்னோ- தவிப்பதற்குக் காரணம் யாதோ, புகலாய் - சொல்லாய், நெஞ்சே - மனமே, எ-று.

(பொ-ரை.) உலகத்திலுள்ள பலவீடுகளெல்லாம் வாழ்ந்திருக்க நினைக்கும்வேளையில் யாருக்கும் விருப்பமில்லாத பாத்திரங்களிருக்க அருமையான சுவையுள்ள பழம் காய்களும்

நெருங்கி உயர்ந்திருக்கின்ற பசிலேயையுடைய மரங்கள் செழித்திருக்கத் தண்ணீர் எங்கும் வியாபித்திருக்க அன்பாய் நானும் பூசிக்கிற மேலான சற்குருவின் கருணையிருக்க நீதவிப்பதற்குக் காரணம் யாதோ சொல்லாய் மனமே.

(வி-ரை) உலகில் நமக்கெல்லாச் செல்வங்களும் அவற்றைக்கொடுக்கச் சிவனுமிருக்க, நெஞ்சே! நீயேன் கவலையுற்றனையென்று அறிவுகூறியது. இக்கருத்தையே ஸ்ரீ பட்டினத்தடிகளும், "உடுக்கக் கவிக்கக் குளிர்காற்று வெய்யிலொதுங்கி வந்தாற், றடுக்கப்பழைய வொரு வேட்டியுண்டு சகமுழுதும், படுக்கப் புறந்திண்ணையெங்கெங்குமுண்டு பசித்துவந்தாற், கொடுக்கச் சிவனுண்டு நெஞ்சே நமக்குக் குறைவில்லையே" என்று கூறியுள்ளனர். நேசமற்ற பரிகலங்கள் - ஒருவர்க்கும் விருப்பமில்லாத பாத்திரங்கள், அவை - உடைந்து குப்பைமேட்டிலெறியப் பட்டிருக்கிற மட்கலங்கள். அருஞ்சுவை - மதுரசசுவை, பரிவு - அன்பு.

அத்துவிதப்பரம குருவருளிருக்கப்
பொருளிருக்க வன்பாயாமுஞ்
சுத்தமுறவுடுத்து தற்குவிரத்தியெனுந்
தூசிருக்கத் துயில்வதற்கே
அத்தமுடையோரமைத்த புறந்திண்ணை
பலவிருக்க வகிலந்தன்னில்
எத்தகைமைச்சாதியினு மிரந்துண்ணத்
துணியிருக்க விளைப்பதென்னே.

(ப-ரை.) அத்துவிதம் - துவிதபாவனையற்ற, பரமகுரு - மேலான குருநாதனது, அருள் இருக்க - கருணையிருக்க, பொருள் இருக்க - அருளாகிய பொருளிருக்க, அன்பாய் - அன்போடு, யாமும் - நாமும், சுத்தம் உற - பரிசுத்தம்பொருந்த, உடுத்துதற்கு - உடுப்பதற்கு, விரத்தி என்னும் தூசு இருக்க - வைராக்கியமென்கின்ற ஆடை இருக்க, துயில்வதற்கு-

தூங்குவதற்கு, அத்தம் உடையோர் - பொருளுடையோர், அமைத்த - கட்டிவைத்த, புறந்திண்ணை பல இருக்க - புறந்திண்ணைகள் அநேகமாகவிருக்க, அகிலம் தன்னில் - இவ்வுலகத்தில், எத்தகைமைச் சாதியினும்-எவ்வகைப்பட்ட சாதிகளிலும், இரந்து உண்ண-யாசித்து உண்ணுதற்கு, துணிவு இருக்க - தைரியமிருக்க, இளைப்பது என்றோ - (மனமே நீ)இளைப்பதற்குக் காரணம்யாதோ, எ-று.

(பொ-ரை) துவித பாவனையற்ற மேலான குருநாதனது கருணையிருக்க அருளாகிய பொருளிருக்க அன்போடு நாமும் பரிசுத்தம்பொருந்த உடுப்பதற்கு வைராக்கிய மென்கின்ற ஆடையிருக்கத் தூங்குவதற்குப் பொருளுடையோர் கட்டிவைத்த புறந்திண்ணைகள் அநேகமாகவிருக்க இவ்வுலகத்தில் எவ்வகைப்பட்ட சாதிகளிலும் யாசித்து உண்ணுதற்குத் தைரியமிருக்க (மனமே நீ) இளைப்பதற்குக் காரணம் யாதோ.

(வி-ரை) புறந்திண்ணைப்படுக்கையும் இரந்துண்ணும் வாழ்க்கும் மேலான செல்வமாகையால் இவ்வாசிரியர் இங்ஙனங் கூறினார். "கறையற்றபல்லுங் கரித்துணியாடையுங் கள்ளமின்றிப், பொறையுற்ற நெஞ்சமும் பொல்லாதவூணும் புறந்திண்ணையுந், தறையிற் கிடப்பு மிரந்துண்ணுமோடுஞ் சகமறியக், குறைவற்ற செல்வமென்றே-கோலமாமறை கூப்பிடுமே" என்று திருவெண்காட்டடிகளுங் கூறியுள்ளார். விரத்தி - விருப்பின்மை, தூசு - ஆடை, அத்தம் - பொருள், புறந்திண்ணை - வெளித்திண்ணை, துணிவு-தைரியம்.

திருவோடாந்தியிருக்கத் திசைப்படுதென்றோ
வென்றிடத்தீஞ் சுவையாயன்னம்
பரிவாகவீகுவரோ வெனச்சுவைக
ளுவளவே பண்புற்பப்பால்

விரைவாகவசக்கியமா மல மாவ
தறிந்திலேயோ வெனவேவண்ணம்
பிரிவானபேதமுள தெனவறிவு
மையமறப் பேசுமன்றே. (45)

(ப-ரை) திருவோடுஆம்நிதிஇருக்க - திருவோடாகிய செல்வமிருக்க, திகைப்பதுஎன்னே - நீதிகைப்பதற்குக் காரணம யாதோ, என்றிட - என்றுஅறிவுசொல்ல, தீசுவையாம் - இனியசுவையோடுகூடிய, அன்னம் - சோற்றை, பரிவாக - அன்பாக, ஈகுவரோ-உலகத்தாரிடுவோர்களோ, என-என்று மனம்கேட்க, சுவைகள் - அறுசுவைகளும், நாஅளவே - நாவின்வரைக்குமே, பண்புற்று - இன்சுவையாயிருந்து, அப பால் - அதற்குமேல், விரைவாக - சீக்கிரமாக, அசக்கிய மாம் - அருவருக்கத்தகுந்ததாகிய, மலம்ஆவது - மலரூபமாவதை, அறிந்திலேயோ - நீஅறிந்தாயில்லேயோ, என - என்று அறிவுகூற, வண்ணம் - உடம்பின்நிறமானது, பிரிவானபேதமுளது-பலவகையாகிய வேறுபாடுடையதாகின்றது, என-என்றுமனங்கூற, அறிவும் - அறிவானதும், ஐயம் அற-மனத்தின் சந்தேகம் நீங்கும்படி, பேசும் - (அடியில்வருமாறு) சொல்லாநின்றது, எ-று.

(பொ-ரை,) திருவோடாகிய செல்வமிருக்க நீதிகைப்பதற்குக் காரணம்யாதோஎன்று அறிவுசொல்ல இனியசுவையோடு கூடியசோற்றை அன்பாக உலகத்தாரிடுவோர்களோ என்று மனம் கேட்க, அறுசுவைகளும் நாவின்வரைக்குமே இன்சுவையாயிருந்து அதற்குமேல் சீக்கிரமாக அருவருக்கத்தகுந்ததாகிய மலரூபமாவதை நீ அறிந்தாயில்லேயோ என்று அறிவுகூற உடம்பின் நிறமானது பலவகையாகிய வேறுபாடுடையதாகின்றது என்று மனங்கூற அறிவானதும் மனத்தின் சந்தேகம் நீங்கும்படி அடியில் வருமாறு சொல்லாநின்றது.

(வி-ரை,) திருவோடு-பிக்ஷாபாத்திரம், "ஆதரித்தனை குளகிருதா தியடிசிலைக்கூழ்காடி, யேதுபெற்றிடினும் புசித்தாற் பசியேகலுஞ் சமித்தற்றால், பேதமற்றெலாமலமதாதலுஞ் • சரியென்றிடிற்பினை நெஞ்சே, நீதரித்திலாதவைவிழைந்துழல்வதென்னிமலனை நினையாதே " நல்ல வறுசுவையு நாவினுனிமாத்திரமே, மெல்லவிருவிரலாம்வேறில்லை, மெல்ல, இருவிரலைத்தான்கடக்க மாட்டாதநெஞ்சே, பொருகட்லைத் தான்கடப்பாய்போய்" என்றற் றொடக்கத்தனவற்றின் கருத்தையடக்கி, 'சுவைகளுவளவே பண்புற்றப்பால், விரைவாகவசக்கியமா மலமாவதறிந்திலையோ' என்றார்.

சாதிதனிலுயர்ந்தோர்க ளுடலன்ன
 மயமென்னிற் றாழ்ந்தோர்க்கந்த
நீதியா மலது சயிதன்னியமென்
 றிடிலதுவாய் நிற்குமென்னிற்
பேதமுறுமோ கனகபாத்திரத்து
 நீரினிலேபிரதி தோன்றுஞ்
சோதிகதிரவன்வேறோ வங்கணத்திற்
 பிரதியுற்ற சுடர்தான்வேறோ. (46)

(ப-ரை.) சாதிதன்னில் உயர்ந்தோர்கள் - குலத்தினுயர்ந்தோர்களுடைய, உடல் - உடம்பானது, அன்னமயம் என்னின் - அன்னமயமாம் என்றால், தாழ்ந்தோர்க்கு - குலத்தினிழிந்தோர்களுக்கும், அந்தநீதியாம் - அந்தமுறைமையேயாகும், அல்லது - இவ்வாறல்லாமல், சைதன்னிய மென்றிடில் - அவ்வுயர்ந்தோரிடத்தில் அறிவு ஒருபடியே இருக்குமென்றால், அதுவாய் நிற்கும் - தாழ்ந்தோரிடத்தும் அப்படியே இருக்கும், என்னில் - இப்படியாகுமிடத்தில், பேதம் உறுமோ-உயர்ந்தோர் தாழ்ந்தோர்க்குள்ளே யிருக்கும் அறிவு வேற்றுமைப்படுமோ, கனகபாத்திரத்து - பொற்பாத்திரத்து

ள்ள, நீரினிலே - நீரிலே, பிரதி தோன்றும் - பிரதிபிம்பிக்கிற, சோதி - ஒளியையுடைய, கதிரவன் - ன் யரிகு, வேறோ - வேருவனோ, அங்கணத்தில் - ஜலதாரையில், பிரதியுற்ற பிரதிபிம்பித்த, சுடர்தான - சூரியன்தான், வேறோ - வேருவனோ, (நீ சொல்வாய்) எ-று.

(பொ-ரை.) குலத்தினுலுயர்ந்தோர்களுடைய உடம்பானது அன்னமயமாம் என்றால் குலத்தினு விழிந்தோர்களுக்கும் அந்த முறைமையேயாகும். இவ்வாறல்லாமல் அவ்வுயர்ந்தோரிடத்தில் அறிவு ஒருபடியே யிருக்குமென்றால் தாழுந்தோரிடத்தும் அப்படியே யிருக்கும், இப்படியாகுடடத்தில் உயர்ந்தோர் தாழ்ந்தோர்க்குள்ளே யிருக்கும் அறிவுவேற்றுமைப்படுமோ பொற்பாத்திரத்திலுள்ள நீரிலே பிரதிபிம்பிக்கிற ஒளியையுடைய சூரியன்வேருவனோ ஜலதாரையில் பிரதிபிம்பித்த சூரியன்தான் வேருவனோ நீ சொல்வாய்.

(வி-ரை.) அன்னமயம் - சோற்றுருவம், சைதந்நியம் - அறிவு, கனகம் - பொன், அங்கணம் - சலதாரை (சாக்கடை.)

கொக்குதனிற்குக்கிடந்தான் கூடியிடி
 லண்டமது குறிக்குமோசோற்
பக்குவத்திற் கடைச்சியரைப் பார்ப்பாக
 வேதியர்கள் பரிந்துகூடிற்
றக்கவிந்து தரியாதோ கடலைதனிற்
 சுடுநீர்றான் வேறுண்டோ
மிக்கவுரையாதியந்தப் பேதமுண்டோ
 வெனநெஞ்சம் விளம்புமன்றே. (47)

(ப-ரை.) கொக்குதனில் - கொக்குடனே, குக்கிடம் தான் - கோழிச்சேவல்தான், கூடி - புணர்ந்து, இடில் - இட்டால், அண்டம் - அந்தமுட்டை, அது குறிக்குமோ - அவ

மேற்றுமையைக் காட்டுமோ, சொல் - நீசொல்வாயாக, பக்குவத்தில் - பருவகாலத்தில், கடைசியரை - பள்ளப்பெண்களை, வேதியர்கள் - பிராமணர்கள், பாஙகாக பரிந்துகூடின் - நன்றாக அன்போடு புணர்ந்தால், தக்க - தகுதியாகிய, விந்து தரியாதோ-அந்தவிந்து தரித்துச சிசுவுண்டாகாதோ, சுடலேனாறில் - மயானததில், சுடுநாற்றந்தான் - சுடுகிறநாற்றமும், வேறுஉண்டோ - ஜாதி வேறுபாடுபோல வேறுபாடுண்டாயிருக்குமோ, மிக்கஉரை--மேலாகியபேசசுகளின், ஆதி அந்தம - முதல் முடிவுகளில், பேதம்உண்டோ - வேறுபாடுண்டோ, என - என்று அறிவு சொல்ல, (அதற்குவிடையாக) நெஞ்சம் விளம்பும் - மனம் சொல்லும், எ-று.

(பொ-ரை,) கொக்குடனே கோழிசசேவல்தான் புணர்ந்து இட்டால் அந்த முட்டை அவவேற்றுமையைக் காட்டுமோ நீ சொல்வாயாக. பருவகாலத்தில் பள்ளப்பெண்களைப் பிராமணர்கள் நன்றாக அன்போடு புணர்ந்தால் தகுதியாகிய அந்தவிந்து தரித்துச சிசுவுண்டாக்காதோ? மயானத்தில் சுடுகின்ற நாற்றமும் ஜாதிவேறுபாடுபோலவேறுபாடுண்டாயிருககுமோ மேலாகிய பேசசுகளின் முதல்முடிவுகளில் வேறுபாடுண்டோ என்று அறிவுசொல்ல அதற்கு விடையாக மனஞ் சொல்லும்

(வி-ரை,) கொக்கு - ஒர்பறவை, குக்குடம் - கோழி, அண்டம் - முட்டை, குறித்தல் - காட்டுதல், கடைசியர் - பள்ளப்பெண்கள்.

புலன்பொறிகள் வேண்டிபதற்காசையுற்றே
னெனவறிவு புகலுந்தும்பி
மலெந்துமிக நாசியினுன்மான்காதி
னுன்மீன்கள் வாயினுனும
அலர்த்தகனற் கண்டவிட்டிற் கண்ணுனுங்
கரி பரிசமடைந்தலானும்

பலன்பெறவே நினைந்திறந்த வென்றிடவே
நெஞ்சமினி பகருமன்றே. (48)

(ப-ரை.) பொறிகள் - ஐம்பொறிகளும், புலன் - ஐம்புலன்களை, வேண்டி - விரும்பினதனால், அதற்கு - ஐம்புல நுகர்ச்சிக்காக, ஆசையுற்றேன் - ஆசைப்பட்டேன், என-என்று மனங்கூற, அறிவு-அறிவானதும், புகலும் - சொல்லாநின்றது, அமபி -வண்டானது, மிகமலைந்து - மிகவும தாக்குண்டு, நாசியினால்-கந்தத்தினாலும் மான் - மானானது. காதினால் - சத்தத்தினாலும், மீன்கள் - மச்சங்களானவை, வாயினாலும் - ரசத்தினாலும், அலர்ந்த-பரவிய, கனல்கண்ட-நெருப்பைக்கண்ட, விட்டில் - விட்டிற் பூச்சியானது, கணணாலும்-ரூபத்தினாலும், கரி-யானையானது, பரிசம அடைதலாலும் -பரிசத்தினாலும். பலன்பெற - இன்பமாகிய பயனடையும்படி, நினைந்து - எண்ணி, இறந்த - நசித்தன, என்றிட - என்றுஅறிவுகூற - இனி-அதற்குமேல, நெஞ்சம்பகரும் - மனமானது சொல்லாநின்றது. எ-று.

(பொ-ரை,) ஐம்பொறிகளும் ஐம்புலன்களை விரும்பினதனால் ஐம்புல நுகர்ச்சிக்காக ஆசைப்பட்டேன என்று மனம் கூற அறிவானது சொல்லாநின்றது வண்டானது மிகவும் தாக்குண்டு கந்தத்தினாலும் மானானது சத்தத்தினாலும் மச்சங்களானவை ரசத்தினாலும் பரவிய நெருப்பைக்கண்ட விட்டிற் பூச்சியானது ரூபத்தினாலும் யானையானது பரிசத்தினாலும் இன்பமாகிய பயனடையும்படி எண்ணி நசித்தன என்று அறிவுகூற அதற்கு மேல் மனமானது சொல்லாநின்றது.

(வி-ரை.) புலன் - சத்தம், பரிசம், ரூபம், ரசம், கந்தம் என்னும் விஷயபஞ்சகம், பொறிகள் - மெய், வாய், கண், மூக்கு, செவி, என்னும் இந்திரியபஞ்சகம். ஐம்புலவிருப்பமுள்ளவர்கள் வண்டு முதலானவைகள் போல நாசமடைவாரென்பதுகருத்து. இதற்குப்பிரமாணம், பதிபசுபாசவிளக்கம். ,,சத்தத்தா லசுணமாயும் பரிசத்தாற் றந்திமாயும், வெற்றிசே

ருருவத்தாலே விட்டிலம்பறவைமாயும், பற்றியாசிரதத்தாலே பாணிமீனினஙகண்மாயும்,'மெய்த்த காதத்தினாலே மூசவண் டினஙகண்மாயும்'' கனல்என்றது விளககொளியை.

எப்பொழுதும பொறிபுலனுக கேற்றசுபா
வீகமதைபிருத்து நேர்மை
செப்புமெனவறிவுரைக்கு மனமேயுன்
விருத்தியதிற சேர்நததாலே
அபபுலந்தான் களங்கமுற லாச்சந்த
விருத்தி யினையடககிககட்டித்
தப்பவிடாதிருநதிடவே சகமயககிற்
பொறிபுலன்கள் சாராவன்றே. (49)

(ப-ரை.) எப்பொழுதும் - எககாலத்தும், பொறிபுலனு க்கு ஏற்ற-பொறிபுலன்களுககுத தகுதியான, சுபாவீகமதை- இயல்பை, இருத்தும் - தடுக்கின்ற, நேர்மை — நேரானவழி யை, செப்புமென - சொல்லுமென்று மனம் கேட்க, அறிவு உரைக்கும் - அறிவானது சொல்லாநின்றது, மனமே - நெஞ் சே, உன்விருர்தி - உன்வியாபாரம், அதில் சேர்தலாலே - அந்தசசப்தாதி விஷயஙகளில் பொருந்தலாலே, அப்புலன் தான் - அந்தசசப்தாதிவிஷயஙகளும், களஙகம் உறல் ஆசசு - களஙகத்தை அடையலாயின. அந்தவிருத்தியினை - அந்தவி யாபகத்தை, அடக்கிககட்டி-அடக்கித்தடுத்து, தப்பவிடாது இருந்திட - பிசகும்படி விடாதிருப்பையானல், பொறிபுலன் கள - பொறிபுலன்களானவைகள், சகமயக்கில் - உலகமயக் கத்தில், சாரா - பொருந்தமாட்டா, எ-று.

(பொ-ரை,) எக்காலத்தும் பொறிபுலன்களுக்குத் தகுதி யான இயல்பைத்தடுக்கிற நேரானவழியைச சொல்லுமெ ன்று மனம்கேட்க அறிவானது சொல்லாநின்றது நெஞ்சே உன்வியாபகம் அந்தசசப்தாதி விஷயங்களிற் பொருந்துதலா லே அந்தச்சப்தாதி விஷயங்களும் களங்கத்தை அடையலா

யின அந்தவியாபகத்தை அடக்கித்தடுத்துப் பிசகும்படி விடா திருப்பையாருல் பொறிபுலன்களானவைகள் உலகமயக்கத் தில்பொருந்தமாட்டா.

(வி-ரை.) சுபாவீகம் - இயற்கை, களங்கமுறல் - குற்றமடைதல், சாரா - பொருந்தமாட்டா.

மனம்வியந்து விருத்திதனை யடக்குவதெப்
படியெனவே மற்றொன்றைத்தா
னினைந்ததனி லழுந்துமப்போ தெதிர்தோன்றும்
பொருளுணரா நெறிபோனீயும்
கனத்ததினை வினைப்பரமகுருபதத்தி
லுறப்புலன்கள் கட்டாயென்ன
வெனைப்புரக்கமகவாசைக் கிசைந்தெனென்ற
நெஞ்சையிகழ்ந் திடம்புமன்றே. (50)

(ப-ரை.) மனம் - மனமானது, வியந்து - அதிசயித்து, விருத்திதனை - வியாபகத்தை, அடக்குவது எப்படி என - தடுப்பது எப்படியென்று கேட்க, மற்றொன்றைத்தான் - வேறொரு பொருளைத்தான, நினைந்து - எண்ணி, அதனில் அழுந்தும் அப்போது - அதில் அழுந்துகிற அக்காலத்தில், எதிர் தோன்றும் - எதிரேகாணப்படுகிற, பொருள் - வேறொரு பொருளை, உணராநெறிபோல் - அறியாததன்மைபோல, நீயும் - நீயும், கனத்ததினைவினை - பெரிதாகிய தினைப்பை, பரமகுரு பதத்தில்உற - பரமாசாரியரது திருவடியில் பொருந்தும்படி, புலன்கள் - புலன்களை, கட்டாய் - தடுப்பாயாக, என்ன - என்று அறிவுகூற, என்னை புரக்க - என்னை ஆதரிக்க, மகவு ஆசைக்கு இசைந்தென் - குழந்தையைப் பெறவேண்டுமென்னும் ஆசையைப் பொருந்தினேன், என்ற - என்று சொல்லிய நெஞ்சை - மனத்தை, இகழ்ந்து - பரிகசித்து, இடம்பும் - அறிவுகூறும், எ-று.

(பொ-ரை.) மனமானது அதிசயித்து வியாபகத்தைத் தடுப்பது எப்படியென்று கேட்க,வேறொரு பொருளைத்தான் எண்ணி அதில் அழுந்துகிற அக்காலத்தில் எதிரேகாணப்படு கிற வேறொரு பொருளை அறியாதவாறுபோல நீயும் பெரிதா கிய நினைப்பைப் பரமாசாரியாது திருவடியில் பொருந்தும் படி புலன்களைத்தடுப்பாயாக என்று அறிவுகூற என்னை ஆத நிகைக் குழந்தையைப் பெறவேண்டுமென்னும் ஆசையைப் பொருந்தினேன என்று சொல்லிய மனத்தைப் பரிகசித்து அறிவுகூறும்.

(வி-ரை.) வியர்த்தல் - அதிசயித்தல் கட்டல்-தடுத்தல், புரத்தல் - காப்பாற்றுதல், மகவு-பிள்ளை.

நதிதனிலே விரைந்து வருநீருடனம்
மணலுறவாய நம்பிநாளும்
அதிசயுறவெனநினைந்த தொர்குமக
வாசைமிகவன்புதாமோ
ததிகடைந்த வெண்ணெய்தனையம்மோரிற்
கலந்துவிடிற் சார்கிலாபோற்
சதிமிசைந்த நெஞ்சோற் றந்தையுமக்
களுங்கலந்துஞ் சாகிலரே. (51)

(ப-ரை.) நதிதனிலே - ஆற்றிலே, விரைந்துவரும் - கடு கியோடுகிற, நீருடன் - நீரோடு, *அம்மணல் - அந்த ஆற்று மணலானது, உறவாய் - சம்பந்தப்பட்டதாகி, நம்பி - அந்த நிலைநம்பி, நாளும்-எப்பொழுதும், அதிகவுறவுஎன - மிகுந்தவு றவென்ற. நினைந்தது ஒக்கும்-நினைத்ததை நிகர்க்கின்ற, மகவு ஆசை - பிள்ளையாசை. மிக அன்பு ஆமோ - மிகவும் அன்பு டையதாகுமோ. ததிகடைந்த வெண்ணெய்தனை - தயிரைக் கடைந்தெடுத்த வெண்ணெயை, அம் மோரில்கலந்துவிடின்- அந்தமோரில் கலந்துவிட்டால், சார்கிலாபோல் - கலவாதது

போல், சதிஇசைந்த நெஞ்சே - வஞ்சகம்பொருந்திய மனமே, நல் தந்தையும் மக்களும் கலந்தும் - நல்லதந்தையு மக்களுமாக வந்திருந்தும், சார்கிலாரே - கலவாதவரேயாவர், எ-று.

(பொ-ரை.) ஆற்றிலே கடுகியோடுகிற நீரோடு அந்த ஆற்றுமணலானது சம்பந்தப்பட்டதாகி அந்தநீரைநம்பி எப்பொழுதும் மிகுந்தவுறவென்று நினைத்ததை நிகர்க்கின்ற பிள்ளையாசைமிகவும் அன்புடையதாகுமோ தயிரைக்கடைந் தெடுத்த வெண்ணெயை அந்த மோரில்கலந்து விட்டால் கலவாததுபோல வஞ்சகம் பொருந்தியமனமே நல்லதந்தையுமக்களுங் கலந்திருந்தும் கலவாதவரேயாவர்.

(வி-ரை,) ததி - தயிர், அல்லதுமோர்,, சதி - வஞ்சகம்.

அந்தியத்தின் மகவுதவிவேண்டுமென
வாசையுற்றே யலேந்தாய்மாயப்
பந்தமல்லலெவரிருந்தென் னுயிரொடுங்கிப்
புலன்கலங்கிப் பதைக்குமபோது
சுந்தரசிற்பரமகுரு சொன்னிலேபோன்
மயகுறுக்குந் துணிவுண்டாமோ
சிந்தையுற்றநெஞ்சே யென்றறிவுரைக்க
நெஞ்சமினிச் செப்புமன்றே. (52)

(ப-ரை.) அந்தியத்தில் - அந்தியகாலத்தில், மகவு உதவி வேண்டும் என - பிள்ளைகளின் உதவி வேண்டுமென்று, ஆசைஉற்றே அலேந்தாய் - ஆசைகொண்டே யலேந்தனே, மாயப்பந்தம் - இந்தமாயைக்கட்டானது, அல்லல் - துன்பமேயாம், உயிர்ஒடுங்கி - உயிர் ஒடுக்கமடைந்து, புலன்கலங்கி - புலன்கள்நிலேமாறி, பதைக்கும்போது - துடிக்கும்போது, எவர் இருந்துஎன் - எவரிருந்தாலென்ன, சுந்தரம் - அழகாகிய, சித் - ஞானத்தையுடைய, பரமகுரு, பரமாசாரியருடைய, சொல்நிலேபோல் - சொல்லுறுதியைப் போல், மயக்கு அறுக்

கும் - பிரபஞ்சமயக்கத்தைச்சேதிக்கும்படியான, துணிவு உண்டாமோ - துணிவுண்டாகுமோ; சிந்தைஉற்ற நெஞ்சே என்று - கவலைமிகுந்தமனமே யென்று, அறிவுஉரைக்க - அறிவானது சொல்ல, நெஞ்சம் - மனமானது, இனி - அதற்கு மேல், செப்பும் - சொல்லாநின்றது, எ-று.

(பொ-ரை,) அந்தியகாலத்தில் பிள்ளைகளின் உதவிவேண்டுமென்று ஆசைகொண்டே யலைந்தனை இந்தமாயைக்கட்டானது துன்பமேயாம் உயிர் ஒடுக்கமடைந்து புலன்கள் நிலைமாறித்துடிக்கும்போது எவரிருந்தாலென்ன அழகாகிய ஞானத்தையுடைய பரமாசாரியருடைய சொல்லுறுதியைப்போலப் பிரபஞ்சமயக்கத்தைச சேதிக்கும்படியான துணிவுண்டாகுமோ கவலைமிகுந்த மனமேயென்று அறிவானது சொல்ல மனமானது அதற்குமேல் சொல்லாநின்றது.

(வி-ரை,) அந்தியம் - முடிவுகாலம், (மரணம்) மாயபந்தம் - மாயையாகிய கட்டு, அல்லல் - துன்பம்.

விண்ணிலங்குமதிமுகமும்விற்புதலுங்
 கொல்கொலைக்கு வேல்வாளுணுங்
கண்ணிதெனவரிபரந்து கடைகிழிக்கு
 மதாவிழியுங்காமக்காத
லெண்ணருஞ்சன்னதமூட்டு மிளமுலையுங்
 குறுநகையு மிலங்கவொல்கும்
வண்ணமயிலையுங் கூடமறக்கவெண்பி
 ரோவெனவே வழங்குமன்றே. (53)

(ப-ரை.) விண் - ஆகாயத்தில், இலங்கும் - விளங்குகிற மதி - பூர்ணசந்திரன் போன்ற, முகமும்-முகத்தையும், வில் - வில்லையொத்த, புதலும்-புருவமும், கொல்கொலைக்கு - கொல்லுகிற கொலைத்தொழிலுக்கு, வேல்வாள்நாணும் - வேலும்

வாளும்நாணுகிற, கண் இதுஎன - கண் இதுவென்று சொல்லும்படி, அரிபரந்து - செவ்வரிபடர்ந்து, கடைகிழிக்கும் - கடையைகிழிக்கின்ற, மதர்விழியும் - மதர்த்தகண்களும், காமக்காதல் - காமவிருப்பமாகிய, எண் அரு - நினைத்தற்கரிய, சன்னதம் மூட்டும் - மோகாவேசத்தை மூட்டுகிற, இளமுலையும் - இளமைபொருந்திய ஸ்தநங்களும், குறுநகையும் புன்சிரிப்பும், இலங்க - விளங்க, ஒல்கும - அசைகின்ற, வண்ணம் - அழகிய, மயிலையும்கூட - மயிற்சாயலையுடைய மனைவியையும், மறக்கஎன்பிரோ - மறக்கவேண்டுமென்று சொல்லுவீரோ, என - என்றுமனம்கேட்க, வழங்கும் - (அதற்கு விடையாக) அறிவுகூறுகின்றது, எ-று.

(பொ-ரை,) ஆகாயத்தில் விளங்குகிற பூர்ணசந்திரனை போன்ற முகத்தையும் வில்லையொத்த புருவமும் கொல்கிற கொலைத்தொழிலுக்குத வேலும் வாளும் நாணுகிறகண் இதுவென்று சொல்லும்படி செவ்வரிபடர்ந்து கடையைக்கிழிக்கின்ற மதர்த்தகண்களும் காமவிருப்பமாகிய நினைத்தற்கரிய மோகாவேசத்தை மூட்டுகிற இளமைபொருந்திய ஸ்தநங்களும் புன்சிரிப்பும் விளங்க அசைகின்ற அழகிய மயிற்சாயலையுடைய மனைவியையும் மறக்கவேண்டுமென்று சொல்வீரோ என்று மனம்கேட்க அதற்குவிடையாக அறிவு கூறுகின்றது.

(வி-ரை,) புதல் - புருவம், கடைகிழித்தல்-கட்கடையைக்கீறுதல், சன்னதம் - ஆவேசம், குறுநகை - புன்சிரிப்பு, ஒல்குதல் - அசைதல், வண்ணமயில் என்றது மனைவியை, வண்ணம் - நிறம் எனினும் பொருந்தும்.

நிலவொழுகுமதிமுகத்தி னெடுமூக்கு
நீண்டவிழி நிமைபுமுத்தென்
றிலகுமிளநகையதனை மறைக்குமித
ழையுங்குறித்தே யிரங்கபார்க்கி

லலம்மிகுத்த வாசைதரு மரிவைமுகத்
தழகதனையறியலாகு
முலையதனைமூடிய தோலகன்றிடிலம்
முலையழகுமுணர்வாய் நெஞ்சே. (54)

(ப-ரை.) நிலவு ஒழுகும் - நிலவு வீசுகிற, மதிமுகத்தில்-பூர்ணசந்திரன் போன்ற முகத்தில், நெடுமூக்கும் - நீண்ட நாசியையும், நீண்ட விழிநிமையும், - நீண்ட கண்களையும் இமைகளையும், முத்து என்று இலகும் - முத்தென்று சொல்லப்பட்டு விளங்குகிற, இளநகையதனை - புன்சிரிப்பை, மறைக்கும் - மறைக்கின்ற, இதழையும் - அதரத்தையும், குறித்து - நினைத்து, ஈர்ந்துபார்த்தால் - பகுத்துப்பார்த்தால், அலம்மிகுத்த - சஞ்சலமிகுந்த, ஆசைதரும் - ஆசையையுண்டாக்குகிற, அரிவைமுகத்துஅழகதனை - பெண்ணின் முகத்தழகை, அறியலாகும் - அறிந்துகொள்ளலாம், முலையதனை மூடிய - ஸ்தநத்தை மூடிக்கொண்டிருக்கிற, தோல் அகன்றிடில் - தோல்நீங்கினால், அ - அந்த, முலைஅழகும் - ஸ்தநத்தின் அழகையும், உணர்வாய் - அறிவாய், நெஞ்சே - மனமே, எ-று.

(பொ-ரை.) நிலவுவீசுகிற பூர்ணசந்திரன்போன்ற முகத்தில் நீண்ட நாசியையும் நீண்டகண்களையும் இமைகளையும் முத்தென்றுசொல்லப்பட்டு விளங்குகிற புன்சிரிப்பை மறைக்கின்ற அதரத்தையும் நினைத்துப் பகுத்துப்பார்த்தால் அஞ்சலமிகுந்த ஆசையையுண்டாக்குகிற பெண்ணின் முகத்தழகை அறிந்துகொள்ளலாம். ஸ்தநத்தை மூடிக்கொண்டிருக்கிறதோல் நீங்கினால் அந்தஸ்தநத்தின் அழகையும் அறிவாய் மனமே.

(வி-ரை.) நிலவு - சந்திரிகை. நிமை - இமை, இதழ் - அதரம். ஈர்ந்துபார்த்தல் - பிளந்துபார்த்தல். அலம் - சஞ்சலம். பெண்ணின் முகத்தழகைக்கண்டு மோகிக்குங்காமுகர்

ங்கு அதனிழிவைப்பட்டினத்தடிகள் கூறியுள்ளதை "வெப்ப மூத்தையுமேவிய வாயைத்-துப்புமுருக்கின்றாய் மலரென்றும்-அன்னமுங்கறியுமசைவிட்டிறக்கும் - முன்னியபல்லை" முத்தெனமொழிந்தும், நீருஞ்சளியு நின்று நின்றொழுகும் - கூரிய மூக்கைக் குமிழென்றுரைத்தும் - தண்ணீர் பூளை தவ்வாதொழுகுங் - கண்ணைப்பார்த்துக் கழுநீரென்றும் - உள்ளுங்குறும்பியொழுகுங்காதை - வள்ளைத்தண்டின் வளமெனவாழ்த்தியும் - வெய்யவதரும் பேனும்விளையத் - தக்கதலையோட்டின் முளைத்தெழுந்த. சிக்கின் மயிரைத்திரண் முகிலென்றும்" என்றுவருவனவற்றாற்காண்க.

கன்னியர் தமமொளிர் முகத்தைக்கண்ட கண்
ணால்வெண்டலையைக் கருதியூன்றி
யுன்னியதினுறுப்பறிந்து பெண்முகமு
மிப்படி யொன்றெனவோர்ந்து
மின்னலெனப் பேசுமுடன் மலக்கூடிங்
கழியுமிது மின்போனெஞ்சே
பொன்னின்மலையென்ற முலைபொதிந்ததசைக்
கட்டியெனப் பொருந்திடாயே. (55)

(பதவுரை.) கன்னியர்தம் - இளம்பெண்களுடைய, ஒளிர முகத்தை - விளங்குகிற முகத்தை, கண்டகண்ணால் - பார்த்தகண்ணால், வெள்தலையை - வெண்மையாகியதலையோட்டை, கருதி ஊன்றி உன்னி - ஆலோசித்து ஆழ்ந்து நினைத்து, அதின் உறுப்பு அறிந்து - அந்தத்தலையிலுள்ள உறுப்புக்களையறிந்து, பெண்முகமும் - பெண்ணின் முகமும், இப்படியொன்று என்ன ஓர்ந்து - இப்படி யொன்றென்றாராய்ந்து அறிந்து, மின்னல் என பேசும் - மின்னல் போன்றதென்று சொல்லும்படியான, உடல் - உடம்பென்கிற மலக்கூடு-மலப்பையாகிய, இது-இது, இங்கு-இவ்வுலகில், மின்போல்-மின்னலைப்போல, அழியும்-தோன்றியழியும், நெஞ்சே-

மனமே, பொன்னின் மலை என்ற-பொன்மலையென்று சொல்ல
ப்பட்ட, முலை - ஸ்தநங்கள், பொதிந்த - பொருந்திய, தசைக
கட்டியென - மாமிசக்கட்டியென்று, பொருந்திடாய் - நீ சம
மதிக்க்கடவாய், எ-று.

(பொ-ரை) இளம்பெண்களுடைய விளங்குகிற முகத்தை
ப்பார்த்த கண்ணால் வெண்மையாகிய தலையோட்டை ஆலோ
சித்து ஆழ்ந்து நினைத்து அந்தத்தலையிலுள்ள உறுப்புக்களை
பதிந்து பெண்ணின் முகமும் இப்படி யொன்றென்றாராய
ந்து அறிந்து மின்னல்போன்றதென்று சொல்லும்படியாக
உடம்பென்கிற மலப்பையாகிய இது இவ்வுலகில மின்னலைப்
போலத்தோன்றியழியும் மனமே பொன்மலையென்று சொல
லப்பட்ட ஸ்தநங்கள் பொருந்திய மாமிசக்கட்டியென்று நீசம
மதிக்கக்கடவாய்.

(வி ரை.) உடல் மலக்கூடு என்பதை "நாறுங்குருதிச சல
தாரைதோற்புரை நாடொறுஞ்சீ, யூறுமலக்குழிகாமத்துவார
மொளித்திடும்புண், தேறுந்தசைப்பிளப்பங்தரங்கத்துள சி
றின்பம் விட், டேறும்பதந்தருவாய் திருக்காளத்தியீசசு
னே" என்றுதிருவெண்காட்டடிகளும் கூறியுள்ளார். பொல
னின்மலை, மேருபர்வதம், இதுதனங்களுக் குவமையாக்க
கூறுதல் கவிஞரியல்பு "மேருவின்குவட்டின் வீழும்விரிசு
ரைக் கங்கைநீர்போல், ஆரமுற்றிலங்குகின்ற வணியிழைம
வார்கொஙகை, நாரயன்மயானந்தன்னி லுற்றபோதருணை
டைசசோற்றின், நேருறகவளம்போல நிரைநிரைநாய்கடுக்
க்கும்." என்றார் பிறரும்.

கள்ளொழுகுமலர் சூட்டிக்குழலூற்றக்
தனைமாறறிக்களயச்சேற்றை
யள்ளியுவணமீதணிந்தேயுடனூற்ற
மாற்றிலைவத்தாயவண்மூன்னின்று

வெள்ளெலும்பைக்காட்டி நகைத்திட மயங்கி
யுடன்மறந்தவேட்கைமிஞ்சிக்
கள்ளமலத்துடன் கலந்தநெஞ்சே நீ
யவளுடலைக்கருதிலாயே. (56)

(ப-ரை.) கள் ஒழுகும்மலர்சூட்டி - தேனொழுகுகின்றமலரைத் தரித்து, குழல்நாற்றம் தனைமாற்றி - கூந்தலின் துர்க்கந்தத்தை யொழித்து, களபசேற்றை - கலவைச் சந்தனத்தை, அள்ளி - வாரி, அவள்மீது அணிந்து - அவள்மேலே பூசி, உடல்நாற்றம்மாற்றி - உடம்பின் துர்க்கந்தத்தை நீக்கி, வைத்தாய் - வைத்தனை, அவள் முன்நின்று - அவள் உன்னெதிரேநின்று, வெள் எலும்பைக்காட்டி நகைத்திட - வெள்ளெலும்பாகிய பற்களைக்காட்டிச சிரித்தலும், மயங்கி - நீ மயக்கமடைந்து, உடல்மறந்து - உடம்பைமறந்து, வேட்கை மிஞ்சி - ஆசைமிகுந்து, கள்ளமலத்துடன் கலந்த நெஞ்சே - வஞ்சனையாகிய மலத்தோடுகூடின மனமே, [redacted] அவள் உடலை-நீயவளுடம்பின் இழிவாகிய தன்மையை, கருதிலாய் - சற்றும் நினைத்தாயில்லை, எ-று.

(பொ-ரை.) தேனொழுகுகின்ற மலரைத்தரித்துக் கூந்தலின் துர்க்கந்தத்தை யொழித்துக் கலவைசசந்தனத்தைவாரி அவள்மேலே பூசி யுடம்பின் துர்க்கந்தத்தை நீக்கிவைத்தனை. அவள் உன்னெதிரேநின்று வெள்ளெலும்பாகிய பற்களைக் காட்டிச் சிரித்தலும் [redacted] மயக்கமடைந்து உடம்பைமறந்து ஆசைமிகுந்து வஞ்சனையாகிய மலத்தோடுகூடினமனமே நீ அவளுடம்பின் இழிவாகிய தன்மையைச சற்றும் நினைத்தாயில்லை.

(வி-ரை.) கள் - தேன், வெள்ளெலும்பு - பல், "குடருங் கொழுவுங் குருதியுமென்பும், தொடருநரம்பொடுதோலும், இடையிடையே, வைத்த தடியும் வழும்புமாமற்றிவற்றில்,

எத்திறத்தாளீர்ங்கோதையாள்'' என்றார்மேலோரும். பெண்ணவன் எதிரேநின்று தன்னுருவத்தைக்காட்டி மயக்க மயங்குவது ஆடவர்க்கியல்பென்பதை "பெண்ணாகி வந்தொரு மாயப்பிசாசம் பிடித்திட்டென்னைக், கண்ணால் வெருட்டி முலையால் மயக்கிகடி தடத்துப், புண்ணாங்குழியிடைத் தள்ளியென் போதப்பொருள்பறிக்க, வெண்ணு தனைமறந்தே யிறைவாகச்சியேகம்பனே''என்று பற்றறத்துறந்த பட்டினத்தடிகளுங் கூறியுள்ளார்.

நீருண்டகட்டிதனை வேலென்றுங்
கயலென்றுநெடுங்கண்ணென்றுந்
தாரணியெலாமறியுமென்னைமுத்து
நகையென்றுந்தசையின்கண்டம
வாருருவிக்குதித்தெழுமுலையென்றுந்
தோலுதட்டிலவரும்பல்லூத்தை
சேருமெச்சிலமுதமென்றேகுருதிகுழி
யினபமதிற்றிகைத்தாய்நெஞ்சே. (57)

(ப-ரை) நீர் உண்டகட்டிதனை - நீர்நிறைந்த கட்டியை; வேல் என்றும் - வேற்படையென்றும், கயல் என்றும் - கயல்மீனென்றும், நெடுங்கண் என்றும்-நெடியகண்ணென்றும், தாரணியெல்லாம் அறியும் என்பை - உலகமுழுதுமறிந்த எலும்பை, முத்துநகையென்றும் - முத்துப்போன்றபல்லென்றும், தசையின்கண்டம் - மாமிசகண்டத்தை, வார் உருவி குதித்தெழும்முலையென்றும் - கச்சையூடுருவிக் குதித்தெழுகின்ற முலையென்றும், தோல் உதட்டில்வரும் - தோலுருவாகிய உதட்டில் முளைக்கிற, பல் ஊத்தைசேரும் எச்சில்-பற்களின் ஊத்தையோடுகலந்த எச்சிலை, அமுதம் என்று-அமிர்தமென்றும், (பாராட்டி) குருதிகுழி இன்பமதில் - உதிரக்குழியினாலுண்டாகிற சுகத்தினால், நெஞ்சே - மனமே, திகைத்தாய் - நீதிகைத்தனையே, (என்னபாவம்) எ-று.

(பொ-ரை.) நீர்நிறைந்த கட்டியை வேற்படையென்றும் கயல்மீனென்றும் நெடியகண்ணென்றும் உலகமுழுதுமறிந்த எலும்பைமுத்துப்போன்ற பல்லென்றும் மாமிசகண்டத்தைக் கசையூறுருவிக் குதித்தெழுகின்ற முலையென்றும் நோவுரு வாகிய உதட்டில் முளைக்கிற பற்களின் ஈறுதனையோபுகலருந் தேசிலே அமிர்தமென்றும் (பாராட்டி) உதிரக்குழியிலேயுண் டாகிற சுகத்திலேல் மனமே நீநினைத்தனையே (என்னபாவம்.)

(வி-ரை.) மாதர் உறுப்பின் அருவருக்கைநோக்கி மகிழ்வோர் அவற்றினிழிவை நன்கறிந்திலார் என்பதை "மாக்கேழ்மட நல்லாயென்றரற்றுஞ்சான்றவர், நோக்கார் கொலொநொய்யதோர் புக்கிலை, யாக்கைக்கோர், ஈச்சிறகன்னதோர் தோலறினும் வேண்டுமே, காக்கை கடிவதோர்கோல்" என்னும் நாலடி யார் வெண்பாவானுணர்க. நீருண்டகட்டி யென்றது கண்ணை, கயல் - கெண்டைமீன், தசையின்கண்டம் - மாமிசத் துண்டு, உதிரக்குழி-பெண்குறி.

துரியநிறைபரமகுருசொல்லியநன்
னிலைமயக்கிற்சேர்க்கிநாளும்
பிரமமணிச்சுடரமலையிற்கண்ணூன்றிப
பரமசுகம்பெற்றுவாழக்
கருதிநசையடங்காமற்கன்னியருக்
காளாகிக்கலங்கிநொந்து
குருதியொடுபுன்னீர்க்ளொழுகுகுழி
யின்பமதைக்குறித்தாய்நெஞ்சே. (58)

(ப-ரை.) துரியநிறை - துரியபதத்தில் நிறைந்த, பரம குரு - பரமாசாரியர், சொன்ன-சொல்லிய, நல்நிலை மயக்கில் சேர்க்கி - நல்லநிலையாகிய உபதேச மயக்கத்திலகப்பட்டு நின்று, நாளும் - எந்நாளும், பிரமம் - பிரமமாகிய, மணிசுடர் மலையில் - ரத்நகாந்தியுள்ள மலையின்மேல்; கண்ணூன்றி -

ஞானக் கண்ணைப்பதித்து, பரமசுகம் பெற்றாரக்கருகி - பேரின்பத்தையடைந்துவாழ நினைத்து, ஈசை அடங்காமல் - ஆசையடங்காமல, கன்னியருக்கு ஆள் ஆகி - மாதர்களுக்கு அடிமையாகி, கலங்கிநொந்து - மனங்கலங்கி வருந்தி, குருதியொடு - உதிரந்தோடு, டன்னீர்கள் ஒழுகு - சிறுநீர்களொழுகின்ற குழி - யோனித்துவாரத்தின், இன்பமாசை - சுகத்தை, துயிகதாய் - நீ பெரிதாக மதித்தனையே, நெஞ்சே - மனமே (உன் அறியாமை யிருந்தபடி யென்னே) எ-று.

(பொ - ரை) துரியபதத்தில் நிறைந்த பரமாசாரியர் சொல்லிய நல்ல நிலையாகிய உபதேசமெய்க்கத்தி லகப்பட்டுநின்று எக்காலும் பிரமமாகிய சத்சகாந்தியுள்ளமலையின்மேல் ஞானக் கண்ணைப்பதித்துப் பேரின்பத்தையடைந்து வாழநினைத்து ஆசையடங்காமல் மாதர்களுக்கு அடிமையாகி மனங்கலங்கி வருந்தி உதிரத்தோடு சிறுநீர்களொழுகுகின்ற யோனித்துவாரத்தின் சுகத்தை நீ பெரிதாக மதித்தனையே மனமே (உன் அறியாமையிருந்தபடி யென்னே)

(வி - ரை) சொக்குதல் - பரவசப்படுதல். ஈசை - விசையே ஆசை, ன்னீர் - மூத்திரம், பரமாசாரியர் மொழியே சுகாநுபவிக்குமென்பதை "மன்னவொரு சொற்கொண்டெனைத் தடுத்தாண்டன்பின் வாழ்வித்தஞானகுருவே" என்று ஸ்ரீதாயுமானசுவாமிகளும் கூறியுள்ளார்.

பூரணத்தினிலேதிகழும் புகன்றிருக்கப்
 பூவையரைப் புகழ்ந்தா யென்றே
சிருறைந்த வறிவுரைக்கத் தெரிவையர்க
 ணிலை யெனக்குத் தெரிந்து மென்ன
காரணமோ வத்துவிதக் காரிய நீ
 ருரைக்குப்பிந்தக்கணத்திலேயு
மாரமுலை மீதாசை யாகுதென்செய்
 வேனெனவே யறிவு கூறும். (59)

(ப - ரை.) பூரணத்தின்நிலை - பரிபூரணப்பொருளின் நிலையை, நிதமும் - நாள்தோறும், புகன்றிருக்க - நான் உனக்குச சொல்லியிருக்கவும், (நீ அதனை மறந்து) பூவையரைபுகழ்ந்தாய் என்று - மாதரைப் புகழ்ந்தாயென்று, சீர்நிறைந்த அறிவு உரைக்க - சிறப்புமிகுந்த அறிவானதுசொல்ல, தெரிவையர்கள் நிலை - மாதர்களுடைய இழிதன்மை, எனக்குத்தெரிந்தும் - எனக்குத்தெரிந்திருந்தும், என்னகாரணமோ - யாது காரணமோ, அத்துவிதக்காரியம் - அத்துவித விஷயத்தை, நீர் உரைக்கும் - நீர்சொல்லுகிற, இந்தக்கணத்திலேயும் - இந்தக்ஷணநேரத்திலும், ஆரம் - முத்துமாலையணிந்த, முலைமீது - (மாதருடைய) ஸ்தனங்களின்மேல், ஆசை ஆகுது - விருப்பமுண்டாகின்றது, என்செய்வேன் - (இதற்கு) நான் யாது செய்வேன், என - என்று மனஞ்சொல்ல, அறிவுகூறும் - அறிவானது சொல்லாநின்றது, எ-று.

(பொ-ரை) பரிபூரணப்பொருளின் நிலையை நாள்தோறும் நான் உனக்குச சொல்லியிருக்கவும் (நீ அதனைமறந்து) மாதரைப் புகழ்ந்தாயென்று சிறப்புமிகுந்த அறிவானது சொல்ல, மாதர்களுடைய இழிதன்மை யெனக்குத் தெரிந்திருந்தும் யாது காரணமோ அத்துவித விஷயத்தை நீர் சொல்லுகிற இந்தக்ஷணநேரத்திலும் முத்துமாலையணிந்த மாதருடைய ஸ்தனங்களின்மேல் விருப்பமுண்டாகின்றது இதற்கு நான் யாதுசெய்வேன் என்று மனஞ்சொல்ல அறிவானதுசொல்லாநின்றது.

(வி - ரை.) பூவையர் - உவமையாகு பெயர், ஆர - மிருதியாக எனினும் பொருந்தும், அத்துவிதகாரியம் - அத்வைத மார்க்கமாகியவிஷயம், தெரிவையர் - மாதர் பொதுப்பெயர், (பருவத்தைக்குறித்ததன்று)

நாடிநரம் பெலும்புதசை தோற்குருதி
கிணம்பொதிந்து நாறற் பீற்றற்

கூடியதிற் புழுக்குதிக்குங் குபபியெனு
மலப்பாண்டக்.கூட்டை நாளுந்
தேடரிய பேரழகா மெமதுடலென்
றாசை மிகச் சிறந்ததாலே
வாடு மிடையாருடன்மே லாசையுற்று
யுன்னுடலை மதித்திலாயே. (60)

(ப - ரை) நாடி - நாடி, நரம்பு - நரம்பு, எலும்பு - எலும்பு, தசை - மாமிசம், தோல் - தோல், குருதி - உதிரம், நிணம் - கொழுப்பு, (ஆகிய இவைகளை) பொதிந்து - நிறைத்து, நாறல்-முடைநாற்றம் நாறுதலையுடைய, பீற்றல்கூடி - துவாரங்களையுடையதாகி, அதில் - அதிலே, புழுகுதிக்கும் - புழுக்கள் துள்ளுகிற, கும்பியென்னும் - நரகமென்று சொல்லத்தகுந்த, மலபாண்டக்கூட்டை - மலபாண்டமாகிய இந்தக்கூட்டினை நாளும் - தினந்தோறும், தேடு அரிய - தேடுதற்கரிதாகிய, பேரழகு ஆம்-பேரழகையுடையதாகும், எமது உடல் என்று-எமது உடம்பென்று, ஆசைமிகசிறந்ததாலே - இதனிடத்தில் ஆசையானது மிகவும் அதிகரித்தலால், வாடும் - துவளாநின்ற, இடையார் -- இடையையுடையவராகிய மாதர்களுடைய, உடல்மேல் - உடம்பின்மீது, ஆசை உற்றாய் - விருப்பமிருந்தாய், (நெஞ்சே) உன் உடலை - உனதுயதார்த்தமாகிய சரீரத்தின் தன்மையை, மதித்திலாயே - (சிறிதாயினும்) நீயறிந்தாயில்லையே, எ-று.

(பொ - ரை.) நாடி நரம்பு எலும்பு மாமிசம் தோல் உதிரம் கொழுப்பு ஆகிய இவைகளை நிறைத்து முடைநாற்றம் நாறுதலையுடைய துவாரங்களையுடையதாகி அதிலே புழுக்கள் துள்ளுகிற நரகமென்று சொல்லத்தகுந்த மலபாண்டமாகிய இந்தக்கூட்டினைத் தினந்தோறும் தேடுதற்கரிதாகிய பேரழகையுடையதாகும் எமது உடம்பென்று இதனிடத்தில் ஆசையானது மிகவும் அதிகரித்தலால் துவளாநின்ற இடையை

புடையவராகிய மாதர்களுடைய உடம்பின்மீது விருப்ப மிருந்தாய். நெஞ்சே உனது யதார்த்தமாகிய சரீரத்தின் தன்மையைச் சிறிதாயினும் நீயறிந்தாயில்லையே.

(வி-ரை.) சத்ததாதுக்களாலாகிய உடலை மிக்கவழகுடையதென்று மயங்கி யாசையுற்றனை என்பதை "தோலிரத்த மெலும்பிறைச்சி சுக்லமேதை மச்சையொன்றாய்த், தாவிகசித்தவுடம்பாகுந் தொட்டவெவையுந் தன்வடிவாய்க், கோலியடக்கிக்கொளுநிதனைக் கூறகூறாநோக்காது, போலியுணா வோர்மகிழ்வெய்தும் புனிதமென்றும் பரமபதம்" என்றுகூறியுள்ள மஹாராஜா துறவிற் காண்க. நாடி - வாதபித்தசிலேட்டுமங்களாகிய தாதுக்கள், பீற்றல் - துவாரம். கும்பி - ஓர் நரகவிசேடம்.

பசியறவேபுசிப்பதற்கா யாடீர்ந்தே
யுரிககு மவர் பாலிற் சென்று
வசையறவேயசங்கிதத்தை மறந்துநின
வதிலூன்றி வளமை பார்க்கிற
றசை யெலும்பு குடலீரனிணங்குருதி
யிருபபதுவைத் தன்றேசத்தும
பிசகிலா திப்படியே யிருககு தெனிற்
பெண்ணுசை பெறுமோ நெஞ்சே. (61)

(ப - ரை.) பசி அற - பசிதீர, புசிப்பதற்காய் - உண்பதற்காகவே, ஆடு ஈர்ந்து - ஆட்டையறுத்து, உரிக்குமவர்பாலில் சென்று - உரிப்பவரிடத்திற்போய், வசையற - குற்றம் நீங்க, (அதிலுள்ள) அசங்கிதத்தைமறந்து - அருவருப்பான பொருள்களைமறந்து, நினைவு அதில் ஊன்றி - கருத்தை அதிலே பதியவைத்து, வளமைபார்க்கின் - அதன வளப்பதனைப் பார்த்தால், தசை - மாமிசம், எலும்பு-எலும்பு, குடல்-குடல், ஈரல் - ஈரல், நிணம் - கொழுப்பு, குருதி - உதிரம், (இவை

கள்) இருப்பதனுல் - நிறைத்திருத்தலால், தன்றேகத்தும் - தன் சரீரத்துள்ளும், பிசகு இலாது - தவருமல், இப்படியே இருக்கும் எனின் - இப்படியேயிருக்குமென்னும் புத்தியுண்டாஞல், (பின்பு) நெஞ்சே-மனமே, பெண் ஆசை பெறுமோ- உன் புத்திபெண்ணுசையையும் அடையுமோ, எ-று.

(பொ - ரை.) பசிதீர உண்பதற்காகவே ஆட்டையறுத்து உரிப்பவரிடத்திற்போய்க் குற்றம்நீங்க (அதிலுள்ள) அருவருப்பான பொருள்களை மறந்து கருத்தை அதிலே பதியவைத்து அதன் வளப்பத்தைப்பார்த்தால் மாமிசம் எலும்பு குடல் நரம்பு கொழுப்பு உதிரம் இவைகள் நிறைந்திருத்தலால் தன் சரீரத்துள்ளும் தவருமல் இப்படியே யிருக்குமென்னும் புத்தியுண்டாஞல் பின்பு மனமே உன்புத்திபெண்ணுசையையும் அடையுமோ.

(வி - ரை.) ஈர்தல் - அறுத்தல், அசங்கிதம் - அருவருப்பு.

கத்தி கரந்தவறி கரத்தரியதசை
  தோனரம்பு காணக் கொய்தே
யத்திவெளி கண்டதென வுரைப்பதன்றித்
  தோற் கூடென றநத்தெண்ணுமற்
சித்திரமா யழகு மணிப் பூணிலங்கத்
  தினங்கலவை திமிர்ந்து வாசக்
கொத்துமலர்த் தாரணிந்தே-யிறுமாப்பாய்ப்
  பெண் மயக்கங் கொண்டாய் நெஞ்சே. (62)

(ப - ரை.) கத்தி - கையிலிருக்கும் கத்தியானது, கரந்தவறி - கைதப்பி, கரத்து அரிய - கையில் அறுத்துவிட, தசைதோல் நரம்புகாண - மாமிசம் தோல் நரம்பு என்பவைகள் தெரியும்படி, கொய்து - அறுபட்டு, அத்தி வெளிகண்டது என-எலும்பு வெளியே காணப்பட்டதென்று, உரைப்ப

தன்றி - சொல்லுவதல்லாமல், தோல் கூடு என்று - தோற்கூடாகுமென்று, அகத்து எண்ணுமல்-மனத்தில் நினைக்காமல், சித்திரமாய் - விசித்திரமாய், அழகு - அழகாகிய, மணி பூண் இலங்க - ரத்நாபரணங்கள் பிரகாசிக்க, தினம் - நாள்தோறும், கலவை - கலவைச்சந்தநத்தை, திமிர்ந்து - பூசி, வாசம்-மணம்பொருந்திய, கொத்து - கொத்துகளாயிருக்கிற, மலர் தார் அணிந்து - பூமாலைகளைத்தரித்து, இறுமாப்பாய் - இறுமாப்படைந்து, நெஞ்சே - மனமே, பெண்மயக்கம் கொண்டாய் - நீ பெண்கள்மேல் காமமயக்கம் கொண்டனையே, எ-று.

(பொ-ரை) கையிலிருக்கும் கத்தியானது கைதப்பிக்கையிலறுத்துவிட மாமிசம் தோல் நரம்பு என்பவைகள் தெரியும்படி அறுப்பட்டு எலும்பு வெளியே காணப்பட்டதென்று சொல்லுவதல்லாமல் தோற்கூடாகுமென்று மனத்தில் நினைக்காமல் விசித்திரமாய் அழகாகிய ரத்நாபரணங்கள் பிரகாசிக்க நாள்தோறும் கலவைச சந்தநத்தைப்பூசி மணம்பொருந்திய கொத்துக்களாயிருக்கிற பூமாலைகளைத்தரித்து இறுமாப்படைந்து மனமே நீ பெண்கள்மேல் காமமயக்கங்கொண்டனையே.

(வி - ரை.) அத்தி - எலும்பு. "என்னைகண்டு நீ மாதரார் வடிவமீ திசைசைவைத்துழல்கின்றாய், பொன்னையுந்துகிலையும் பிரித்திடின் வெறும் புழுமலக்கூடல்லால், பின்னையுண்டு கொல் கண்டு நீ மயங்குதல் பிராந்திசங்கரன்பாதம், தன்னை நாடுநெஞ்சமேபாசகோததியுறப்பெறலாமே" என்னும் ஆன்றோர் திருவாக்கை இவ்விடத்திற் குதாரணமாகக்கொள்ளலாம். மாதர்கள்மேல்வைக்குமையலை "பசசென்ற கொங்கைப்பசப்பியர் பாழானமயல், நசசென்றறிக்தருளை நண்ணுகாளெந்நாளோ" என்று பெரியோர்களும் இழித்துக்கூறியுள்ளார்.

பிணங்கள் சுடுஞ் சுடுகாட்டுக் கேகிதனி
யாகவொரு பிணத்தினபாற் சென்
றிணங்கி பரப்படங்கி டவேயுணர்ந்தறியின்
பிணவுறுப்பு மிசைந்ததோலுங்
கணங்கொண்ணவை நிணமொழுகும் படிநாற
வேகுமதைக் கண்டெந்த
மணங்கொளுடறனைச் சுடினுமிவ்விதமா
மெனக்கருதி மதித்திடாயோ. (63)

(ப-ரை) பிணங்கள்சுடும் - பிணங்களைச்சுடுகின்ற, சுடுகாட்டுக்கு ஏகி - சுடுகாட்டுக்குப்போய், தனியாக - தனிமையாக, ஒரு பிணத்தின்பால் சென்று - ஒரு பிணத்தினிடத்திற்சென்று, இணங்கி - அமைந்து, பரப்பு அடங்கிட - பரபரப்படங்கிப் போம்படி, உணர்ந்து அறியின் - யோசித்துப்பார்த்தால், பிணவுறுப்பும் - பிணத்தின் உறுப்புக்களும், இசைந்த தோலும் - பொருந்திய தோலும், கணம்கொள் - மிகுதியைக் கொண்ட, நவை - துர்க்கந்தத்தையுடைய, நிணம் ஒழுகும்படி - கொழுப்பு உருகியொழுகும்படி, நாற - துர்நாற்றமுண்டாக, வேகுமதை கண்டு - வேவதைப்பார்த்து, எந்தமணம்கொள் உடல்தனை சுடினும் - எப்படிப்பட்ட மணத்தைக்கொண்ட உடம்பை சுட்டாலும், இவ்விதம் ஆம் எனக் கருதி - இப்படியேயாகுமென்று நினைத்து, மதித்திடாயோ - (நெஞ்சே) நீ யென்சொல்லைமதிக்கமாட்டாயோ, எ-று.

(பொ-ரை) பிணங்களைச் சுடுகின்ற சுடுகாட்டுக்குப்போய்த் தனிமையாக ஒரு பிணத்தினிடத்திற்சென்று அமைந்து பரபரப்படங்கிப்போகும்படி யோசித்துப்பார்த்தால் பிணத்தினுறுப்புக்களும் பொருந்தியதோலும் மிகுதியைக்கொண்ட துர்க்கந்தத்தையுடைய கொழுப்பு உருகியொழுகும்படி துர்நாற்றமுண்டாக வேவதைப்பார்த்து எப்படிப்பட்டமண

த்தைக்கொண்டவுடம்பைச சுட்டாலும் இப்படியேயாகுமென்று நினைத்து நெஞ்சே நீ யென்சொல்லை மதிக்கமாட்டாயோ.

(வி - ரை.) பரப்பு - அவசரம், உறப்பு - அவயவம், கணம்-கூட்டம், அது இங்குமிகுதிப்பொருளது, நவை -முடைநாற்றம்.

மங்கையர்களுடனிலையுந் தமதுடலின்
 பெருநிலையு மதித்து நின்று
பங்கமற நானிறக்கப் படிந்து குரு
 வருணிலையிற் பதிந்த மிகவோர்
கொங்கைமட மின்னார்கள் குவிமுலையின்
 மயங்கிமனங்கொதியா ரென்று
சங்கையற நெஞ்சமதுக் குரைத்திடவே
 பேசாதாற் சாற்று மனமே. (64)

(ப - ரை.) மங்கையர்கள் உடல் நிலையும்-மாதர்களுடைய சரீரநிலையையும், தமதுடலின் பெருநிலையும் - தமதுடம்பின் பெரியநிலைமையையும், மதித்துநின்று-ஆராய்ந்தறிந்துநின்று, பங்கம் அற - குற்றம் நீங்க, நான் இறக்க படிந்து-நான் என்னும் அகங்காரம் நீங்கும்படி யமைந்து, குரு அருள் நிலையில் பதிந்த - சதாசாரியரது அருணிலையிற் பதியப்பெற்ற, மிக்கோர் - மேலோர், கொங்கு - வசனையையணிந்த, ஐ - அழகிய, மடம் - இளமைபொருந்திய, மின்னார்கள் - மாதர்களுடைய, குவிமுலையில் - குவிந்தஸ்தநங்களின்மேல் விருப்பங்கொண்டு, மயங்கி-மயக்கமடைந்து, மனம்கொதியார் என்று-மனம்பதையாரென்று, சஙகை அற - சந்தேகமொழியும்படி, நெஞ்சமதற்கு - மனத்துக்கு, உரைத்திட - சொல்ல (அந்த மனம்) பேசாதால் - ஒன்றும்பேசாதிருந்தமையால், (மேலும்) சாற்றும் - அறிவுசொல்லாநின்றது, எ-று.

(பொ - ரை) மாதர்களுடைய சரீரநிலையையும் தமதுடம்பின் பெருநிலையையும் ஆராய்ந்தறிந்து நின்று குற்றம்நீங்க நான் என்னும் அகங்காரம் நீங்கும்படியமைந்து சதாசாரியரது அருணிலையிற் பணியப்பெற்ற மேலோர் வாசனையையணிந்த அழகிய இளமைபொருந்திய மாதர்களுடைய குவிந்த ஸ்தநங்களின்மேல் விருப்பங்கொண்டு மயக்கமடைந்து மனம் பதையாவென்று சந்தேக மொழியும்படி மனத்துக்குச்சொல்ல (அந்தமனம்) ஒன்றும் பேசாதிருந்தமையால் மேலும் அறிவுசொல்லாநின்றது.

(வி - ரை) பங்கம் - தோஷம், நான் இறக்க - அகங்காரம் நசிக்க நான் என்பதறால் குருவருள்கைகூடும், அருவிடில் பலதுன்பங்கள்விளையும் இதனை "நானென்னுமோரகந்தை யெவர்க்குவந்து நலிந்தவுடன் சகமாயை நானுவாகித்-தான் வந்து தொடருநீந்தால் வளரும்துன்பசாகரத்தின்பெருமை யெவர் சாற்றவல்லார்" என்றகூறிய ஸ்ரீதாயுமானசுவாமிகள் திருவாக்கானுமுணர்க பின்னார்கள மின்னற்கொடிபோன்ற அழகாகிய மாதர்கள், கொதித்தல் - பதைத்தல், சங்கை - சந்தேகம்.

புலன்கலங்கி மனமயங்கி யறிவழிந்து
நிலைதளர்ந்து பொறியுமெத்த
வலம்வந்து மெயதளர்ந்து கண்ணிருண்டு
வாய்சமுறி யாவிநின்ற
நிலைகலங்கி மரணமுறும் வேதனையைப்
பார்த்திருநீ யேயல்லாற்
பலரறிய வொண்ணுத மரணவதை
வருமுன்னம் படியாய் நெஞ்சே. (65)

(ப - ரை.) புலன்கலங்கி - ஐம்புலன்கள் தத்தம் நிலைதடுமாறி, மனம்மயங்கி - மனம்மயக்கமடைந்து, அறிவு அழிந்து-

அறிவுகெட்டு, பொறியும் - ஐம்பொறிகளும், நிலைதளர்ந்து - தத்தம் நிலைசோர்ந்து, மெத்த அலம்வந்து - மிகவும்வருந்தி, மெய்தளர்ந்து - சரீரம்மெலிந்து, கண் இருண்டு - கண்கள் இருளடைந்து, வாய் குழறி - வாய்தடுமாறி, ஆவி நின்ற நிலை கலங்கி - உயிர்நின்ற நிலைபெயர்ந்து, மரணமுறும் - மரணமடையுங்காலத் துண்டாகிற, வேதனையை - துன்பத்தை, பரம் அறியும் நிலை யயல்லால்-பரம்பொருளாகிய இறைவனறிதற்குரிய நிலையுடைத்தாதலேயன்றி, பிறர் அறிய வொண்ணாது - வேறுபிறபலரறியவொண்ணாது (ஆதலால்) மரணவத்தை வருமுன்னம் - அந்த மரணத்துன்பம் வருதற்குமுன்பே, நெஞ்சே - மனமே, படியாய் - நீ குருவருளில்படிந்து உய்யுக்கடவாய், எ - று.

(பொ - ரை.) ஐம்புலன்கள் தத்தம் நிலைதடுமாறி மனம் மயக்கமடைந்து அறிவுகெட்டு ஐம்பொறிகளும் தத்தம் நிலை சோர்ந்து மிகவும் வருந்தி சரீரமெலிந்து கண்கள் இருளடைந்து வாய்தடுமாறி உயிர்நின்றநிலை பெயர்ந்து மரணமடையுங் காலத்துண்டாகிற துன்பத்தைப் பரம்பொருளாகிய இறைவனறிதற்குரிய நிலையுடைத்தாதலேயன்றி, வேறுபிற பலரறிய வொண்ணாது (ஆதலால்) அந்த மரணத்துன்பம் வருதற்குமுன்பேமனமே நீ குருவருளில்படிந்து உய்யக்கடவாய்.

(வி - ரை.) இச்செய்யுளில் மரணகாலத்தி லுண்டாகிற துன்பமிகுதி கூறினார். இதற்குதாரணமாக, "பரணமாகிய பெண்டிருஞ் சுற்றமும் பண்டு தங்கையிற்றந்த, இரணமான வைகொண்டிடவிவரைவிட் டியமபடாரிவிணைகும், மரணவேதனையாக ராலறியலா மயங்கியைம்புலனந்தக, காணம் யாவையுங் கலக்கிட வருந்துயர்கடவுளே யறிகிற்பான்" "வந்திடுமோணத்துன்ப மறிந்துரைசெய்யப்போமோ, உந்திமேலேயும்பித்து முணர்வொடுபொறிகலங்கி, நந்திடா விருளே மூடிநாவுலர்ந்தலமந்தென்னே, தூந்தமாவிறப்பிற்றுன்டம் பல

(பொ - ரை.) கூட்டிலிருந்து பறந்துபோன பிறவையைப் போல இந்தச் சீவனும் உதிரம்படிந்த இவ்வுடம்பைவிட்டு நீங்கினால் இந்தவுடம்பு போகும்வழியை எனனென்று சொல் வேன். பிசாசுகள் நடனஞ்செய்கிற மயானத்தில் நரிநாய்கள் விருந்துண்டு (களிப்பால்) நடனஞ்செய்ய நாள்கள் வருமுன் னமே குருவருளை யடையக்கடவை யென்று அறிவு கூற மன மானது சிலசொற்களை சொல்லாநின்றது.

(வி - ரை ) கூட்டைவிட்டுப் பறந்துபோகிற பறவைபோல இந்த வுடம்பைவிட்டு உயிர்நீங்கிவிட்டால், இவ்வுடம்பு சுட லையிற்சேர்ந்து நாய் நரி முதலானவைகளுக்கிரையாகும் என் பது கருத்து. "குடம்பை தனித்தொழியப் புட்பறந்தற்றே, உடம்போடுயிரிடை நட்பு" "எரியெனக் கென்னும்புழுவோ வெனக் கென்னுமிந்த மண்ணும், சரியெனக் கென்னும் கழு கோவெனக்கென்னுந் நான் புசிக்க, நரியெனக் கென்னும் புன்னாயெனக் கென்னுமிந்நாறுடலைப், பிரியமுடன் வளர் த்தேனிதனாலென்னபேறெனக்கே" என்ற மேலோர் திரு வாக்குகளை இவ்விடத்திற் குதாரணமாகக்கொள்ளலாம்.

திண்ணமிரு மென்றேகந் தன்னை நரிதின்
பது நிசமோ செப்பா யென்ன
பெண்ணிலெனும் தந்தை யனையை சுற்றமுட
னுண்டவனும் பெற்ற சேயும்
கண்ணின் எனதிர் சொந்த மென வாழ்வருயி
ரிழந்தவுடன் கழுகு நாயு
மெண்ணரிய புழுவுடன்மண்சொந்தமெனு
முடற் சொந்த மென்றாய் நெஞ்சே. (67)

(ப-ரை.) திண்ணம்மிகும் - வலிமிகுந்த, என் தேகந்தனை - என்னுடம்பை, நரிதின்பது நிசமோ - நரிதின்பது உண்மை யாமோ, செப்பாய் என்ன - சொல்லுவாயென்று மனமே

ட்க, (அறிவு சொல்லாநின்றது,) பெண்ணிறொடு - மனைவியுடன், தந்தை - தகப்பன், அன்னை - தாய், சுற்றமுடன் - உறவினரோடு, ஆண்டவனும் - யஜமானனும், பெற்றசேயும் - பெற்றபிள்ளையும், கண்ணின்எதிர் - கண்ணுக்கெதிரே, சொந்தமெனவாழ்வர் - சொந்தமென்று வாழ்வார்கள், (இவர்களெல்லாரும்) உயிர் இழந்தவுடன் - உயிரையிழந்தவுடனே, கழுகும் - கழுகுகளும், நாயும் - நாய்களும், எண் அரிய - எண்ணுதற்கரிய, புழுவுடன் - புழுக்களோடு, மண் - மண்ணும், சொந்தம் என்னும் - (இந்தவுடம்புக்கு நாங்களே) சொந்தக்காரர்கள் என்று சொல்லுதற்குரிய, உடல் - உடம்பை, சொந்தம் என்றாய் - (உனக்கு) சொந்தமென்று சொல்லுகின்றனையே, நெஞ்சே - பேதைமனமே, எ-று.

(பொ - ரை.) வலிபிருந்த என்னுடம்பை நரிதின்பது உண்மையாமோ சொல்லுவாயென்று மனம்கேட்க, (அறிவு சொல்லாநின்றது) மனைவியுடன் தகப்பன் தாய் உறவினரோடு யஜமானனும் பெற்றபிள்ளையும் கண்ணுக்கெதிரே சொந்தமென்று வாழ்வார்கள். இவர்களெல்லாரும் உயிரையிழந்தவுடனே கழுகுகளும் நாய்களும் எண்ணுதற்கரிய புழுக்களோடு மண்ணும் (இந்த வுடம்புக்கு நாங்களே) சொந்தக்காரர்கள் என்று சொல்லுதற்குரிய உடம்பை (உனக்குச) சொந்தமென்று சொல்லுகின்றனையே பேதைமனமே.

(வி - ரை) இவ்வுடம்பு உயிருள்ளளவும் மனைவிமக்கள் முதலானவர்களுக்குச சொந்தமாகவும், உயிர்நீங்கினபிறகு நாய்நரி முதலானவற்றுக்குச சொந்தமாகவும் உபயோகப்படும்பொருளாயிருக்கின்றது என்பது கருத்து. இவ்வுடலைத் தாய்தந்தை மனைவிமுதலோர் தமக்குச சொந்தமென்பது போலவே, நாய்நரி நமன்முதலோர் தமக்குச சொந்தமென்றிருப்பார் என்பதை "நாய் நமதென நரிநமதெனப்பிதா, தாய் நமதென நமன்றன தெனப்பிணிப், பேய் நமதெனமண்மதி

களும் தாவுகின்ற அக்கினியும் நரிகளும் ஆகி, இவைகளுக்கு இரையாகிப் பூமியில் பலபேர் மயானத்தைச் சேர்க்கண் டும் இவைந்தழுது அழுது சற்குருநாதனது திருவடியையடை ந்திலேயே என்று அறிவுசொல்லவே மனமானது சொல்லா நின்றது.

(வி - ரை) அரிவையர் - பருவங்குறியாமல் மாதர் எனப் பொதுப்படநின்றது. உயிர் உடலைவிட்டு நீங்கிலும் முன் பாயிருந்தார் யாவரும் ஒன்றென்றிகழுமொழிபோலா என் பதை "என்பெற்ற தாயரும் என்னைப் பிணமென்றிகழ்ந்து விட்டார், பொனபெற்ற மாதரும் போவென்று சொல்லிப் புலம்பிவிட்டார், கொல்பெற்ற மைந்தரும் பின்வரவும்வந்து குடமுடைத்தார், உன்பற்றொழிய வொருபற்றுமில்லையுடை யவனே" என்று ஸ்ரீபட்டினத்தடிகளும் பகர்ந்துள்ளார்.

இந்த வுடலிறக்கு முன்னே யேகமெய்க்குரு
பதம் பணியா திருப்பேனோ வென
றந்த முடனுரைத் திடவே யறிவுரைக்கும்
பாலகனு மஞ்ஞானத்தில்
பந்த முற்றுக் காளைப்பருவ மாத்தையர நக
காளனும் பருவ முற்றுப்
வந்தவு மூடற நரையாய் நரையாதிவ
தெனவு மொன்றுசே ராதாற்றுமே. (69)

(ப - ரை.) இந்த உடல் இறக்கிமுன் - இந்தவுடம்பு நசிப் பதற்குமுன்பே, ஏககுரு - ஒப்பற்ற சற்குருவின், பதம்-திரு வடியை, பணியாது இருப்பேனோ என்ற-வணங்காதிருப்பே னோவென்று, அந்தமுடன் உரைத்திடவே-அழகாகச்சொன்ன வுடனே, அறிவு உரைக்கும்-அறிவுசொல்லாநின்றது (எப்படி யெனின்,) பாலகனும் - நீ பாலகனாயிருக்கும் பருவத்தில், அஞ்ஞானத்தில பந்தம் உற்றுய - அஞ்ஞானத்தில் கட்டுப்

பட்டிருந்தாய், காளையாய் - யவ்வனபருவத்தில், பாத்தை யருக்கு ஆளானாய் - பொதுமாதருக்கு ஆளாகியுமன்றும். பகைத்தழுப்புவந்தவுடன் - பகையாகிய முதுமைப்பருவம் வந்தவுடனே, உடல்தளர்வாய் - உடம்புதளரப் பெறுவாய். (உன்காலமெல்லாம் இப்படி கழியுமானால் நெஞ்சே - மனமே. நிலை அறிவது - உண்மை நிலையை நீயறிவது, என்று - எக் காலத்தில், வாதுற்றுயே - (வீணாக என்னோடு) வாதாடுகின்றனையே, எ-று.

(பொ - ரை.) இந்தவுடம்பு நசிப்பதற்குமுன்பே ஒப்பற்ற சற்குருவின் திருவடியை வணங்காதிருப்பேனோ என்று ஆழ் காகச சொன்னவுடனே அறிவு சொல்லாநின்றது எப்படியெனின், நீ பாலகனாயிருக்கும் பருவத்தில் அஞ்ஞானத்தில் கட்டுப்பட்டிருந்தாய் யவ்வனபருவத்தில் பொதுமாதருக்கு ஆளாகியுமன்றாய் பகையாகிய முதுமைப் பருவம்வந்த டனே உடம்பு தளரப்பெறுவாய் உன்காலமெல்லாம் இப்படி கழியுமானால் மனமே உண்மைநிலையை நீயறிவது எக்காலத் தில்? வீணாக (என்னோடு) வாதாடுகின்றனையே.

(வி - ரை) இச்செய்யுட்கு "பாலகனாயஞ்ஞானத்தழுந்து வனற்காளையாய்ப்பாவையர்மாதரால், சாவவருந்துமன்விருத்தன் முனகிக் குடும்பத்தாற்றளர்ந்துசாவன், எவலிவனெக்காலத் தென்செய்வான் மாயக்கூத்திருந்தவாறே, ஞாலமெலாமாடப் ங்காய்ப்பொறிமேளமாய் மனப்பேய்நடிக்குமன்றே" என்ற மேலோர் செய்யுளை உதாரணமாகக் கொள்ளலாம்.

எனவுரைக்க நெஞ்சமது காளையெனும்
பருவமது வேகினலித்
தனமுதலோடிணை விளக்கும் கவலையதும்
பிறகு குருநாட்கண புற்றே

தினம் பணிந்து நிலைபெறுவே னெனவறிவு
செப்பு மிடர் செறிந்தே துன்பக்
கனலடா வுடற்றளர்வ தன்றிபுவி
யாசை நிலை காணலாமோ. (70)

(ப - ரை.) என உரைக்க - என்றிவ்வாறு அறிவுசொல்ல, நெஞ்சமது - மனமானது, காலையெனும் பருவமது ஏகினால் - பால்வயபருவம் நீங்கினால், இ - இந்த, தனம் முதல் ஈடணை விளைக்கும் - பொன் முதலியவற்றின் இசையையுண்டாக்குகிற, கவலை அறும் - கவலையொழியும், பிறகு - அதின்பின்பு, குரு தாட்கு - சற்குருவின் திருவடிகளுக்கு, அன்பு உற்று - அன்பு பூண்டு, தினம்பணிந்து - நாள்தோறும் வணங்கி, நிலைபெறுவேன் - உண்மைநிலையை அடைவேன், என - என்றுசொல்ல, அறிவுசெப்பும் - அறிவுசொல நின்றது, (எப்படியெனின்) இடர்செறிந்து - இடர்மிகுந்து, துன்பகனல் அடா - துன்பமாகிய அக்கினிதகிக்க, (அதனால்) உடல் தளர்வது அன்றி - உடம்புதளர்வதல்லாமல், புவி ஆசை - பிரபஞ்ச விருப்பங்கொண்ட காலத்தில், நிலை-உண்மைநிலையை, காணலாமோ - அறியக்கூடுமோ, எ-று,

(பொ - ரை) என்றிவ்வாறு அறிவுசொல்ல மனமானது யவ்வனபருவம் நீங்கினால் இந்தப் பொன்முதலியவற்றின் இசையையுண்டாக்குகிற கவலையொழியும அதன் பின்பு சற்குருவின் திருவடிகளுக்கு அன்புபூண்டு நாள்தோறும் வணங்கி உண்மை நிலையையடைவேன் என்றுசொல்ல அறிவுசொல்லாநின்றது எப்படியெனின், இடர்மிகுந்த துன்பமாகிய அக்கினிதகிக்க அதனால் உடம்புதளர்வதல்லாமல் பிரபஞ்சவிருப்பங்கொண்ட காலத்தில் உண்மைநிலையை அறியக்கூடுமோ.

(வி - ரை.) தனமுதலீடணை-பொன்னாசை முதலியமூவாசைகள், அவைபொன்னாசை, மண்ணாசை, பெண்ணாசை என்பன, "பொன்னிலமாதராசை பொருந்தினர்" என்றார்பிறரும்.

கவலை யற்றே யுட னடுங்கிக் கனபிணிமே
லாமூப் புக் காலந் தன்னைக்
குவலயத்தி லேகவலை யில்லாக் காலமென
மூப்பதிலே குருவின் றாளைத்
தவமிசையிற் பெறுவனென வுரைத்தனை சித்
தங் குவியத் தகுமோ வுன்ற
னவையி னுடலிடை சாயா திருக்குமோ
கண்குழிமே னடுமோ நெஞ்சே. (71)

(ப - ரை) கவலை உற்று - கவலையிருந்து, உடல் நடுங்கி - உடம்பு நடுக்கமடைந்து, கனபிணிமேலாம் - பெரியபிணிகள் அதிகரிக்கிற, மூப்புக்காலந்தன்னை - முதுமைப்பருவத்தை, குவலயத்தில் - உலகத்தில், கவலையில்லாக்காலம் என - கவலையற்ற காலமாகக்கருதி, மூப்பதிலே - அந்த மூப்புப்பருவத்திலே, குருவின்றாளை - சற்குருவின் திருவடியை, தவம் இசையின் - (என் முற்காலத்) தவப்பயனாகியபுண்ணியமிருந்தால், பெறுவன் என உரைத்தனை - பெறுவேனென்று சொல்லினை, நெஞ்சே - மனமே, (அக்காலத்தில்) சித்தம் - (பகுமுகமாய் விரிந்திருக்கிற) மனமானது, குவியத்தகுமோ - ஒருமுகமாய்க் குவியவொன்றுமோ, உன்றன் - உனது, நவையின் உடல் - பழுதுபட்ட உடம்பானது, இடை - இடையில், சாயாதிருக்குமோ - சாயாமலிருக்குமோ, கண் - கண்ணானது, குழிமேல் நடுமோ - புருவமத்தியாகிய குழியிடத்தில் நாட்டம் வைக்குமோ, எ-று.

(பொ - ரை) கவலையிருந்து உடம்பு நடுக்கமடைந்து பெரியபிணிகள் அதிகரிக்கிற முதுமைப்பருவத்தை உலகத்தில் கவலையற்ற காலமாகக்கருதி அந்த மூப்புப்பருவத்திலே சற்குருவின் திருவடியை (என் முற்காலத்) தவப்பயனாகிய புண்ணியமிருந்தால் பெறுவேனென்று சொல்லினை மனமே (அக்

காலத்தில்) பகுமுகமாய் விரிந்திருக்கிற மனமானது ஒரு முகமாய்க்குவிய வொண்ணுமோ உனது பழுதுபட்டவுடம் பானது இடையில் சாயாமலிருக்குமோ கண்ணானது புரும மத்தியாகிய குறியிடத்தில் நாட்டம்வைக்குமோ.

(வி - ரை.) முதுமைப்பருவத்தில் ஆசைகளெல்லா மடங்கிக் கவலையற்றிருப்பேன், அப்பொழுது சற்குருபாதத்தை யாசிரயித்துய்வேன் என்ற மனத்தைப்பார்த்து, அக்காலத்தில் உன்னுடல் முதலானவை தளர்ந்து துன்பநெருப்பால் பரிக்கப்படுவையே, அப்போது நீ சற்குருவைச் சிந்திக்கமாட்டாய், இப்பொழுதே சிந்தித்துய்வாயாகவென்று அறிவு சொல்லியது என்பது கருத்து. மூப்புப்பருவம் மிக்க [illegible] யுள்ளதென்பதை, "குந்திநடந்து குனிந்தொருகை கோலூன்றி, நொந்திருமியேங்கி நுரைத்தேறி, வந்துந்தி, யையாறு வாயாறு பாயாமுனெஞ்சமே, யையாறுவாயாலமை" என்று ஐயடிகள் காடவர்கோனயனார் அருளிச்செய்த க்ஷேத்திர வெண்பாவானுமுணர்க.

இளமை யெனும் பருவமதிற் சற்குருவைக்
கிட்டாமலிருந்து தேகந்
தளருமுது மூப்பதனிற் பெறுவனென
வுரைத்தது மெய்தளர்ந்து நாளு
மிளமையற்ற தொண்ணூறு வயதுடையான்
மங்கைமண மிசைந்து கூடி
வளம்பெறுவே னென்ற தொக்கு நெஞ்சே
யுரைத்த தெனவழங்கு மன்றே. (72)

(ப - ரை.) இளமையெனும் பருவமதில் - இளமையென்று சொல்லப்படுகிற பருவத்தில், சற்குருவைகிட்டாமலிருந்து - சற்குருவையடையாமலிருந்து, தேகம் தளரும் - சரீரம் தளர்கின்ற, முதுமூப்பதனில் - முதுமைப்பருவத்தில், பெறுவன்

[redacted] உரைத்தது - அடைவேனென்றுசொன்னது, மெய்த ளர்ந்து - சரீரந்தளர்ந்து, நாளும் இளமையற்ற-நாள்தோறும் இளமைப்பருவங்குறைந்துபோன, தொண்ணூறுவயது உடையான் - தொண்ணூறுவயதுடைய ஒருவன், மங்கை - ஒரு மங்கைப்பருவப்பெண்ணை, மணமிசைந்து-மணம்செய்து, கூடி - அவளைசேர்ந்து, வளம் பெறுவேன் என்றது ஒக்கும்-சுகாநுபவசெல்வத்தைப் பெறுவேனென்று சொன்னதை நிகர்த்திருக்கின்றது, நெஞ்சே நீ உரைத்தது - மனமே நீ சொன்னது, என - என்று, வழங்கும் - மேலும் அறிவுசொல்லா நின்றது, எ-று.

(பொ - ரை.) இளமையென்று சொல்லப்படுகிற பருவத்தில் சற்குருவையடையாமலிருந்து சரீரந்தளர்கின்ற முதுமைப்பருவத்தில் அடைவேனென்று சொன்னது சரீரந்தளர்ந்து நாள்தோறும் இளமைப்பருவங் குறைந்துபோன தொண்ணூறுவயதுடைய ஒருவன் ஒரு மங்கைப்பருவப்பெண்ணை மணம்செய்து அவளைசேர்ந்து சுகாநுபவச செல்வத்தைப் பெறுவேனென்று சொன்னதை நிகர்த்திருக்கின்றது மனமே நீ சொன்னது என்று மேலும் அறிவுசொல்லாநின்றது.

(வி - ரை.) இளமைப்பருவங்கழிந்து முதுமைப்பருவம் வந்தபிறகு சற்குருவையடைந்துய்வேனென்று நீ சொன்னது, தொண்ணூறுவயசுடைய கிழவன் இளமைப்பருவப்பெண்ணை மணஞ்செய்து கூடிசசுகிப்பேனென்று சொல்லுவதை யொக்குமென்பது கருத்து.

பாளைவிரி கமுகனைய கந்தரத்தாண்
  மூலைமயக்கம் பற்றியுன்றன்
காளை யெனும் பருவமது கழித்து விடிற்
  பின்னயர்வு கதிக்கு மாசான்
மூளை கினைந் தானந்த பரவசமாய்
  நாட்கழித்தாற் றளர்ந்து சாகும்

வேளையினு மானந்தக் களிகூரு
 மிதற்றுணிவாய் விரைவி னெஞ்சே. (73)

(ப - ரை) பாளைவிரி - பாளைகள் விரித்த, கமுகு அனைய - கமுகமரத்தைநிகர்த்த, கந்தரத்தாள் - கழுத்தையுடையவளாகிய ஒருமாதின், மூலமயக்கம்பற்றி - தனமயக்கங்கொண்டு, உன்றன் - உன்னுடைய, காளையெனும் பருவமது கழித்துவிடின்-காளைப்பருவத்தைக் கழித்து விட்டால், பின்-பின்பு, அயர்வுகதிகரும் - அயர்வு அதிகரிக்கும், ஆசான்தாளை நினைந்து - சற்குருவின் திருவடியை நினைத்து, ஆநந்தபரவசமாய்-ஆநந்தபரவசப்பட்டு, நாள்கழித்தால் - உனது வாழ்நாள்களைக்கழித்தாயானால், தளர்ந்துசாகும் வேளையினும் - நீ உடல் தளர்ந்து இறக்குஞ் சமயத்திலும், ஆநந்தக்களி - ஆநந்தக்களிப்பானது, கூரும் - மிகும், (ஆதலால்) நெஞ்சே - மனமே, விரைவின் - விரைவாக, இதில் துணிவாய் - இதில்துணிவு கொள்வாயாக, எ-று.

(பொ - ரை) பாளைகள் விரிந்த கமுகமரத்தை நிகர்த்த கழுத்தையுடையவளாகிய ஒரு மாதின் தனமயக்கங்கொண்டு உன்னுடைய காளைப்பருவத்தைக் கழித்துவிட்டால், பின்பு அயர்வு அதிகரிக்கும், சற்குருவின் திருவடியைநினைத்து ஆநந்தப்பரவசப்பட்டு உனது வாழ்நாள்களைக் கழித்தாயானால் நீ உடல் தளர்ந்து இறக்குஞ் சமயத்திலும் ஆநந்தக்களிப்பானது மிகும் ஆதலால் மனமே விரைவாக இதில் துணிவு கொள்வாயாக.

(வி - ரை.) கமுகு - பாக்குமரம், கந்தரம் - கழுத்து, கூர்தல் - மிகுதல்.

உன்னுடைய காளையெனு மிப்பருவந்
 தனிற் குருதாளுகநதி ராமத்
கனவிலொடு பொன் புவிமேற் காதலுற்று
 நெஞ்சகமே கலங்கி மெத்த

வின்ன லனுபவித்தா யென்றிட நெஞ்ச
மியம்பு மிந்தப் பருவ மேக
வின்ன நெடு நாட் செல்லு மிதிற் பெறுவே
னென வறிவு மியம்புமன்றே. (74

(ப - ரை.) உன்னுடைய காளையெனும் இப்பருவந்தனில் [redacted] யவ்வனமென்று சொல்லப்படுகிற இந்தப்பருவத்தில் குருதாள் உகந்திடாமல் - சற்குருவின் யாதிருவடியை விரும்பாமல், கன்னியொடு பொன்புவிமேல், பெண்பொன்மண் என்பவற்றின்மேல், காதல் உற்று - ஆசையிருந்து, நெஞ்சமே - நெஞ்சமே, கலங்கி - கலக்கமடைந்து, மெத்த - மிகவும், இன்னல் அனுபவித்தாய் என்றிட - துன்பமநுபவித்தாயென்று அறிவுசொல்ல, நெஞ்சம் இயம்பும் - மனமானது சொல்லாநின்றது, இந்தப்பருவம் ஏக - இந்தப்பருவங்கழிய இன்னம் நெடுநாள்செல்லும் - இன்னம் அநிகநாள்செல்லும் இதில் - இதற்குள்ளே, பெறுவேன் என - குருதிருவடியைப் பெற்றுக்கொள்வேனென்று மனங்கூற, அறிவும் இயம்பும் அறிவும் சொல்லாநின்றது, எ-று,

(பொ - ரை.) உனது யவ்வனமென்று சொல்லப்படுகிற இந்தப் பருவத்தில் சற்குருவின் திருவடியை விரும்பாமல் பெண் பொன்மண் என்பவற்றின்மேல் ஆசையிருந்து நெஞ்சமே கலக்கமடைந்து மிகவும் துன்பமனுபவித்தாயென்று அறிவு சொல்ல மனமானது சொல்லாநின்றது. இந்தப் பருவங்கழிய இன்னம் அதிகநாள் செல்லும் இதற்குள்ளே குருதிருவடியைப் பெற்றுக்கொள்வேனென்று மனங்கூற அறிவும் சொல்லாநின்றது.

(வி - ரை.) உகந்திடுதல் - அன்புவைத்தல், புவி - மண், இன்னல்-துன்பம். நெஞ்சமானது ஐம்புலன்வழியே சென்று முன்று பலதீமைகளை விளைத்து அல்லலுற்றழிவது இயல்பாதலால் "கன்னியொடு பொன்புவிமேற்காதலுற்று நெஞ்சக

மேகலங்கி மெத்த, வின்னலனுபவித்தனே'' என்று அறி கூறியது. அது தன்குற்றமேயென்று ஒப்புக்கொண்டமை இக்காலப்பருவம் நீங்கி இனிவரும் முதுமைப்பருவத்திலே னும் அக்குற்றங்களையெல்லாமொழித்து குருவருளைப்பெற முயல்வேன் என்று பகர்ந்தது. எல்லாத்தீமை விளைவுக்கும் நெஞ்சே காரணமென்பதைப் பின்வரும் விண்ணப்பக்கலி வெண்பாவால் நன்குணரலாம்.

---

என்னலடியேனெனக்குளொளியர்ம
லுள்ளபடியேயுரைக்கின்றேன் - விள்ளுறுமியான் (1)
வன்சொலுடனன்றிவள்ளலுனதன்பர்தமக்
கின்சொலுடன்பணிந்தொன்றீந்ததிலை-புன்சொலெனும் (2)
பொயயுரைக்கவென்றூற்புடையெழுவேனன்றியொரு
மெய்யுரைக்கவென்றும்விழைந்ததிலை - வையகத்தில் (3)
பொல்லாவிரதந்தைப்போற்றியுவந்துண்பதல்லாற்
கொல்லாவிரதந்தைக்கொண்டதிலை - யல்லாதார் (4)
வன்புகழைக்கேட்கமனங்கொண்டதல்லாம
னின்புகழைக்கேட்கநினைந்ததிலை - வன்புகொண்டே (5)
இன்னடிக்கு நுண்ணிடையார்க்கேவல்புரிந்தேனலதுன்
பொன்னடிக்குத்தொண்டுபுரிந்ததிலை - பண்ணுகின்ற (6)
செக்குற்றவெள்ளனவேசிந்தைநசிந்தேனலது
முக்குற்றந்தன்னைமுறித்ததிலை - துக்கமிகுந் (7)
தாவில்வலங்கொண்டுசஞ்சரித்தேனல்லதுநின்
கோவில்வலங்கொள்ளக்குறித்ததிலை - பூவுலகில் (8)
வன்னிதியோர்முன்கூப்பிவாழ்த்தினேனன்றியுன்றன்
சன்னிதியிற்கைகூப்பித்தாழ்ந்ததிலை - புன்னெறிசேர் (9)
தீண்டரொடுகூடிவியந்ததல்லாலையாநின்
றொண்டரொடுங்கூடிச்சூழ்ந்ததிலை - கண்டவரைக் (10)

கன்றுமுகங்கொண்டுகெடுகடுத்துப்பார்ப்பதல்லா
லென்றுமுகமலர்ச்சியேற்றதிலை - நன்றிபெறு (11)
நன்னெஞ்சருஞ்சீர்நவிலவதுகேட்டுக்
கன்னெஞ்சைச்சற்றுருகவைத்ததிலை - பின்னெஞ்சாப் (12)
புண்ணீர்மைகொண்டதமிழ்ப்பாமாலையாற்றுதித்துக்
கண்ணீர்கொண்டுன்பாற்கனிந்ததிலை - தண்ணீர்போல் (13)
நெஞ்சமுருகிநினைக்குமன்பர்போலெனைநீ
யஞ்சலெனநின்றுளடுத்ததிலை - விஞ்சுலகர் (14)
மெய்யடியனென்றுரைக்கவிந்தகநின்பொன்னடிக்குப்
பொய்யடிமைவேடங்கள்பூண்டதுண்டு - நையவிரு (15)
மையல்வினைக்குவந்தமாதாபுணர்ச்சியெனும்
வெய்யவினைக்குழியில்வீழ்ந்ததுண்டு - துய்யர்தமை (16)
என்னொன்றுமில்லாதியல்பாகப்பின்னொன்று
முன்னொன்றுமாகமொழிந்ததுண்டு - மன்னுகின்ற (17)
யானஞ்செயாதுமனநொந்திரப்போர்க்குத்
தானஞ்செய்வாரைத்தடுத்ததுண்டு - ஈனமிலா (18)
பாரமுறையாதுவழக்கினிடையோர
பாரமுறைத்தேமலைந்ததுண்டு - ஈரமிலா (19)
நெஞ்சருடன்கூடிநேசஞ்செய்தும்மடியே
அஞ்சமெனத்தாழாதுதாழ்ந்ததுண்டு - எஞ்சலிலாத் (20)
தாயனையாயுன்றனதுசன்னிதிநேர்வந்துமொரு
நேயமுமில்லா * தொதிபோனின்றதுண்டு - தீயவினை (21)
மாளாக்கொடியமனசசெல்வர்வாயிலிற்போய்க்
கேளாச்சிவநிந்தைகேட்டதுண்டு - மீளாத (22)
பொல்லாப்புலையரைப்போற்புண்ணியரைவன்மதத்தாற்
சொல்லாவசையெல்லாஞ்சொன்னதுண்டு-நல்லோரைப் (23)

* உதி - ஒதியெனமரீஇயது.

போற்றாதுபொய்யுடம்பைப்போற்றிசசிவபூசை
யாற்றாதுசோற்றுக்கலேந்ததுண்டு - தேற்றாமல் (24)
சபதீதாவென் றிகிரப்போர்தமைக்கண்டு
கோபந்தானாய்ப்போற்குரைத்ததுண்டு - பாபத்தால் (25)
சிந்தையொன் றுவாக்கொன் றுசெய்கையொன் றாய்ப்போகவி
யெந்தைநினையேத்தாதிருந்ததுண்டு - புந்தியிந்த [ட்டே
சால்லைக்கல்லென் றுநல்லோர்சொன்னபுதநிகேளாம
லெல்லைக்கல்லொதேயிருந்ததுண்டு - தொல்லைவினை (27)
யாழ்த்தாமயவுலகிலற்பமகிழ்சசியினால்
வாழ்த்தாமலுன்னைமறந்ததுண்டு - தாழ்த்தாமற் (28)
பூணுவெ லும்பணியாய்ப்பூண்டோய்நின்பொன்னடிக்
காணுதுட்டீழ்நாள்கழிததது ணடு - மாணுத (29)
காடுபோன்ஞாலக்கடுநடையிலேயிருகான்
மாடுபோனின் றுழைத்துவாழ்ந்ததுண்டு - நாடகன்ற (30)
கள்ளிவாயோயகுபெருயகாமக்கடுங்காட்டிற்
கொள்ளிவாய்ப்பேய்போற்குதித்ததுண்டு-ஒள்ளியரால் (31)
எள்ளுண்டமாயாவியல்புறுபுன் கல்வியெலாய
கள்ளுண்டபித்தனைப்போற்கற்றதுண்டு - நள்ளுலகிற் (32)
சீராசையெங்குஞ்சொற்சென் றிடவேவேண்டுமெனும்
பேராசைப்பேய்தான்பிடித்ததுண்டு - சீராவென் (33)
சாதகமோதீவினையின்சாதனையோநானறியேன்
பாதகமென் றுவெனக்குப்பாற்சோறு - தீதகன்ற (34)
தூய்மைநன் றுமென்கின் றதொன்மையினோர்வாய்க்கினிய
வாய்மையென் றுவென் னுடையவாய்குமட்டும் -காய்மைதரும்
கற்குநிகராங்கடுஞ்சொலன் றிநன்மதுரச
சொற்குமெனக்கும்வெகுதூரங்காண் - பொற்புமிகு (36)
நண்ணியுனைப்போற்றுகின் றநல்லோர்க்கினியசிவ
புண்ணியமென் றுவெனக்குப்போராட்டமண்ணுனை (37)

நாளுரையாதேத்துகின் றநல்லோர்மேலில்லாத
கோளுரையென்றுலெனக்குக்கொண்டாட்ட-நீளநினை (38)
நேசிக்குநல்லநெறியாஞ்சிவாகமநூல்
வாசிக்கவென்றுலென்வாய்நோகும் - காசிக்கு (39)
நீடிக்கிலாறுநேர்ந்தறிவதல்லதுவீண்
வேடிக்கையென்றால்விடுவதில்லை - நாட யவில் (40)
வீறுமுனதுவிழாசசெயினுமவவிடஞ்சா
றுயிரஙகாதமாஙகண்டாய - மாறுன (41)
போகமென்றுலுள்ளகட்பூரிக்குமன்றிசிவ
யோகமென்றுலென்னுடையவுண்ணடுஙகுஞ்-சோகமுடன்
துள்ளலொழிந்தென்னெஞ்சஞ்சோர்ந்தழியுஙகாலத்திற்
கள்ளமென்றுளளேகளித்தெழும்பு - மள்ளனெறி (43)
செல்லென்றுலன்றிசசிவசிவாவென்றொருகாற்
சொல்லென்றுலென்றனக்குத்துக்கம்வரு - நல்லநெறி (44)
வாம்பலன்கொண்டோர்கள்மறந்தும்பெறுக்கொடிய
சோம்பலென்பதென்னுடையசொந்தஙகா - வேணம்பனுடன்
எற்றேவிரக்கமென்பதென்றனைக்கண்டஞ்சியெனை
யுற்றோரையுமுடன்விட்டோடுஙகாண - சற்றேனும் (46)
ஆக்கமேசேராதறத்தாரத்துகின்றவெறுந்
தூக்கமேயென்றனக்குசசோபனங்கா - வாக்கமிகும் (47)
ஏறுடையாய்நீறணியாவினர்மனையாயினும்வெண்
சோறுகிடைத்தாலதுவேசொர்க்கஙகாண் - வீறுகின்ற (48)
வாழ்வுரைக்குநல்லமனத்தர்தமையஞ்ஞான்றுந்
தாழ்வுரைத்தலென்னுடையசாதகஙகாண் - வேள்விசெயுந்
தொண்டர்தமைத்துதியாத்துட்டரைப்போலெப்பொழுதுஞ்
சண்டையென்பதென்றனுக்குத்தாய்தந்தை - கொண்டவெழு
தாதாடவோங்கித்தலையாடவஞ்சரொடு
வாதாடவென்றுலென்வாய்துடிக்குங் - கோதாடச் (51)

சிந்தைதிரிந்துழலுந்தீயரைப்போனற்றரும
சிந்தையென்பதென்பழையநேசங்காண் - முந்தநினை (52)
எண்ணென்றலன்றியிடர்செய்திடுங்கொடிய
பெண்ணென்றாற்றாக்கம்பிடியாது - பெண்களுடன் (53)
புல்லென்றாற்றேகம்புளகிக்குமன்றிவிட்டு
நில்லென்றலென்கண்ணினீரரும்பும் - புல்லரென்ற (54)
பேர்க்கும்விருப்பெய்தாதபெண்பேய்கள்வெய்யசிறு
நீர்க்குழியேயான்குளிக்குநீர்ப்பொய்கை-சீர்க்கலையின் (55)
எருப்பெண்மாதரிடைக்குளளிர்தென்று
மாருப்புண்ணுக்கேயடிமைநான் - றேருத (56)
வெஞ்சலஞ்செய்மாயாவிகாரத்திலுல்வரும்வீண்
சஞ்சலமெல்லாமெனதுசம்பந்த - மஞ்செழுத்தை (57)
நேர்ந்தார்க்கருள்புரியுநின்னடியர்தாமேயுஞ்
சார்ந்தாலதுபெரியசங்கட்ட - மார்ந்திடுமான் (58)
காந்தும்விழிப்புலியைக்கண்டதுபோனல்லகுண
சாந்தமெனைக்கண்டாற்றலைசாய்க்கு - மாந்தகையோர் (59)
நீசரமனத்திற்செறிவித்திடும்புருட
தீரமெனைக்கண்டாற்சிரிக்குங்காண் - கோரமதைக் (60)
காணிலுலகிற்கருத்துடையோர்கொள்ளுகின்ற
நாணமெனைக்கண்டுநாணுங்கா - ணேனுலகில் (61)
ஞானங்கொளாவெனதுநாமமுனாத்தாலுமபி
மானம்பயங்கொண்டுமாய்ந்துவிடு - மானவுன்றன் (62)
மேண்மைக்குலத்தொண்டர்கீர்த்திபெறக்கொண்ட
வாண்மைக்குாரனென்றலாகாது - வாண்மைபெறும் (63)
ஐயனின்றாட்பூசிக்குமன்பருள்ளத்தன்பிற்கும்
பொய்யனெனக்கும்பொருத்தமிலை - வையகத்தோர் (64)
இல்லெனினுஞ்சும்மாயேகின்றேனென்றொருசொற்
சொல்லெனினுஞ்சொல்லத்துணிவுகொளே - னல்லையெம்

கீயென்பாரன்றியன்னையென்பயத்தானின்சோற்றி
லீயென்பதற்குமிசையாள்கா - ணீயென்பார்க் (66)
கெண்ணுஞ்சிலர்மண்ணிடுவாரெனக்கந்த
மண்ணுங்கொடுக்கமனம்வாராது - அண்ணுறுமென் (67)
இல்லையடைந்தேயிரப்பவருக்கெப்போது
மில்லையென்பதென்வாய்க்கியல்புகாண் - டொல்லுலகை (68)
ஆண்டாலுமன்றியயலார்புன்கீரைமணிப்
பூண்டாலுமென்கண்பொறுக்காது - நீண்டவெழு (69)
தீபமுறுவோர்திசையோர்மற்றியாவர்க்கும
கோபமதுநான்கொடுக்கிலுண்டு - ஆபதனில் (70)
வீசங்கொடுத்தெட்டுவீசமெனப்பிறரை
மோசஞ்செயநான்முதற்பாதம் - பாசமுளோர் (71)
கைக்குடையவேயெழுதிக்கட்டிவைத்தவிவ்வுலகப்
பொய்க்கதையேயான்படிக்கும்புத்தகங்கண் - மெய்ப்படுசின்
மந்திரத்தையுச்சரியாவாயுடையேனென்போலத்
தந்திரத்திற்கைதேர்ந்தவரில்லை - யெந்தையினி (73)
ஏதென்றுரைப்பேனிருங்கடல்சூழ்வையகத்திற்
றீதென்பதெல்லாமென்சுற்றங்கா - ணோதுகின்ற (74)
நஞ்சமெலாங்கூட்டிநவின்றிடினுமொவ்வாத
வஞ்சமெலாமென்கைவசங்கண்டா - யஞ்சவரும் (75)
வீணவமாம்வஞ்சவினைக்குமுதலாகின்ற
வாணவமேயென்காணியாட்சியதாம் - மாணிறைந்த (76)
நல்லறிவேயென்னைவெறுநாட்பகைத்ததன்றிமற்றைப்
புல்லறிவேயென்னுட்பொருள்கண்டாய் - சொல்லவொணா
வேடருக்குங்கிட்டாதவெங்குணத்தாலிங்குழலு
மூடருக்குள்யானேமுதல்வன்காண் - வீடடுத்த (78)
மேதையர்கள்வேண்டாவிலங்காய்த்திரிகின்ற
பேதையென்பதென்னுரிமைப்பேர்கண்டாய் - பேதமுற

ஓதுவதென்பற்பலவாயுற்றதவத்தோர்நீத்த
தீதுகளெல்லாமெனதுசெல்வங்கா - ணாதலினால் (80)
பேயினையொத்திவ்வுலகிற்பித்தாகிநின்றவிந்த
நாயினைநீயாண்டிடுதனன்கன்றே - யாயினுமுன் (81)
மண்ணாருயிர்களுக்கும்வானவர்க்குந்தானிரங்கி
யுண்ணாக்கொடுவிடமுமுண்டனையே - யெண்ணாமல் (82)
மேவித்தவளவெற்பெடுத்தவெய்யவரக்கன்றனக்கும்
வாய்த்தவரமெல்லாம்வழங்கினையே - சாய்த்தமனை (83)
வீம்புடையவன்முனிவர்வேள்விசெய்துவிட்டகொடும்
பாம்பையெல்லாந்தோளிற்பரித்தனையே - நாமபெரியர் (84)
அஞ்சேமென்றுணவத்தாலேற்றவிருவரையு
மஞ்சேலென்றாட்கொண்டருளினையே - துஞ்சுபன்றித் (85)
தாயாக்குருளைகளின்றுன்பம்பொறாதன்று
தாயாய்முலைப்பாலுந்தந்தனையே - வாயிசைக்குப் (86)
பாண்டியன்முன்சொல்லிவந்தபாணன்பொருட்டடிமை
வேண்டிவிறகெடுத்துவிற்றனையே - யாண்டொருநாள் (87)
ஆய்முடியாத்துன்புகொண்டவந்திக்கோராளாகித்
தூய்முடிமேன்மண்ணுஞ்சுமந்தனையே - யாய்துயர (88)
மாகவஞ்சேர்மாணிக்கவாசகருக்காய்க்குதிரைச
சேவகன்போல்வீதிதனிற்சென்றனையே - மாவிசயன் (89)
வில்லடிக்குநெஞ்சம்விரும்பியதல்லாலெறிந்த
கல்லடிக்குமுள்ளங்களித்தனையே - மல்லலுறும் (90)
வில்வக்கிளையுதிர்த்தவெய்யமுசுக்கலையைச
செல்வத்துரைமகனாய்ச்செய்தனையே - சொல்லகலின் (91)
நீளுகின்றநெய்யருந்தநேரொலியைமூவுலகு
மாளுகின்றமன்னவனாயாக்கினையே - கோளகல (92)
வாய்ச்சங்குலாவிழைத்தவாய்ச்சிலம்பிதன்னையுயர்
கோச்செங்கட்சோழனெனக்கூட்டினையே - யேசறுநல் (93)

* ஆறடுத்தவாகீசர்க்காம்பசியைக்கண்டுகட்டுச்
சோறெடுத்துப்பின்னே சுமந்தனையே - கூறுகின்ற (94)
தொன்மைபெறுஞ்சுந்தரர்க்குத்தோழனென்றுபெண்பரவை
சன்மனைக்குத்தூதுநடந்தனையே - நன்மைபெற (95)
இற்றென்றவிற்றென்றுவைத்தனையோபேர்கள்செய்த
குற்றங்குணமாகக்கொண்டனையே - பற்றுலகில் (96)
அன்புடையதாயர்களோராயிரம்பேரானாலு
மன்புடையாய்நின்னைப்போலாவாரோ - வின்பமுடன் (97)
ஈண்டவருந்தந்தையர்களெண்ணிலரேயாயினுமென்
றாண்டவனேநின்னைப்போலாவாரோ - பூண்டகைகொள்
எனுடையநின்னையன்றியெந்தைபிரானேயுன்
றணையெனக்குற்றதுணையாருமில்லை - நாணமுளன் (99)
ஆனேன்பிழைகளனைத்தினையுமையாநீ
தானேபொறுக்கத்தகுங்கண்டாய் - மேனேற்ற (100)
மாற்றனுக்குமெட்டாமலர்க்கழலோய்நீயென்னைக
கூற்றனுக்குக்காட்டிக்கொடுக்கற்க - பாற்றவள (101)
நந்தக்கடற்புவியினானின்னும்வன்பிறவிப்
பந்தக்கடலழுந்தப்பண்ணற்க - முந்தைநெறி (102)
நின்றேயுன்பொற்றாணினையாதார்பாழ்மனையிற்
சென்றேயுடலோம்பச்செய்யற்க - நன்றேநின் (103)
றோங்குநெறியோருளத்தமர்ந்தோயென்றன்னைத்
தீங்குநெறியிற்செலுத்தற்க - வீங்கடங்கி (104)
வாழியெனத்தான்வழுத்தினுமென்சொற்கடங்கா
வேழைமனத்தாலிளைக்கின்றேன் - வாழுமரக் (105)
கோடேறும்பொல்லாக்குரங்கெனவேபொய்யுலகக
காடேறுநெஞ்சாற்கலங்குகின்றேன் - பாடேறும் (106)

* ஆறு - நதி, வழி.

உள்ளறியாமாயையெனுமுட்பகையாற்காமமெனுங்
கள்ளறியாதுண்டுகவல்கின்றேன் - றெள்ளுறுமென் (107)
கண்ணனையாய்நின்றாட்கமலங்களைவழுத்தா
மண்ணனையார்பாற்போய்மயங்குகின்றேன் - திண்ணமிலாக்
காதர்வாந்தன்பக்கவலைக்கடல்வீழ்ந்தே
யாதரவொன்றின்றியலைகின்றே - னோதுமறை (109)
யாத்தரெனுமுன்றனடியார்தமைக்கண்டு
நாத்திகஞ்சொல்வார்க்குநடுங்குகின்றேன்-பாத்துண்டே (110)
உய்வதறியாவுளத்தினேனுய்யும்வகைச
செய்வதறியேன்திகைக்கின்றேன் - சைவநெறி (111)
யுண்ணியம்புரின்கருணையுண்டோவிலையோவென்
றெண்ணியெண்ணியுள்ளமிளைக்கின்றேன் - மண்ணினிடைக்
கொன்செய்கைகொண்டகொடுங்கூற்றங்குறுகிலதற் [னை
கென்செய்வோமென்றெண்ணியெய்க்கின்றேன்-முன்செய்வி
யாமறையாநோயாலகமெலிவுற்றையோநான்
றாமரையினீர்போற்றயங்குகின்றேன் - றாமமுடி (114)
வள்ளலருள்கொடுக்கவந்திலனேயின்னுமெனா
வுள்ளமதுநீராயுருகுகின்றே - னெள்ளலுறு (115)
மாலைபாய்ந்தின்னுமெனவந்திடுமோவென்றுநெஞ்ச
மாலைபாய்ந்துள்ளமழிகின்றேன் - ஞாலமிசைக் (116)
கோட்பாரவாழ்க்கைக்கொடுஞ்சிறையினின்றென்னை
மீட்பாரிலாதுவிழிக்கின்றேன் - மீட்பாகும் (117)
ஆற்றிலொருகாலுமடங்காசசமுசாரச்
சேற்றிலொருகாலும்வைத்துத்தேய்கின்றேன் - றேற்றுமயற்
பாகமுறுவாழ்க்கையெனும்பாலைவனத்துன்னருணீர்த்
தாகமதுகொண்டேதவிக்கின்றேன் - மோகமதிற் (119)
போய்ப்படுமோர்பஞ்சப்பொறிகளால்வெம்பாம்பின்
வாய்ப்படுமோர்தேரையைப்போல்வாடுகின்றேன்-மாய்ப்பவரு

மீன்போலுமாதர்விழியால்வலைப்பட்ட
மான்போலுஞ்சோர்ந்துமடங்குகின்றேன்-கான்போல (121)
வீற்றுமுலகவிகாரப்பிரளயத்திற்
றேற்றுஞ்சுழியுட்சுழல்கின்றே - னாற்றவுநான் (122)
இப்பாரிலுன்மேலன்பில்லெனினுமன்பனென
வொப்பாரியேனுமுடையேன்காண் - டப்பாய்ந்த (123)
மட்டுவிடேனுன்றாண்மறக்கினும்வெண்ணீற்றுநெறி
விட்டுவிடேனென்றனைக்கைவிட்டுவிடே-றூட்டனென (124)
மாலுந்திசைமுகனும்வானவ்ரும்வந்துதடுத்
தாலுஞ்சிறியேனைத்தள்ளிவிடேல் - சாலுலக (125)
வாதனைகொண்டோனென்றுமற்றெவராலும்வந்து
போதனைசெய்தாலுமெனைப்போக்கிவிடே - னீதயவு (126)
சூழ்ந்திடுகவென்னையுநின்றொண்டருடன்சேர்த்தருள்க
வாழ்ந்திடுகநின்றாண்மலர். (127)



சிலை யிரும்பை யுடலாகக் கொண்டோரு
 மித்துணிவாய்ச் செப்பார்நீயும்
பலவிதமாய் மொழியலுற்று யிப்பருவங்
 கழிய வெகு பகலுண்டென்று
யலமிகுத்த நெஞ்சகமே யாவியிந்தத்
 தோற் கூட்டி லனந்தகால
மிலகு மென நினைத்தனையோ வென்றறிவு
 வுட னிலையை யியம்பு மன்றே (75)

(ப - ரை.) சிலை இரும்பை - கல்லையும் இரும்பையும், உட லாகக்கொண்டோரும் = உடம்பாகக்கொண்டவர்களும், இத் துணிவாய்செப்பார் - இவ்வளவு துணிவாய்ப் பேசமாட்டார்

கள், நீயும் பலவிதமாய் மொழியலுற்றாய் - நீயும் பலவகை யாய்ப் பேசுகின்றாய், இப்பருவம்கழிய - இந்த இளமைப் பருவங்கழிவதற்கு, வெகுபகல் உண்டு என்றாய் - அநேக நாட்களிருக்கின்றனவென்றாய், அலம்மிகுத்த நெஞ்சகமே - சலனமிகுந்தமனமே, ஆவி - உயிரானது, இந்த தோல்கூட்டில் - இந்தத்தோற்கூட்டிலே, அனந்தகாலம் - முடிவற்றகாலம், இலகும் [illegible] - நிலைத்திருக்குமென்று, நினைத்தனையோ என்று - நினைத்தாயோவென்றுசொல்லி, அறிவு - அறிவானது, உடல் நிலையை இயம்பும் - மேலும் சரீரத்தின் நிலைமையைச சொல்லாநின்றது, எ-று.

(பொ - ரை.) கல்லையும் இரும்பையும் உடம்பாகக் கொண்டவர்களும் இவ்வளவு துணிவாய்ப் பேசமாட்டார்கள். நீயும் பலவகையாய்ப் பேசுகின்றாய். இந்த இளமைப்பருவங்கழிவதற்கு அநேக நாட்களிருக்கின்றன வென்றாய். சலநமிகுந்த மனமே, உயிரானது இந்தத்தோற்கூட்டிலே முடிவற்றகாலம் நிலைத்திருக்குமென்று நினைத்தாயோ வென்றுசொல்லி அறிவானது மேலும் சரீரத்தின் நிலைமையைசசொல்லாநின்றது.

(வி - ரை.) செப்புதல் - சொல்லுதல், அலம் - சலநம், அனந்தகாலம் - முடிவற்றகாலம், இலகுதல் - விளங்குதல், சரீரத்தின்நிலைமை - நிலையாமை, இயம்புதல் - சொல்லுதல்.

பொங்குலிடு விற் புனலில்வருங் குமிழி
　யெறிந்த சிலைமாறுத் தீயிற்
றங்குமென வைத்த சில வெண்ணெயொடு
　மின்னலையுந் தரணிதன்னிற்
பகைமிலா திருக்கு மிதுநித்திய மென்
　றுரைத்தாலும பருந்தோற்பீற்ற
லங்கமதி லுயிர் நிலையென் றுருரைப்பார்
　நீயுரைத்தா யலைந்த நெஞ்சே. (76)

(ப - ரை.) மஙகுல் இடுவில் - மேகத்தில் தோன்றுகின்ற இந்திரவில்லையும், புனலில்வரும்குமிழி - நீரில் தோன்றுகின்ற குமிழியையும், எறிந்த சிலை - ஆகாயத்திலெறிந்த கல்லையும், மாருதியில் தஙகும் எனவைத்த சிலவெண்ணெயொடு - தணியாத நெருப்பிலிருக்கு மென்றெண்ணிவைத்த சிலவெண்ணெயுடனே, மின்னலையும் - மின்னற்கொடியையும், தாணிதன்னில் - உலகத்தில், பங்கம் இல்லாது இருககும் - பழுதில்லாமலிருக்கும், இவை நித்தியம் என்று உரைத்தாலும் - இவைகள் நித்தியப்பொருள்களென்று சொன்னாலும், பருந்தோல் பீற்றல் அஙகமதில் - பெரியதோலாற் செய்யப்பட்டுத் துளைகளோடுகூடிய இந்த வுடம்பில், உயிர் நிலையென்று-உயிரானது நிலையாயிருக்குமென்று, ஆர் உரைப்பார் - யார் சொல்வார் (ஒருவருஞ் சொல்லமாட்டார்) அப்படியிருக்க, நீ உரைத்தாய் - நீ மாத்திரம் நிலைத்திருக்குமென்று சொன்னாயே, அலைந்த நெஞ்சே - வீணேயலைந்த மனமே, எ-று.

(பொ - ரை.) மேகத்தில் தோன்றுகின்ற இந்திரவில்லையும் நீரில் தோன்றுகின்ற குமிழியையும் ஆகாயத்தில் எறிந்த கல்லையும் தணியாத நெருப்பிலிருக்கு மென்றெண்ணிவைத்த சில வெண்ணெயுடனே மின்னற்கொடியையும் உலகத்தில் பழுதில்லாமலிருக்கும் இவைகள் நித்தியப்பொருள்களென்று சொன்னாலும் பெரியதோலாற் செய்யப்பட்டுத் துளைகளோடுகூடிய இந்த வுடம்பில் உயிரானது நிலையாயிருக்குமென்று யார்சொல்வார்? (ஒருவருஞ் சொல்லமாட்டார்) அப்படியிருக்க நீ மாத்திரம் நிலைத்திருக்குமென்று சொன்னாயே வீணேயலைந்த மனமே.

(வி - ரை.) மங்குல் - மேகம், மங்குலிடுவில் - மழைக்காலத்தில் மேகத்தில் தோற்றுகிற பசசைவில், இதற்கு இந்திர தநுசு என்றுபேர், புனலில்வருங்குமிழி - நீர்மேல் உண்டாகிறகுமிழி, அங்கம் - உடம்பு, பீற்றல் - துளை,

காத்திரத்தி னேற்றிருந்தா ரின்றிறந்தா
 ரெனு முலகைக் கருதிப் பார்த்தோர்
மாத்திரைப் போதும் வாழ்வதரி தென்வே
 யுணர்ந் திதனுள் மௌனமுறுங்
கோத்திரத்தி னுச்சியிற் சென்றமுதருந்த
 நாட் கழிக்கிற் குறித்தே துன்பப்
பாத்திரமா யலேயலுற்றாய் நெஞ்சேயென்
 றறிவு மினி பகரு மன்றே. (77)

(ப - ரை.) காத்திரத்தில் - சரீரத்தில், நேற்று இருந்தார்- நேற்றிருந்தவர், இன்று இறந்தார் என்னும் - இன்று இறந்து போனார் என்னும், உலகை - இவ்வுலகின்நிலையில்லாமையை, கருதிபார்த்தோர் - ஆலோசித்துப் பார்த்த மகான்கள், மாத்திரைப்போதும்-ஒரு மாத்திரைப்பொழுதாயினும், வாழ்வது- உயிர் வாழ்ந்திருப்பது, அரிது என உணர்ந்து-அருமையான தென்றறிந்து, இதனுள் - இதற்குள்ளே, மௌனம் உறும் - மோனநிலையானது விருத்தியடைதற்குரிய, கோத்திரத்தின் உச்சியில்சென்று - மலையினுச்சியிற்போய், அமுது அருந்த- அமிர்தபானம் பண்ணும்பொருட்டே, நாள் கழிக்கில் - தமது வாழ்நாளைக் கழிப்பார்களானால், நெஞ்சே-மனமே, குறித்து- நீ அதனையறிந்திருந்தும், துன்பபாத்திரமாய் - துன்பத்துக் கிடமாகி, அலேகின்றாய் என்று - அலைகின்றனையே யென்று, இனி - மேலும், அறிவு - அறிவானது, பகரும் - சொல்லா நின்றது, எ-று.

(பொ - ரை.) சரீரத்தில் நேற்றிருந்தவர் இன்று இறந்து போனார் என்னும் இவ்வுலகின் நிலையில்லாமையை ஆலோசித்துப்பார்த்த மகான்கள் ஒரு மாத்திரைப்பொழுதாயினும் உயிர்வாழ்ந்திருப்பது அருமையாமென்றறிந்து இதற்குள்ளே மோனநிலையானது விருத்தியடைதற்குரிய மலையினுச்சியிற்போய் அமிர்த பானம் பண்ணும்பொருட்டே தமது

வாழுநாளைக் கழிப்பார்களானால் மனமே நீ அதனையறிந்திருந்தும் துன்பத்துக்கிடமாகி அலைகின்றனையே யென்று மேலும் அறியானது சொல்லாநின்றது.

(வி - ரை.) காத்திரத்தில் சேற்றிருந்தார் இன்றிறந்தார் என்பதை "நெருநலுளனொருவனின்றில்லை யென்னும்-பெருமையுடைத்திவ்வுலகு" என்று திருவள்ளுவரும் "இன்றுளேனாளையில்லே னென்செய்வான்றோன்றினேனே" என்று திருநாவுக்கரசு சுவாமிகளும் கூறியுள்ளார். காத்திரம்-சரீரம், கோத்திரம் - மலை, அமிர்தபானம் - சந்திரமண்டலத்தினின்றும் ஊறுகிற அமிர்தத்தைப்பருகுதல், துன்பப்பாத்திரம்-துன்பத்துக்கேயுரியவன்.

தினைப் பொழுதும் வாழ்வதரி தென்றறிந்த
  தெருளுடை யோர் சிந்தை தன்னி
னினைத்தவுட னனந்த நிலையணுகிப்
  பேதமற நிற்பர் நீயுங்
கனத்த பெருங் காரணதிக் கனலவிய
  குரு வருளைக் கருதி மோன
தனத்தினைத்தேடா திருந்து நாட் கழித்தா
  யென நெஞ்சஞ் சாற்று மம்மா. (78)

(ப - ரை.) தினைப்பொழுதும் - தினையளவாகிய காலமும், வாழ்வது - உலகில் உயிர் வாழ்ந்திருப்பது, அரிது என்று அறிந்த - அருமையாமென்றுணர்ந்த, தெருள் உடையோர்- தெளிவுடையவர்களாகிய ஞானிகள், சிந்தை தன்னில் நினைத்தவுடன் - மனத்தில் நினைத்தமாத்திரத்தில், ஆநந்தநிலை அணுகி - இன்பநிலையையடைந்து, பேதம் அறநிற்பர் - வேற்றுமையற்று நிற்பார்கள், நீயும்-நீயும், கனத்தபெருங்காரணதி- மிகப்பெரியவாகிய அந்தக்கரண முதவியவைகளாகிற, [redacted] ல் அவிய - நெருப்பவியும்படி, குருவருளைகருதி - சற்குரு

வின் அருளைத்தியானித்து, மோனதனத்தினை - மௌனநிலை யாகிய செல்வத்தை, தேடாதிருந்து - தேடாமலிருந்துகொ ண்டு, நாள்கழித்தாய் என - உன்வாழ்நாட்களை வீணேகழி த்துவிட்டாயே யென்று அறிவுசொல்ல, நெஞ்சம்சாற்றும் - மனம்சொல்லாநின்றது, எ-று.

(பொ - ரை.) இனையளவாகிய காலமும் உலகில் உயிர் வாழ்ந்திருப்பது அருமையாமென்றுணர்ந்த தெளிவுடையவர் களாகிய ஞானிகள் மனத்தில் நினைத்தமாத்திரத்தில் இன்ப நிலையையடைந்து வேற்றுமையற்று நிற்பார்கள். நீயும் மிகப் பெரியவாகிய அந்தக் கரணமுதலியவைகளாகிற நெருப்ப வியும்படி சற்குருவின் அருளைத்தியாநித்து மௌனநிலையாகிய செல்வத்தைத் தேடாமலிருந்துகொண்டு உன்வாழ்நாட்களை வீணேகழித்துவிட்டாயே யென்று அறிவுசொல்ல மனம் சொல்லாநின்றது.

(வி - ரை.) இனைப்பொழுதும்வாழ்வ தரிதென்பதை "வரு கணத்துவாழ்ந்திடுமோ விழுமோவிந்த மலக்கூடென்றறி ஞரெலாம் வருந்தக்கேட்டும், அருகணைத்துக் கொளப் பெண்பேயெங்கே மேட்டுக்கடைத்திடவெண் சோறெங்கே யாடையெங்கே, யிருகணுக்கும் வியப்பெங்கே வசதியான விடமெங்கேயென்று திரிந்தினைத்தேனல்லால், ஒருகணத்து முனைநினைந்ததுண்டோ வென்னையுடையானே யெங்ஙன நாலுய்யுமாறே" என்னும் ஸ்ரீஇராமலிங்கசுவாமிகள் திருவா க்காலுமுணர்க. இனைப்பொழுது - க்ஷணிககாலம், தெருள் - தெளிவு, கரணதிக்கனல் - அந்தக்கரண முதலியவைகளாகிற நெருப்பு, அந்தக்கரணதிகளை நெருப்பு என்றது அவைபிற வித்துன்பமாகிய தாபத்திரயத்தை யுண்டாக்குதலாலென்க.

தேக மெனு முடலிறக்கு மென்ற மொழி
நெஞ்சுணர்ந்து தேக நொந்து

சாக நெறியிலதா யோருபாய மில்லை
யோ வெனவே சாற்றக் கேட்டு
யூகமுற்ற நெஞ்சேயென் றறிவுரைக்கு
நீர்க்குமிழி யொழிந்திடாமற்
பாகமுடன் பூண்விசிக்க நினைந்தவனை
யொக்கு மெனப் பகரு மாதோ. (79)

(ப - ரை.) தேகம் என்னும் - தேகமென்று சொல்லப்பட்ட, உடல் - உடம்பானது, இறக்கும் என்றமொழி - அழிந்துபோம் என்று அறிவுசொன்ன வார்த்தையை, நெஞ்சு உணர்ந்து - நெஞ்சம் அறிந்து, தேகம் நொந்து - சரீரம் தளர்ந்து, சாகும்நெறி இலதாய் - இறக்கும் வழியில்லாததாகிற, ஓர் உபாயம் இல்லையோ என - ஒருதந்திரமில்லையோவென்று, சாற்றக்கேட்டு - சொல்லக்கேட்டு, அறிவு - அறிவானது, யூகம் உற்றநெஞ்சேயென்று உரைக்கும் - யுக்தியிற் சிறந்த மனமே யென்றழைத்தாச சொல்லுகின்றது, (எப்படியென்றால்) (நீ சொல்லுவது) நீர்க்குமிழி ஒழிந்திடாமல் - நீர்க்குமிழியானது அழியாதிருக்கும்படி, பாகமுடன் பூண்விசிக்க - பக்குவமாகப் பூண்கட்டுதற்கு, நினைந்தவனை ஒக்கும் - நினைத்தவொருவனது புத்தியை நிகர்க்கும், எனபகரும் - என்றுமேலும் அறிவுகூறுகின்றது, எ-று.

(பொ - ரை.) தேகமென்று சொல்லப்பட்ட உடம்பானது அழிந்துபோம் என்று அறிவு சொன்னவார்த்தையை நெஞ்சம் அறிந்து சரீரம் தளர்ந்து இறக்கும் வழியில்லாததாகிற ஒரு தந்திரமில்லையோவென்று சொல்லக்கேட்டு அறிவானது யுக்தியிற்சிறந்த மனமேயென்றழைத்தாச சொல்லுகின்றது. எப்படியென்றால் நீ சொல்லுவது நீர்க்குமிழியானது அழியாதிருக்கும்படி பக்குவமாகப் பூண்கட்டுதற்கு நினைத்தவொருவனது புத்தியைநிகர்க்கும் என்றுமேலும் அறிவுகூறுகின்றது.

(வி - ரை.) இறத்தல் - மரணமடைதல், நெறி-வழி, யூகம்-யுக்தி, பாகம் - பக்குவம், விசித்தல் - கட்டுதல், பகர்தல்-சொல்லுதல்.

அதுவிதுவென் றுணரறியாப் பொருளமைத்த
  நாட் கழியி லண்டத் தோடு
மதிகதிரோடே பூத மழியு மெனிற்
  பெண்யோனி வழியே சிந்து
முதிர முருண்டிட்ட வுண்டையாந்தேக
  மலபாண்ட மொழிந்திடாமற்
பதிய விருந்திட யூகமுண்டாமோ
  நெஞ்சகமே பகர்ந்திடாயே. (80)

(ப - ரை.) அது இது என்று உணரறியாபொருள் - அது இது என்று சுட்டியறிய வொண்ணாதபொருளால், அமைத்த-ஏற்படுத்தப்பட்ட, நாள்கழியின் - வாழ்நாள் கழிந்துவிட்டால், அண்டத்தோடும் - ஆகாயத்தில் ஓடுகிற, மதிகதிரோடே - சந்திர சூரியர்களுடனே, பூதம் - ஐம்பெரும் பூதங்களும், அழியும் எனின்-அழிந்துபோவனவென்றால், பெண்யோனிவழியே சிந்தும் உதிரம் - பெண்ணின் யோனிவழியாய் ஒழுகின உதிரம், உருண்டிட்ட உண்டையாம் - உருண்டு திரண்டவுண்டையாகிற, தேகம் மலபாண்டம் - தேகமென்று சொல்லப்படுகிற மலபாண்டமானது, ஒழிந்திடாமல் - அழிந்திடாமல், பதிய இருந்திட - நிலைபெற்றிருக்கும்படியான, யூகம் உண்டாமோ-யுக்தி யுண்டோ, நெஞ்சகமே-மனமே, பகர்ந்திடாய் - சொல்வாயாக, எ-று.

(பொ - ரை.) அது இது என்று சுட்டியறிய வொண்ணாத பொருளால் ஏற்படுத்தப்பட்ட வாழ்நாள் கழிந்துவிட்டால் ஆகாயத்தில் ஓடுகிற சந்திர சூரியர்களுடனே ஐம்பெரும் பூதங்களும் அழிந்துபோவனவென்றால் பெண்ணின் யோனி

வழியாய்ஒழுகின உதிரம் உருண்டுதிரண்ட வுண்டையாகிற தேகமென்று சொல்லப்படுகிற மலபாண்டமானது அழிந்திடாமல் நிலைபெற்றிருக்கும்படியான யுக்தியுண்டோ டினமே சொல்வாயாக.

(வி - ரை.) அதுவிது வென்றுணரறியாப்பொருள் - என்றது பிரமப்பொருளை, அண்டத்தோடு என்பதற்கு உலகங்களுடனே யென்றுரைப்பினும் பொருந்தும், பதியவிருந்திடல் - நிலைபெற்றிருத்தல்.

மெய்யெனவே யுரைக்கு மிந்தப் புழுக்கூட்டை
 நம்பி யிதின் மெலிந்திடாமற்
பொய்யெனு மிவ்வுட லிறக்கு மென்பதனை
 மறவாமற் பொருந்தினர் பின்
வையமெலா மழுந்தியதோ ராசையெனுங்
 கடல் வற்றி வடியுந் துன்பஞ்
செய்யு மந்தக் கவலையெனுந் திரையோயும்
 விரைவிலருள் தேடாய்நெஞ்சே. (81)

(ப - ரை.) மெய்யென உரைக்கும் - மெய்யென்று சொல்லப்படுகிற, இந்த புழுக்கூட்டை - இந்தப்புழுக்கூடாகிய உடம்பை, நம்பி - உறுதியாய் நம்பி, இதில் மெலிந்திடாமல்-இதனால் இளைத்திடாமல், பொய்யெனும் - பொய்யென்கிற, இவ்வுடல் இறக்கும் என்பதனை - இவ்வுடம்பு அழியுமென்பதை, மறவாமல் பொருந்தினல்-மறவாமல் மனத்திற்கொண்டால், பின் - பிறகு, வையம் எல்லாம் - உலகமுழுதும், அழுந்திய து - முழுகிக்கிடப்பதாகிய, ஓர் - ஒப்பற்ற, ஆசையென்னும் - ஆசையென்று சொல்லப்படுகிற, கடல் - கடலானது, வற்றிவடியும் - வற்றிவடிந்துபோகும், துன்பம்செய்யும்-துன்பத்தையுண்டாக்குகிற, அந்த கவலையென்னும் - அந்தக்கவலையென்கிற, திரை ஓயும் - அலைகள் அடங்கிப்போகும்

(ஆகையால்) நெஞ்சே - மனமே, விரைவில் - சீக்கிரமாக அருள்தேடாய் - திருவருளைத்தேடுவாயாக, எ-று.

(பொ - ரை.) மெய்யென்று சொல்லப்படுகிற இந்தப் புழுக்கூடாகிய உடம்பை உறுதியாய் நம்பி இதனால் இளைத்திடாமல் பொய்யென்கிற இவ்வுடம்பு அழியுமென்பதை மறவாமல் மனத்திற் கொண்டால் பிறகு உலகமுழுதும் முழுகிக்கிடப்பதாகிய ஒப்பற்ற ஆசையென்று சொல்லப்படுகிற கடலானது வற்றிவடிந்துபோகும். துன்பத்தையுண்டாக்குகிற அந்தக்கவலைகளென்கிற அலைகள் அடங்கிப்போகும் (ஆகையால்) மனமே சீக்கிரமாகத் திருவருளைத்தேடுவாயாக.

(வி - ரை.) மெய் - சரீரம், பொய்யாகிய சரீரத்தை மெய்யென்பது மங்கலவழக்கு, திரை - அலை, ஓய்தல்-அடங்குதல்.

என வுரைத்த மொழி கேட்ட நெஞ்சியம்பு
  மெண்ணிறந்த சமயந் தன்னிற்
றனிப் பொருளுக் கன்பான சமய மியம்
  பிடிலதனிற் சார்வே னென்ன
மனமயக்காய்ப் பரஞ்சுடரை வெகு விதமாய்
  வெவ்வேறாய் மதித்து நின்று
தினம்பணிவர் நிலையறியார் பேர்வேறாய்ப்
  பேசி நெஞ்சே தியங்குவரே. (82)

(ப - ரை.) எனவுரைத்த - என்று அறிவுசொல்லிய, மொழிகேட்ட - சொல்லைக்கேட்ட, நெஞ்சு இயம்பும் - மனம் சொல்லாநின்றது, (எப்படியென்றால்) எண் இறந்தசமயந் தன்னில்-அளவற்ற சமயசாத்திரங்களில், தனிபொருளுக்கு-ஒப்பற்ற பரம்பொருளுக்கு, அன்பான - அன்புள்ளதான சமயம் - சமயத்தை, இயம்பிடில் - சொன்னால், அதனில் சார்வேன் என்ன - அந்தசமயத்திற் சார்ந்திருப்பேனென்று

மனஞ்சொல்ல, மனமயக்காய்-மனமயக்கத்தையுடையவராய், பரஞ்சுடரை - பரஞ்சோதியை, வெகுவிதமாய் - அநேகவிதமாகவும், வெவ்வேறாய்-வெவவேறாயும், மதித்துநின்று -'எண்ணிநின்று, தினம்பணிவார் - நாள்தோறும் வணங்குவோர், நிலை அறியார் - உண்மை நிலையின்னதென்றறியமாட்டார், பேர்வேறாய்பேசி - (அந்தப்பொருளின்) பேர்வேறாகசசொல்லி, தியங்குவார் - திகைப்பார்கள், எ-று.

(பொ - ரை.) என்று அறிவுசொல்லிய சொல்லைக்கேட்ட மனம் சொல்லாநின்றது (எப்படியென்றால்) அளவற்ற சமய சாத்திரங்களில் ஒப்பற்ற பரம்பொருளுக்கு அன்புள்ளதான சமயத்தைசசொன்னால் அந்தச சமயத்திற் சார்ந்திருப்பேனென்று மனஞ்சொல்ல மனமயக்கத்தையுடையவராய்ப் பரஞ்சோதியை அநேகவிதமாகவும் வெவவேறாயும் எண்ணிநின்று நாள்தோறும் வணஙகுவோர் உண்மை நிலையின்னதென்றறியமாட்டார் அந்தப்பொருளின் பேர்வேறாகச சொல்லித்திகைப்பார்கள்.

(வி - ரை.) எண் இறந்த - கணக்கற்ற, சமயம் - சமயமார்க்கம், பணிதல் - வழிபடுதல், தியஙகுதல் - திகைத்தல்.

கண்ணிரண்டு மில்லாதார் சிலர் கரியி
 னுரு வதனைக் கரத்தா னீவித்
திண்ணமைந்த யானையுரு தாங்கள் கண்ட
 படியுரைத்துத் தியங்குவார் போற்
சண் முக பல் சமயமுடையோர் பரனைச்
 சாற்றி தினந்தவித்து நோகுந்
தண்மை யல்லாற் பரமிருக்கா திட முண்டோ
 வெனக்கருதித் தணிந்திடாரே. (83)

(ப - ரை.) கண் இரண்டும் இல்லாதார் சிலர் - இரண்டு கண்களுமில்லாதவராகிய சிலர், கரியின் உருவதனை - யானையினுருவத்தை; கரத்தால் நீவி - கையால் தடவி, திண் அமைந்த - வலியமைந்த, யானை உரு - யானையின் வடிவத்தை, தாங்கள் கண்டபடி உரைத்து - தாங்கள் பரிசித் தறிந்தபடியேசொல்லி, தியங்குவார்போல் - திகைப்பவர்போல, சண்முகபல்சமயமுடையோர் - ஆறுவழியாகிய பலசமயத்தையுடையோர், பரனை - பராபரனை தினம் - தினந்தோறும், சாற்றி-(என்தெய்வம் உன்தெய்வம் என்று வழக்கிட்டுப்) பேசி, தவித்துநோகும் தன்மை அல்லால் - தவித்து வருந்துகிற தாழ்வேயன்றி, பரம் இருக்காத இடம் உண்டோ-பரம்பொருளில்லாத இடமுண்டோ, எனக்கருதி - என்று நினைத்து, தணிந்திடார் - திருப்தியடையமாட்டார், எ-று.

(பொ - ரை ) இரண்டு கண்களுமில்லாதவராகிய சிலர் யானையினுருவத்தைக் கையால் தடவி வலியமைந்த யானையின் வடிவத்தைத் தாஙகள் பரிசித்தறிந்தபடியே சொல்லித்திகைப்பவர்போல, ஆறுவழியாகிய பலசமயத்தையுடையோர் பராபரனைத் தினந்தோறும் (என்தெய்வம் உன்தெய்வம் என்று) வழக்கிட்டுப்பேசி, தவித்து நோகும்தன்மை அல்லால் - தவித்து வருந்துகிற தாழ்வேயன்றிப் பரம்பொருளில்லாத இடமுண்டோ என்று நினைத்துத் திருப்தியடையமாட்டார்.

(வி - ரை.) கண்ணிரண்டுமில்லாதார் - குருடர் (அந்தகர்) கரி-யானை. துதிக்கையையுடையது என்பதுபொருள், கரம்-கை, நீவல் - தடவல், திண்மை - பலம், அது திண் [redacted] மை விகுதிகுறைந்து நின்றது, தண்மை - தாழ்வு.

வீதி தனில் விளையாடுஞ் சிறுபால
ரக மதனை விரும்பிச் செல்லும்
போதி லுயர் மாமதியைத் தங்கள் தங்க
ளுடன் வரவேபுகலல்போல

காத லுற்ற சமய மெலா மெனதுனதென்
றே பரத்தைக் கருதித் தர்க்க
வாத மிட வுழல்வ தல்லா லெவ்விடமு
மிறை யிருக்கும் வளங் காணாரே. (84)

(ப - ரை.) வீதிதனில் விளையாடும் - தெருவில்விளையாடுகிற, சிறுபாலர் - சிறுகுழந்தைகள், அகமதனை - தங்கள்வீட்டை, விரும்பி செல்லும்போதில் - விரும்பிப் போகுங்காலத்தில், உயர்மாமதியை - (ஆகாயத்தில்) உயர்ந்து தோன்றுகின்ற சிறந்த சந்திரனை, தங்கள் தங்களுடன்வரவே - தங்கள் தங்களோடு வரும்படி, புகலல்போல - அழைப்பதுபோல, காதல் உற்றசமயம் எல்லாம்-(தங்கள் தங்கள் சமயங்களில்) அபிமானம் வைத்த சமயிகளெல்லாரும், எனது உனது என்று - என்னது உன்னது என்று, பரத்தைக்கருதி-பரம்பொருளை நினைத்து, தர்க்கவாதமிட்டு உழல்வதல்லால்-தர்க்கவாதஞ்செய்துகொண்டு திரிவதேயன்றி, எவ்விடத்தும் - எவ்விடத்திலும், இறையிருக்கும் - இறைவனிருக்கிற, வளம்காணார் - தன்மையைக் காணமாட்டார்கள், எ-று.

(பொ - ரை) தெருவில்விளையாடுகிற சிறுகுழந்தைகள் தங்கள்வீட்டை விரும்பிப் போகுங்காலத்தில் (ஆகாயத்தில்) உயர்ந்து தோன்றுகின்ற சிறந்த சந்திரனைத் தங்கள் தங்களோடுவரும்படி அழைப்பதுபோலத் தங்கள் தங்கள் சமயங்களில் அபிமானம்வைத்த சமயிகளெல்லாரும் என்னது உன்னது என்று பரம்பொருளை நினைத்துத் தர்க்கவாதஞ்செய்துகொண்டு திரிவதேயன்றி எவ்விடத்திலும் இறைவனிருக்கிற தன்மையைக் காணமாட்டார்கள்.

(வி - ரை.) அகம் - வீடு, தர்க்கவாதம் - தர்க்கச்சண்டை, இறை - இறைவன், வளம் - தன்மை, பரம் - பரம்பொருள்.

எவர்க ளெதை யிறைஞ்சிடினும் பரஞ்சுடரே
யதிலிருப்ப தெனினு மெத்தக்

கவலையுறுஞ் சமயமதாற் பரமசுக
மடைவதற்குக் காணொணாது
தவமிசைந்த பரமகுரு நிலையிருக்கச்
சமயமதிற் சார்வதென்னிற்
சுவையினிய வமுதிருக்க மாழ்கிடவே
கள்ளுண்டதொக்கு நெஞ்சே. (85)

(ப - ரை.) எவர்கள் எதை இறைஞ்சிடினும் - எவர்கள் எந்தத்தெய்வத்தை வணங்கினாலும், பரஞ்சுடரே - பரஞ்சோதியே, அதில் இருப்பது எனினும் - அதற்குள்ளிருப்பதாயினும், மெத்தகவலை உறும் - மிகவும் கவலையடைதற் கேதுவாகிய, சமயமதால் - சமயப்பற்றினால், பரமசுகம் அடையும் நெறிகாணொணாது - மேலான இன்பத்தை யடையும்வழிகாணவொண்ணாது, தவம் இசைந்த - தவத்தொழிலமைந்த, பரமகுரு நிலையிருக்க - பரமாசாரியரது திருவருணிலையிருக்க, சமயமதில் சார்வது என்னில் - சமயநெறியிற் பொருந்துவதென்றால், சுவை இனிய அமுது இருக்க - இனியசுவையுள்ள அமிர்தமிருக்க, மாழ்கிட - மதிமயங்கும்படி, கள்ளுண்டது ஒக்கும் - கட்குடித்ததை நிகர்க்கும், நெஞ்சே - மனமே, எ-று.

(பொ - ரை.) எவர்கள் எந்தத் தெய்வத்தை வணங்கினாலும் பரஞ்சோதியே அதற்குள்ளிருப்பதாயினும் மிகவுங் கவலையடைவதற்கேதுவாகிய சமயப்பற்றினால் மேலான இன்பத்தையடையும் வழிகாணவொண்ணாது. தவத்தொழிலமைந்த பரமாசாரியரது திருவருணிலையிருக்கச் சமயநெறியிற் பொருந்துவதென்றால், இனிய சுவையுள்ள அமிர்தமிருக்க மதிமயங்கும்படி கட்குடித்ததை நிகர்க்கும் மனமே.

(வி - ரை.) இறைஞ்சல் - வழிபடல், தவம்-தவத்தொழில், மாழ்குதல் - மயங்குதல்.

இந்தவிதஞ் சமயநெறி யியம்பிடவே
நெஞ்சுனக்கு மிறையைப் பூசை

யந்தமுடன் புரியநெறி யருளாயென்
றிடவறிவு மறையுமாசா
னுந்தனக்கே யருள்புரிந்தா லந்தநிலை
யிற்பாரத்துக் குன்கண் ணென்னுங்
கந்தமலரினைச் சாத்தியுளம் பதியப்
பணிந்து மருள் காணலாமே. (86)

(ப - ரை.) இந்தவிதம் - இந்தப்பிரகாரமாக, சமயநெறி - சமயமார்க்கங்களை, இயம்பிட-அறிவானது எடுத்துசசொல்ல, நெஞ்சு உரைக்கும் - மனமானது சொல்லா நின்றது, (எப்படியென்றால்) இறையை - இறைவனை, அந்தமுடன்-அழகாக, பூசைபுரியும் நெறி - பூசைசெய்யும்வழியை, அருளாய் என்றிட - அருள்செய்யக் கடவாயென்று கூற, அறிவும் அறையும்- அறிவும் சொல்லாநின்றது, (எப்படியென்றால்) ஆசான் - சற்குரு நாதன், உந்தனக்கு அருள்புரிந்தால்-உனக்கு அருள் செய்தால், அந்த நிலையில் - அந்த நிலையில்நின்று, பரத்துக்கு- பரம்பொருளுக்கு, உன்கண் என்னும் - உன் அறிவென்கிற, கந்தமலரினை சாத்தி - மணமலரைச சமர்ப்பித்து, உள்ளம் பதியபணிந்து - மனம்பதிய வணங்கி, அருள்காணலாம்-திருவருளைக் காணலாகும், எ-று,

(பொ - ரை.) இந்தப்பிரகாரமாகச சமயமார்க்கங்களை அறிவானது எடுத்துசசொல்ல மனமானது சொல்லாநின்றது (எப்படியெனில்) இறைவனை அழகாகப் பூசைசெய்யும்வழியை அருள்செய்யக் கடவாயென்றுகூறி, அறிவும் சொல்லாநின்றது (எப்படியென்றால்) சற்குருநாதன் உனக்கு அருள் செய்தால் அந்த நிலையில்நின்று பரம்பொருளுக்கு உன் அறிவென்கிற மணமலரைச சமர்ப்பித்து மனம்பதிய வணங்கித் திருவருளைக் காணலாகும்.

(வி - ரை.) புரிதல் - செய்தல், அறைதல் - சொல்லுதல், கண்ணென்னும் - அறிவென்கிற. கந்தம் - பரிமளம், சாத்துதல் - அருச்சித்தல்.

பூசை புரிபவனாகி மலராகிப்
பலவாகிப் பூசை தன்னி
னேசமொடு மோதுகின்ற மந்திரமாயத்
தெய்வமுமா நிட்களத்தைப்
பாசமுற்ற சமயநெறி கடந்தநிரா
மயகுரு சொற்பதிந் தானந்த
வாசையொடு பணிவதலலால் வேறே யோர்
பூசைநெறி யறியே னெஞ்சே. (87)

(ப - ரை.) பூசைபுரிபவனாகி - பூசைசெய்பவனாகியும், மலர் ஆகி - பூசைசெய்கிற மலராகியும், பலவாகி - (அதற்குரிய) வேறுபல உபகரணங்களாகியும், பூசைதன்னில் - பூசைசெய்யுங்காலத்தில், நேசமொடும் - அன்புடனே, ஓதுகின்ற - சொல்லுகிற, மந்திரமாய் - மந்திரமாகியும், தெய்வமும் ஆம் - (அந்தமந்திரத்தை யேற்றுக்கொள்ளுகிற) தெய்வமுமாகிற, நிட்களத்தை - நிஷ்களப்பொருளை, பாசமுற்ற - உலகவாசனையாகிய கயிற்றில் கட்டுப்பட்ட, சமயநெறிகடந்த - சமயமார்க்கங்களைக்கடந்த, நிராமயகுரு - நிராமயனான பரமகுருவின், சொல்பதிந்து - உபதேசமொழியிற் படிந்து, ஆநந்த ஆசையோடு பணிவதல்லால் - பேரின்பவிருப்பத்தோடு வணங்குவதல்லாமல், வேறே - அதைவிட வேறாகிய, ஓர்பூசைநெறி - ஒருபூசை செய்யும்வழியை, அறியேன் - நான் அறிந்திலேன், நெஞ்சே - மனமே, எ-று.

(பொ - ரை.) பூசைசெய்பவனாகியும், பூசைசெய்கிறமலராகியும், (அதற்குரிய) வேறுபல உபகரணங்களாகியும், பூசைசெய்யுங்காலத்தில் அன்புடனே சொல்லுகிற மந்திரமாகியும், அந்தமந்திரத்தை யேற்றுக்கொள்ளுகிற தெய்வமுமாகிற நிஷ்களப்பொருளை, உலக வாசனையாகிய கயிற்றில் கட்டுப்பட்ட சமயமார்க்கங்களைக் கடந்த நிராமயனான பரமகுருவின் உப

தேசமொழியிற்படிந்து பேரின்பவிருப்பத்தோடு வணங்குவத ல்லாமல், அதைவிட வேறாகிய ஒருபூசை செய்யும்வழியை நான் அறிந்திலேன், மனமே.

(வி - ரை.) நேசம் - அன்பு (பக்தி) ஓதுதல்-சொல்லுதல், நிஷ்களம் - அருவப்பொருள், நிராமயன் - நோயற்றவன் (ஆமயம் - நோய்.)

விண்ணினுக்கு விண்ணாகிப் பரவெளியாம்
பரஞ்சுடரை விரும்பிப பூசை
பண்ணி நிற்கப் பரமகுரு நிலையலா
தில்லை யெனப் பணிந்து கூறும்
கண்ணின் மணியெனுங் குருவி னடையாளங்
காட்டி லவர் கழலை யானுந்
திண்ணமிது பணிவனென நெஞ்சுரைக்க
வறிவுமினித் தேர்ந்து கூறும். (88)

(ப - ரை.) விண்ணினுக்கு விண்ணாகி-ஆகாசத்துக்கு ஆகாசமாகி, பரவெளி ஆம் - பரமாகாசமாகியும் விளங்குகிற, பரஞ் சுடரை - பரஞ்சோதியை, விரும்பி - அன்பு பூண்டு, பூசைப ண்ணிநிற்க - பூசைசெய்து நிற்பதற்கு, பரமகுரு - பரமாசாரி யரது, நிலையலாது - உண்மை நிலையல்லாமல், இல்லையென - வேறுபாயமில்லையென்று அறிவுகூற, பணிந்து - வணங்கி, கூறும்-(மனம்) சொல்லாநின்றது, கண்ணின்மணியென்னும்- கண்மணியென்று சொல்லப்படுகிற, குருவின் - சற்குருவின், அடையாளம் காட்டில் - அடையாளம் இன்னதென்று என க்குத் தெரிவித்தால், அவர்கழலை - அவரது திருவடியை, யானும்-நானும், பணிவன்-வணங்குவேன், இது திண்ணம்- இது நிசசயம், என-என்று, நெஞ்சு உரைக்க-மனஞ்சொல்ல, இனி - அதற்குமேல், அறிவும் தேர்ந்துகூறும் - அறிவும் ஆரா ய்ந்து சொல்லாநின்றது, எ-று.

(பொ - ரை.) ஆகாசத்துக்கு ஆகாசமாகிப் பரமாகாசமாகியும் விளங்குகிற பரஞ்சோதியை அன்புபூண்டு பூசைசெய்து நிற்பதற்குப் பரமாசாரியரது உண்மை நிலையல்லாமல் வேறு பாயமில்லையென்று அறிவுகூற, வணங்கி மனம்சொல்லாநின்றது. கண்மணியென்று சொல்லப்படுகிற சற்குருவின் அடையாளமின்னதென்று எனக்குத் தெரிவித்தால் அவரது திருவடியை நானும் வணங்குவேன், இது நிச்சயம் என்று மனம் சொல்ல, அதற்குமேல் அறிவும் ஆராய்ந்து சொல்லாநின்றது.

(வி - ரை.) விண் - ஆகாயம், கண்ணின்மணி - கண்மணி (கட்பாவை) கழல் - திருவடி.

அத்துவிதப் பரமகுருதனை யறிவ
தரிதரிதே யவர் பாதத்திற்
பத்திபுரிசற் சனரை யடுத்தவரோ
டன்பாகப் பழகினாற் பின்
முத்திபெறக் குருகாண்பா யெனவுரைக்க
வவர்குறியை மொழியா யென்னச்
சித்தமதி லறிந்தமட்டுஞ் சற்சனர்தம்
பெருங் குணத்தைச் செப்பு மன்றே. (89)

(ப - ரை.) அத்துவிதப்பரமகுருதனை - அத்துவித நிலையை யுடைய பரமகுருவை, அறிவது - அறிந்துகொள்வது, அரிது அரிதே - அருமையினும் அருமையாகும், அவர்பாதத்தில் - அவர் திருவடியில், பத்திபுரி சற்சனரை - பத்திசெய்கிறசாது சனங்களை, அடுத்து - ஆசிரயித்து, அவரோடு-அவர்களுடன், அன்பாக பழகினால் - அன்புடனே பழகினால், பின் - அதன் பிறகு, முத்திபெற - மோக்ஷத்தையடையும் பொருட்டு, குரு காண்பாய் - சற்குருவைத் தரிசிப்பாய், என உரைக்க-என்று அறிவுசொல்ல, அவர்குறியை-அவருடைய அடையாளத்தை, மொழியாய் - சொல்லக்கடவாய், [redacted] - என்று மனங்கே

ட்க, சித்தமதில் அறிந்தமட்டும் - மனத்தாலறிந்தவரைக்கும், சற்சனர் தம்பெருங்குணத்தை - சற்சனர்களுடைய உத்தமகுணங்களை, செப்பும்-(அறிவு)சொல்லாநின்றது, எ-று.

(பொ - ரை.) அத்துவிதநிலையையுடைய பரமகுருவை அறிந்துகொள்வது அருமையினும் அருமையாகும், அவர்திருவடியில் பத்திசெய்கிற சாதுசனங்களை ஆசிரயித்து அவர்களுடன் அன்புடனே பழகினால் அதன்பிறகு மோக்ஷத்தையடையும் பொருட்டுச சற்குருவைத் தரிசிப்பாய் என்று அறிவுசொல்ல, அவருடைய அடையாளத்தைச சொல்லக்கடவாய் என்று மனங்கேட்க, மனத்தாலறிந்தவரைக்கும் சற்சனர்களுடைய உத்தமகுணங்களை அறிவுசொல்லாநின்றது.

(வி - ரை.) அத்துவிதம்-இரண்டற்றது,குறி-அடையாளம்.

பொய்யுலகந் தனிலழுந்தி மயக்கமுறா
  ராசைதனிற் பொருந்தாருள்ள
மையமுறா ருலகிலுயிர் தன்னுயிர்போ
  லருள்புரிவா ராண்மை சொல்லார்
வையமதி லிருவகைக்கும் வாடார்கண்
  மகிழார்கள் வருந்தார் நாளும்
துய்யபொலன் கமலமல ரெனவொரு சீர்ப்
  பட்டிருந் துலங்குவாரே. (90)

(ப - ரை.) பொய்யுலகந்தனில் அழுந்தி - பொய்யாகிய இவ்வுலகமாயையில் மூழ்கி, மயக்கம் உறார் - மயக்கமடையார்கள், ஆசைதனில் பொருந்தார் - ஆசையிற் சேரார்கள், உள்ளம் ஐயம் உறார் - மனத்தில் சந்தேகமடையார்கள், உலகில்-உலகத்திலுள்ள, உயிர் - உயிர்களை யெல்லாம், தன் உயிர் போல் - தன்னுயிர்போல எண்ணி, அருள் புரிவார் - அருள் செய்வார்கள், ஆண்மை சொல்லார் - ஆண்மை பேசார்கள், வையமதில் - உலகத்திலுள்ள, இருவகைக்கும் - (துக்க ..

ங்களாகிய) இரண்டுவகைக்கும், வாடார்கள் மகிழார்கள் - (முறையே) வாட்டமடையார்கள் களிப்படையார்கள், வருந்தார் - வேறுவகையால் வருத்தமடையார்கள், நாளும் - எந்நாளும், தூய்ய - பரிசுத்தமான, பொலன் கமலமலர் என - பொற்றாமரை மலர்போல, ஒரு சீர்ப்பட்டு-ஒரு சீராகப்பொருந்தி, நிதம் - நாள்தோறும், துலங்குவார் - விளங்குவார்கள், எ-று.

(பொ - ரை.) பொய்யாகிய இவ்வுலகமாயையில் மூழ்கிமயக்கமடையார்கள், ஆசையிற்சேரார்கள், மனத்தில் சந்தேகமடையார்கள், உலகத்திலுள்ள உயிர்களையெல்லாம் தன்னுயிர்போல எண்ணி அருள்செய்வார்கள், ஆண்மைபேசார்கள், உலகத்திலுள்ள துக்கசுகங்களாகிய இரண்டுவகைக்கும் முறையேவாட்டமடையார்கள் களிப்படையார்கள்,வேறுவகையால் வருத்தமடையார்கள், எந்நாளும் பரிசுத்தமான பொற்றாமரை மலர்போல ஒரு சீராகப்பொருந்தி நாள்தோறும் விளங்குவார்கள்.

(வி - ரை.) ஐயம் - சந்தேகம், ஆண்மை - ஆண்டன்மை (அகங்காரவார்த்தை, இருவகைக்கும் வாடார்கள் மகிழார்கள் என்றது துக்கதுசுகங்களில் சமமாயிருப்பார்கள் என்றபடி, ஒரு சீர்ப்படுதல் - ஒரு தன்மைப்படுதல்.

அண்டமெலாம் பொடியாக்க வருள்பெற்று
  மாணவமா யறையார் தங்கள்
பெண்டுபிள்ளை சுற்றமதைப் பேணுமற்
  பிரிந்து முடற் பிரிந்து நின்று
கண்டுமன மகிழ்ந்து குருவரு ணிலையை
  நாடியதிற் கலந்து நிற்கிற்
றொண்டர் புரிபெருந் தகைமை துடிதுடித்த
  நெஞ்சே யான்சொல் லொண்ணாதே. (91)

(ப - ரை.) அண்டம் எல்லாம் பொடியாக்க - உலகங்கள் எல்லாம் நீறாக்கத்தக்க, அருள்பெற்றும் - திருவருள் வல்ல

மையைப் பெற்றிருந்தும், ஆணவமாய் அறையார் - அகங்கரித்துப் பேசார்கள், தங்கள் - தங்களுடைய, பெண்டுபிள்ளை சுற்றமதை - பெண்டுபிள்ளை சுற்றங்களை, பேணுமல் -, விரும்பாமல், பிரிந்தும் - அவர்களைவிட்டு நீங்கியும், உடல்பிரிந்து நின்று கண்டு-சரீரத்துக்கு அந்நியமாகத் தாம்பிரிந்து நின்று பார்த்து, மனம் மகிழ்ந்து - மனம் மகிழ்ந்தும், குரு அருள் நிலையைநாடி-சற்குருவின் திருவருள் நிலையைவிரும்பி, அதில் கலந்து நிற்கும் - அதில் கூடிநிற்கின்ற, தொண்டர் - அடியார்கள், புரி - செய்கின்ற, பெருந்தகைமை-பெருங்குணத்தின் செய்கைகள், துடிதுடித்த நெஞ்சே - பதை பதைத்தமனமே, யான் சொல்லொணுது - யான்சொல்ல ஒண்ணுது, எ-று.

(பொ - ரை) உலகங்கள் எல்லாம் நீருக்கத்தக்கதிருவருள் வல்லமையைப் பெற்றிருந்தும் அகங்கரித்துப் பேசார்கள், தங்களுடைய பெண்டுபிள்ளை சுற்றஙகளை விரும்பாமல் அவர்களைவிட்டு நீங்கியும் சரீரத்துக்கு அந்நியமாகத் தாம் பிரிந்து நின்றுபார்த்து மனம்மகிழ்ந்து சற்குருவின் திருவருள் நிலையைவிரும்பி அதில் கூடிநிற்கின்ற அடியார்கள் செய்கின்ற பெருஙகுணத்தின் செய்கைகள் பதைபதைத்தமனமே, யான் சொல்ல ஒண்ணுது.

(வி - ரை.) பொடி - தூளி, ஆணவமாயறைதல் - அகங்காரமாகப் பேசுதல், பேணல் - விரும்பல், நாடுதல் - விரும்புதல், தகைமை - குணத்தின் தன்மை.

தேசிகனு ரங்கை கொடு போதித்த
பரமநிலை சேர்ந்தே மோன
வாசமல ரணைமீது வண்டெனவே
துயில் வோரில் வாழ்வுற்றுலும்
பாசமுறுர் வரும்பொருண்மேற் போன பொரு
ளுக் கிரங்கிப் பதையார்வந்து

நேசமுறும் பொருள் வெறுக்கார் நின்மலவா
னந்தமது நிறைந்த மிக்கோர். (92)

(ப - ரை.) நின்மல ஆனந்தமது நிறைந்த-நிர்மலமாகிய பேரின்பம் நிரம்பப்பெற்ற, மிக்கோர்-மேலோர்கள், தேசிகனுர்-பரமாசாரியர், அங்கைகொடு - அழகிய கையைக்கொண்டு, போதித்த - போதித்தருளின, பரமநிலைசேர்ந்து - மேலான உண்மை நிலையையடைந்து, மோனம் - மௌனநிலையாகிய, வாசமலர் அணைமீது - சுகந்த புஷ்பசயனத்துமீது, வண்டு என - வண்டுபோல, துயில்வார் - தூங்குவார்கள், இல்வாழ்வு உற்றாலும் - இல்வாழ்க்கையை யடைந்திருந்தாலும், வரும் பொருள்மேல் - இனிவரும் பொருளின்மீது, பாசம் உறார் - பற்றுவையார்கள், போனபொருளுக்கு இரங்கி - முன்னே போனபொருளுக்கு மனம்வருந்தி, பதையார் - பதைக்கமாட்டார்கள், வந்துநேசம் உறும்பொருள் - நிகழ்காலத்தில் தம்மைத்தேடி விரும்பிவந்த பொருள்களை, வெறுக்கார் - வெறுக்கமாட்டார்கள், எ-று.

(பொ - ரை.) நிர்மலமாகிய பேரின்பம் நிரம்பப்பெற்றமேலோர்கள் பரமாசாரியர் அழகியகையைக்கொண்டு போதித்தருளின மேலான உண்மை நிலையையடைந்து மௌன நிலையாகிய சுகந்த புஷ்பசயனத்துமீது வண்டுபோலத் தூங்குவார்கள், இல்வாழ்க்கையை யடைந்திருந்தாலும் இனிவரும் பொருளின்மீது பற்றுவையார்கள், முன்னேபோன பொருளுக்கு மனம்வருந்திப் பதைக்கமாட்டார்கள், நிகழ் காலத்தில் தம்மைத்தேடி விரும்பிவந்த பொருள்களை வெறுக்கமாட்டார்கள்.

(வி - ரை.) அங்கைகொடு போதித்தல் - கைகாட்டாலுணர்த்தல், "கல்லாலினீழறனிலொரு நால்வர்க்குங் கடவுணியுணர்த்துவதுங்கைகாட்டென்றால், சொல்லாலே சொலப்படுமோ சொல்லுந்தன்மை துரும்புபற்றிக் கடல்கடக்குந் துணிவேயன்றோ" என்றார் மேலோரும். 'பாசமுறார்வரும்பொருள்

மேல் போன பொருளுக்கிரங்கிப்பதையார், வந்து நேசமுறும் பொருள்வெறுக்கார், என்றது, முக்காலச்செயலினும் சமமாயிருப்பார்கள் என்றபடி "சென்றது கருதார்*நாளைசசேர்வது நினையார் கண்முன்,நின்றதுபுசிப்பார் வெய்யினிலவாய் விண்விழுது வீழ்ந்து, பொன்றின சவம்வாழ்ந்தாலும் புதுமையாயொன்றும்பாரார், நன்று தீதென்னார் தீர்ந்த நடுவான சீவன்முத்தர்" என்றார் பிறரும்.

சுவையினி தோடுண்டு டுத்துச் சுகந்த மணிந்
  தரிவையர்க டோளிற சேர்ந்து
குவிமுலையைத் தழுவி யணைந்திடு பொழுது
  மிறைசெயலைக் குறிப்பர் வல்லோ
ரவைநடுவே மந்திரத் தோரரவதனை
  யாட்டமன மஞ்சாரென்ன
நவைபுவியின் மயககறிந்து விலைமாத
  ரெனப்பொருளை நண்ணுவாரே. (93)

(ப - ரை.) சுவை - அறுசுவையுணவுகளை, இனிதாய் உண்டு - அன்பாகவுண்டு, உடுத்து - நல்ல ஆடையையுடுத்து, சுகந்தம் அணிந்து - நறுமணமுள்ள புஷ்பசந்தாதிகளையணிந்து, அரிவையர்கள் - மாதர்களுடைய தோளிற்கூடி, குவி - குவிந்த, முலையை - ஸ்தநங்களை, தழுவி அணைந்திடும் பொழுதும் - தழுவியணைகின்ற காலத்திலும், வல்லோர்-தவவலிமையுள்ள பெரியோர்கள், இறைசெயலை குறிப்பர்-இறைவன் செயலையே நாடுவார்கள், அவைநடுவே - சபைநடுவில், மந்திரத்தோர்-மந்திரபலமுடையோர்கள், அரவதனை ஆட்ட-பாம்பையாட்ட, மனம் அஞ்சார் என்ன - மனமஞ்சாதவர் போல, நவை - குற்றத்தையுடைய, புவியின்மயக்கு அறிந்து-பிரபஞ்சமயக்கத்தையறிந்து, விலைமாதர் [redacted] - விலைமாதர் போல, பொருளை நண்ணுவார் - மெய்ப்பொருளையடைவார்கள், எ-று.

(பொ - ரை.) அறுசுவையுணவுகளை அன்பாகவுண்டு, நல்ல ஆடையையுடுத்து, நறுமணமுள்ள புஷ்பசந்தநாதிகளை யணிந்து, மாதர்களுடைய தோளிற்கூடி, குவிந்த ஸ்தநங்களைத் தழுவியணைகின்ற காலத்திலும், தவவலிமையுள்ள பெரியோர்கள் இறைவன் செயலையே நாடுவார்கள், சபைநடுவில் மந்திரபலமுடையோர்கள் பாம்பையாட்ட மனமஞ்சாதவர்போலக் குற்றத்தையுடைய பிரபஞ்சமயக்கத்தையறிந்து விலைமாதர்போல மெய்ப்பொருளையடைவார்கள்.

(வி - ரை.) சுகந்தம் - நல்லமணம், (புஷ்பசந்தநாதிகளின் வாசனை) தழுவுதல் - ஆலிஙகநம்செய்தல், அவை - சபை, மந்திரத்தோர் - மந்திரவாதிகள், விலைமாதர் - வேசையர்.

தனதுடைய கொழுநனொடு கூடியணைந்
திடுபொழுதுந் தனதுகும்பங்
கனதனத்தை நீவியதோர் பிறபுருடன்
றனையணையக் கருதுவாள்போற்
புனைமணிமேகலை மடவார் போகமதிற்
றோடோலைப் புல்லச்செய்த
தெனதுடைய பரஞ்சுடரென் றிசைந்தகுரு
பதம்பெறுவோரிருப்பர் நெஞ்சே. (94)

(பசைரை.) தனதுடைய கொழுநனொடு - தன்கணவனோடு, கூடி அணைந்திடுபொழுதும் - கூடியணையுங் காலத்திலும், தனது - தன்னுடைய, கும்பம் - குடத்தையொத்த, கனதனத்தை - பருத்தஸ் தநங்களை, நீவிய-பரிசித்த, ஓர் பிறபுருடன் தனை - ஒரு பரபுருஷனை, அணையக்கருதுவாள்போல் - தழுவநினைப்பவளாகிய மாதுபோல, புனைமணிமேகலை - அலங்கரிக்கப்பட்ட மணிகளிழைத்த மேகலாபரணத்தையணிந்த, மடவார் - மாதர்களது, போகமதில்-யோககாலத்தில், தோல் தோலைப் புல்லசெய்தது - ஒரு தோல்வேறொரு தோலைப்

பொருந்தச்செய்தது, எனதுடைய பரஞ்சுடர் என்று - என்னுடைய பரஞ்சோதியேயென்று, இசைந்து.- பொருந்தி, குருபதம் பெறுவார் - குருபாதத்தை ஆசிரயித்த பெரியோர்கள், இருப்பர்-சலனமற்றிருப்பார்கள், நெஞ்சே-மனமே, எ-று.

(பொ - ரை.) தன் கணவனோடு கூடியணையுங்காலத்திலும் தன்னுடைய குடத்தை யொத்த பருத்தஸ்தநங்களைப் பரிசித்த ஒரு பரபுருஷனைத்தழுவ நினைப்பவளாகிய மாதுபோல, அலங்கரிக்கப்பட்ட மணிகளிழைத்த மேகலாபரணத்தையணிந்த மாதர்களது போககாலத்தில் ஒருதோல் வேறொரு தோலைப்பொருந்தச்செய்தது என்னுடைய பரஞ்சோதியேயென்று பொருந்திக்குருபாதத்தை ஆசிரயித்த பெரியோர்கள் சலனமற்றிருப்பார்கள், மனமே, எ-று.

(வி - ரை.) கொழுநன் - கணவன், கும்பம் - யானை மத்தகம் எனினும் பொருந்தும், நீவுதல் - பரிசித்தல், மேகலை-மாதரிடையணிகளிலொன்று, இது எழுகோவையுள்ள மணிவடம்.

பூசையெனும் வகைபுரியார் சாதிவரம்
 படங்கார்கள் பொருந்தார் நேமந்
தேசமொடு காலமிருபகையுறவென்
 றறியாமற் றிரிவாராசை
நாசமுறவகையறிவார் சாதிதனிற்
 பேதங்கணடார் நாளும்
பாசமிலாப்பாலர்பித்தர் பேயரெனத்
 திரிவார்கள் பாராய் நெஞ்சே. (95)

(ப - ரை.) பூசையெனும் வகைபுரியார் - பூசையென்னும் வகையிலொன்றுஞ் செய்யமாட்டார்கள், சாதிவரம்பு அடங்கார்கள் - சாதிக்கட்டுப்பாட்டில் அடங்கி நிற்கமாட்டார்கள், நேமம்பொருந்தார் - நித்தியாநுஷ்டானங்களையுஞ்செய்ய மன

ம்பொருந்தார்கள், தேசமொடுகாலம் - தேசகாலங்கள், [redacted] உறவு என்று அறியாமல் - பகைவர் உறவினர் என்று வேறு பிரித்தறியாமல், திரிவார் - திரிவார்கள், ஆசை நாசம் உற [redacted] அறிவார் - இச்சைகெடும்படியான வழியையறிவார்கள், சாதிதனில் பேதங்கள் நாடார் - சாதிகளிலுள்ள பேதங்களை ஆராயமாட்டார்கள், நாளும் - தினந்தோறும், பாசம் இலா - பாசமில்லாத, பாலர்பித்தர் பேயர் என - பாலர் பித்தர் பேயர் என்று கண்டோர் சொல்லும்படி, திரிவார்கள் - அலைவார்கள், நெஞ்சே - மனமே, பாராய் - நீ காணாய், எ-று.

(பொ - ரை.) பூசையென்னும் வகையிலொன்றுஞ் செய்ய மாட்டார்கள், சாதிக்கட்டுப்பாட்டில் அடங்கி நிற்கமாட்டார்கள், நித்தியாநுஷ்டானங்களையுஞ்செய்ய மனம் பொருந்தார்கள், தேசகாலஙகள் பகைவர் உறவினர் என்று வேறுபிரித்தறியாமல் திரிவார்கள், இசசை கெடும்படியான வழியையறிவார்கள், சாதிகளிலுள்ள பேதங்களை ஆராயமாட்டார்கள், தினந்தோறும் பாசமில்லாத பாலர் பித்தர் பேயர் என்று கண்டோர் சொல்லும்படி அலைவார்கள், மனமே நீ காணாய்.

(வி - ரை.) சாதிவரம்பு - சாதிக்கட்டுப்பாடு, நேமம் - நியமம், (இன்னசற்கிருத்தியங்களைச செய்வேனென்னும் நியதி.) நியதி-ஏற்பாடு 'பாலர் பித்தர் பேயரெனத்திரிவார்கள்,' என்றதுக்கு உதாரணமாக, "பாலருடனுன் மத்தர் பசாசர்குணம் வருமே" என்ற மேலோர் திருவாக்கைக் கொள்ளலாம்.

எந்தனுடைச் சொந்தமிதென்றி ரங்கார்கள்
யானெனதென்றி சையாரெண்ணார்
பந்தமற்று நின்மலமாய்த் துக்கசுக
மொருவழியாய்ப் பார்ப்பார் பொங்கி
வந்தொருவன் றகர்த்தாலுமிறை செயலைக்
குறிப்பதல்லால் வாய்பேசார்கள்

சிந்தையறவேதாந்த சித்தாந்த
சமமோனந் தெரிந்த மிக்கோர். (96)

(ப - ரை.) சிந்தை அற - மனமிறக்கும்படி, வேதாந்த சித்தாந்த சமமோனம் - வேதாந்த சித்தாந்த சமரசமாகிய மௌனநிலையை, தெரிந்த - அறிந்த, மிக்கோர் - மேலோர், இது எந்தனுடை சொந்தமென்று - இது என்னுடைய சொந்தப்பொருளென்று, இரங்கார்கள்-வருந்தமாட்டார்கள், நான் எனது என்று இசையார் எண்ணார் - நான் எனது என்று வாயினாற் சொல்லமாட்டார்கள் மனத்தினுமெண்ண மாட்டார்கள், பந்தமற்று - பாசபந்தங்கள் நீங்கப்பெற்று, நின்மலமாய் - நிர்மலமாகி, துக்க சுகம் - துன்ப இன்பங்களை, ஒருவழியாய் பார்ப்பார் - ஒரேவகையாக நோக்குவார்கள், பொங்கிவந்து - கோவித்துவந்து, ஒருவன் தகர்த்தாலும் - ஒருவன் அடித்தாலும், இறைசெயலை குறிப்பது அல்லால் - இறைவன் செயலையெண்ணுவதன்றி, வாய்பேசார்கள் - வாய்திறந்து பேசமாட்டார்கள், எ-று.

(பொ - ரை.) மனமிறக்கும்படி வேதாந்த சித்தாந்த சமரசமாகிய மௌனநிலையை அறிந்த மேலோர் இது என்னுடைய சொந்தப் பொருளென்று வருந்தமாட்டார்கள், நான் எனது என்று வாயினாற் சொல்லமாட்டார்கள், பாசபந்தஙகள் நீங்கப்பெற்று நிர்மலமாகித் துன்ப இன்பங்களை ஒரேவகையாக நோக்குவார்கள், கோவித்துவந்து ஒருவன் அடித்தாலும் இறைவன்செயலை யெண்ணுவதன்றி வாய்திறந்து பேசமாட்டார்கள்.

(வி - ரை.) இசைத்தல் - சொல்லுதல், பந்தம் - மாயைப் பிணிப்பு, பொஙகுதல் - கோவித்தல், தகர்த்தல் - அடித்தல், குறிப்பது - நினைப்பது, சிந்தையறுதலாவது - மனம்பொறி வாயிலாகச்சென்று விடயங்களிலழுந்தாமல் தன் வயத்ததாய் ஒடுங்குதல், இந்த மனவொடுக்கமே பிரமானந்தாநுபவமாகிய

தேனைப்பருகுதற்குக் காரணமாம், "உள்ளத் தழிவிலடக்குந் தேனை யன்புரெலாமுண்ண" என்றார் பிறரும்.

ஞாலமொடு புனல்கனல் கானண்ணரிய
வெளிபூதமைந்து நண்பாய்ச்
சீலமுடையோர் கயவரரசரெளி
யோர்வலியர் தீமைநன்மை
சாலதனித் தனிப்பிரித்துப் பேதகமாய்ச்
சாராமற்சமம தாம்போல்
மாலறவே யிறையாட்டுஞ் செயலெனவே
சமமேவிவாழ்வர் மிக்கோர். (97)

(ப - ரை.) மிக்கோர் - மேலோர்கள், ஞாலமொடு - பூமியோடு, புனல்-நீர், கனல்-நெருப்பு, கால்-காற்று, நண் அரிய- அணுகுதற்கரிதாகிய, வெளி-ஆகாயம், பூதம் ஐந்தும்- (ஆகிய) ஐந்து பூதஙகளேயும், நண்பாய் - தமக்கு நட்பாகக்கொண்டு, சீலம் உடையோர் - ஒழுக்கமுடையோர்களாகிய ஞானிகள், கயவர் அரசர்-மூடர் அரசர், எளியோர் வலியர்-எளியவர் வலியவர், தீமை நன்மை-தீது நன்று, சால-மிகவும், தனிதனி பிரித்து - வெவ்வேருகப்பிரித்து, பேதகமாய் சாராமல் - வேற்றுமையாய்க் கருதாமல், சமமதாம்போல் - சமமாவதுபோல, மால் அற - மயக்கமறும்படி, இறை ஆட்டும் செயல் எனவே - இறைவன் ஆட்டுகின்ற செயலென்றே, சமம்மேவிவாழ்வர் - சமபுத்தி பண்ணிவாழ்ந்திருப்பார்கள், எ-று.

(பொ - ரை.) மேலோர்கள் பூமியொடு நீர் நெருப்புக்காற்று அணுகுதற்கரிதாகிய ஆகாயம் (ஆகிய ஐந்து பூதஙகளேயும்) தமக்குநட்பாகக்கொண்டு ஒழுக்கமுடையோர்களாகிய ஞானிகள், மூடர் அரசர் எளியவர் வலியவர் தீதுநன்று மிகவும் வெவ்வேருகப்பிரித்து வேற்றுமையாய்க்கருதாமல் சமமாவது போல, மயக்கமறும்படி இறைவன் ஆட்டுகின்றசெயலென்றே சமபுத்திபண்ணி வாழ்ந்திருப்பார்கள்.

(வி - ரை.) ஞாலம் - இக்குமண்ணென்னும் பொருளது, புனல் - நீர், கனல் - நெருப்பு, கால் - காற்று, சீலம் - நல்லொழுக்கம், அதாவது ஞான நடை, கயவர் - கீழ்மக்கள் (மூடர்) சால - மிக, மால் - மயக்கம், சமம் - சமநிலை.

காசினியோ ரெதுநிச மென்றுரைத்தாலு
மதுநிசமே கருதிலென்று
பேசியடங்குவதல்லால் வேறொன்றால்
வாதுமொழி பேசார்போதும்
வாசனையுங் கலந்ததென்வு யிர்தோறு
மிறைகலந்த வளமைபார்த்து
நேசர்குரு பரந்தனகும் பேதமிலா
தொன்றாக நினைப்பரன்றோ. (98)

(ப - ரை) காசினியோர் - உலகத்தார், எது நிசம் என்று உரைத்தாலும் - எதை உண்மையென்று சொன்னாலும், அது கருதில் நிசமேயென்று - அது நினைக்குமிடத்தில் உண்மையேயாமென்று, பேசி அடங்குவதல்லால் - சொல்லி வாயடங்குவதேயன்றி, வேறொன்றால் - வேறொருவகையால், வாது மொழிபேசார் - தர்க்கவாதஞ் செய்யமாட்டார்கள், போதும் வாசனையும் கலந்தது என - மலரும் மணமும் அபேதமாய்க் கூடியிருப்பதுபோல, உயிர்தோறும் - எல்லா வுயிர்களிலும், இறைகலந்தவளமைபார்த்து - இறைவன் சேர்ந்து நிற்கும் தன்மையைநோக்கி, நேசர் - அன்பர்கள், குருபரம்தமக்கும் - குருபரங்களுக்கும், பேதம் இல்லாது - வேற்றுமையில்லாமல், ஒன்றாக நினைப்பர் - ஒன்றாக நினைப்பார்கள், எ-று.

(பொ - ரை.) உலகத்தார் எதை உண்மையென்று சொன்னாலும் அது நினைக்குமிடத்தில் உண்மையேயாமென்று சொல்லி வாயடங்குவதேயன்றி வேறொருவகையால் தர்க்கவாதஞ் செய்யமாட்டார்கள், மலரும் மணமும் அபேதமாய்க்கூடியிரு

ப்பதுபோல எல்லாவுயிர்களிலும் இறைவன் சேர்ந்து நிற்குந் தன்மையைநோக்கி, அன்பர்கள் குருபரங்களுக்கும் வேற்றுமையில்லாமல் ஒன்றாக நினைப்பார்கள்.

(வி - ரை.) போது - மலர், நேசர் - அன்பர், "நான்சுரான் ஞானியாமென்பது நன்றல, பிரமமே ஞானியாம் பேதமின்றென்றது" என மேலோர் கூறுதலால், இவரும், 'நேசர் குருபரர்தனக்கும் பேதமிலாதொன்றாக நினைப்பர், என்றார்.

இந்திரியச் சேட்டைகெட மனமடக்கிக்
குருநாதனி சைந்தமோன
மந்திரத்தி னிலேநாடிச் சகம்பாவைக்
கூத்தெனவே மதிப்பரென்னச்
சிந்தையற்ற நெஞ்சியம்பும் பாவைக்கூத்
தெனவுரைத்தாய் தெரியவிந்த
விந்தைதனை விவரமதாய் விளம்பாயென்
றிடவறிவு விளம்புமன்றே. (99)

(ப - ரை.) (பெரியோர்கள்) இந்திரியச் சேட்டைகெட - இந்திரியத்தொழிலற்றுப் போகும்படி, மனம் அடக்கி - மனத்தையடக்கி, குருநாதன் இசைத்த - சற்குருநாதன்சொன்ன, மோனமந்திரத்தின் நிலேநாடி - மௌனமந்திரத்தின் உண்மைநிலையைநோக்கி, சகம்-இந்தப்பிரபஞ்சமானது, பாவைகூத்து எனவே - பாவைக்கூத்தென்றே, மதிப்பர் - எண்ணுவார்கள், என்ன - என்று அறிவுகூற, சிந்தை அற்றநெஞ்சு இயம்பும் - ஆலோசனையில்லாத மனம்சொல்லும், (எப்படியென்றால்) பாவைக்கூத்து என உரைத்தாய் - பாவைக்கூத்தென்றுசொன்னாய், தெரிய - நான் தெரிந்துகொள்ளும்படி, இந்த விந்தைதனை-இந்த விந்தையாகிய செய்தியை, விவரமதாய் விளம்பாய் - விவரமாகச்சொல்லுவாயாக, என்றிட-என்றுகேட்க, அறிவு விளம்பும் - அறிவு சொல்லாநின்றது, எ-று.

(பொ - ரை.) (பெரியோர்கள்) இந்திரியத் தொழிலற்றுப் போகும்படி மனத்தையடக்கிச சற்குருநாதன்சொன்ன மௌன மந்திரத்தின் உண்மைநிலையை நோக்கி இந்தப்பிரபஞ்சமானது பாவைக்கூத்தென்றே எண்ணுவார்கள் என்று அறிவு கூற, ஆலோசனையில்லாத மனம்சொல்லும் (எப்படி யென்றால்) பாவைக் கூத்தென்று சொன்னாய், நான் தெரிந்துகொள்ளும்படி இந்த விந்தையாகிய செய்தியை விவரமாகச சொல்லுவாயாக என்றுகேட்க, அறிவுசொல்லாநின்றது.

(வி - ரை) சேட்டை - தொழில், இந்திரியசேட்டை - பஞ்சேந்திரியங்களும் தந்தம் விஷயங்களின் மேற்செல்லுதல், விஷயங்கள் - சப்தாதிகள், பாவைக்கூத்து - பொம்மலாட்டம், விந்தை - ஆசசரியம்.

ஆனந்த சின்மயமாய மர்ந்திருக்குங்
 கூத்தில்வல்லன கிலந்தன்னி
லூனுந்திப் புழுதுடிக்கு முடற்பாவைக்
 குகந்துவளிக் கயிறுபூட்டி
மோனந்த மெனுந்தீப மேற்றியகந்
 தனினிணைப்புத்திரையான்மூடி
வானந்தமாகிய நம்மிறையுவந்தே
 யாட்டிவைக்கும் வளமை நெஞ்சே. (100)

(ப - ரை.) ஆனந்தம்-பேரின்பத்தைத் தருதற்குரிய, சின்மயமாய்-ஞானரூபமாய், அமர்ந்திருக்கும்-எங்கும் வியாபித்திருக்கிற,கூத்தில்வல்லன்-கூத்தாட்டத்தில் வல்லவனாகிய இறைவன், அகிலம்தன்னில்-இவ்வுலகத்தில், ஊன் உந்தி-மாமிசத்தைப்பொருந்தி, புழுதுடிக்கும்-புழுக்கள் துடிக்கின்ற, உடல் பாவைக்கு - உடம்பாகிய பாவைக்கு, உகந்து - விரும்பி, வளி கயிறுபூட்டி - காற்றாகிய கயிற்றைக்கட்டி, மோனந்தம் எனும் தீபம் ஏற்றி-மௌனாநந்த மென்கிற விளக்கேற்றி, அகம்தனில்

நினைப்பு - மனத்திலுதிக்கிற எண்ணங்களாகிய, திரையால் மூடி - திரையால் மறைத்து, வான்-பரமாகாயத்தில், அந்தம் ஆகிய - அழகாக விளங்குகிற, நம் இறை - நம்மிறைவன், உவந்து ஆட்டிவைக்கும் - திருவுள்ளமுவந்து ஆட்டிவைக்கிற, வளமை - பெருமையாம், நெஞ்சே - மனமே, எ-று.

(பொ - ரை.) பேரின்பத்தைத் தருதற்குரிய ஞானரூபமாய் எங்கும் வியாபித்திருக்கிற கூத்தாட்டத்தில் வல்லவனாகிய இறைவன் இவ்வுலகத்தில் மாமிசத்தைப் பொருந்திப்புழுக்கள் துடிக்கின்ற உடம்பாகிய பாவைக்கு விரும்பிக், காற்றாகிய கயிற்றைக்கட்டி மௌனாநந்தமென்கிற விளக்கேற்றி மனத்திலுதிக்கிற எண்ணங்களாகிய திரையால் மறைத்து பரமாகாயத்தில் அழகாக விளங்குகிற நம்மிறைவன் திருவுள்ளமுவந்து ஆட்டிவைக்கிற பெருமையாம், மனமே.

(வி - ரை.) ஊன் - மாமிசம், உடற்பாவை - உடம்புகளாகிய பிரதிமைகள், வளி - காற்று (உயிர்,) திரை - மூடு சீலை, 'வானந்தமாகிய என்றமையால் பிருதுவிமுதலாக என்று பொருள்கொள்க, "வானந்தமான வடிவுடையாள்" என்றார் பிறரும்.

வஞ்சமறவுரைத்தாய் நம்மிறை யிருந்தே
யாட்டுமிடம் வழங்காயென்ற
நெஞ்சமதற் கறிவுரைக்குந் தாவரத்துஞ்
சங்கமத்து நிறைந்துபூத
மஞ்சினுக்கு மகமபுறமாயு யிர்க்குயிராய்ப்
பூரணமாயமர்ந்த தென்ன
மிஞ்சிகணக் கற்றசரம சரமன்றோ
வெனவறிவு விளம்புமன்றே. (101)

(ப - ரை.) வஞ்சம் அற உரைத்தாய் - வஞ்சனையில்லாமற் சொன்னாய், (ஆயினும்) நம் இறை இருந்து - நம்மிறைவனிரு

ந்து, ஆட்டும் இடம் - ஆட்டுமிடத்தை, வழங்காய் - சொல்லக் கடவாய், என்ற - என்றுகேட்ட, நெஞ்சமதற்கு - மனத்து க்கு, அறிவு உரைக்கும் - அறிவு சொல்லாநின்றது, (எப்படி யென்றால்) தாவரத்தும் - தாவரப்பொருள்களுள்ளும், சங்க மத்தும் - சங்கமப்பொருள்களுள்ளும், நிறைந்து - பூரணமாய் நிரம்பி, பூதம் அஞ்சினுக்கும் - பஞ்சபூதங்களுக்கும, அகம் புறம் ஆய - உள்ளும் புறமுமாகி, உயிர்க்கு உயிர் ஆய்-உயிர் களுக்குள்ளே உயிராகி, பூரணமாய் அமர்ந்தது, பரிபூரண மாய் அமர்ந்திருப்பது, என்ன - என்று அறிவுகூற, மிஞ்சி - அதிகரித்து, சராசரம் - சராசர ஜீவராசிகள், கணக்கற்ற அன்றோ-கணக்கில்லாதனவா யிருப்பனவன்றோ, (இத்தனை ஜீவராசிகளுக்குள்ளிருந்து எப்படியாட்டுவான்) என - என்று மனம்கேட்க, அறிவுவிளம்பும்-அறிவுசொல்லாநின்றது, எ-று.

(பொ - ரை.) வஞ்சனையில்லாமற் சொன்னாய் (ஆயினும்) நம்மிறைவனிருந்து ஆட்டுமிடத்தைச சொல்லக்கடவாய் என்று கேட்ட மனத்துக்கு அறிவுசொல்லாநின்றது (எப்படி யென்றால்) தாவரப்பொருள்களுள்ளும் சங்கமப்பொருள்களு ள்ளும் பூர்ணமாய் நிரம்பிப் பஞ்சபூதங்களுக்கும் உள்ளும் புறமுமாகி உயிர்களுக்குள்ளே உயிராகிப் பரிபூரணமாய் அம ர்ந்திருப்பது என்று அறிவுகூற, அதிகரித்துச சராசர ஜீவரா சிகள் கணக்கில்லாதனவா யிருப்பனவன்றோ (இத்தனை ஜீவ ராசிகளுக்குள்ளிருந்து எப்படியாட்டுவான்) என்று மனம் கேட்க அறிவு சொல்லாநின்றது.

(வி - ரை.) வழங்கல் இவ்விடத்தில் சொல்லல் என்னும் பொருளது.

பெருவெளிக் குளண்டமெலாங் கலந்ததுபோ
  லயபேத மானமெய்யா
முருவெழுத்துக் குயிராகக் கலந்துதனித்
  தகரமொன்றே யுறையுமாபோன்

மருவியுயிர்க் குயிராகிக் கலந்துதனித்
தொன்ருக வயங்குமென்னக்
குருவருளா லறிவுரைக்க நெஞ்சமது
வினவியசொற் கூறலுற்ரும். (102)

(ப - ரை.) பெருவெளிக்குள் - பெரிதாகிய ஆகாயத்தில், அண்டம் எல்லாம் - உலகங்களெல்லாம், கலந்ததுபோலும் - கலந்திருப்பதுபோலவும், பேதம் ஆன - வெவ்வேருகிய, மெய்யாம் - மெய்களென்கிற, உரு எழுத்துக்கு - உருக்கொண்ட எழுத்துக்களுக்குள்ளே, உயிர் ஆக - உயிர்போல, கலந்து - சேர்ந்து, தனித்து - தனிமையாய், அகரம் ஒன்றே உறைதல் போலும் - அகரமென்கிற ஒரெழுத்தேதங்கி அந்த மெய்யெழுத்துக்களை இயங்குவிப்பதுபோலவும், மருவி - பொருந்தி, உயிர்க்கு உயிர் ஆகி - உயிர்களுக்குள் உயிராகி, கலந்து - கூடி, தனித்து - தனிமையாய், ஒன்ருகவயங்கும் - ஒருபொருளாகவே விளங்கும், என்ன - என்று, குரு அருளால் - சற்குரு கருணையால், அறிவு உரைக்க - அறிவுகூற, நெஞ்சமது - மனமானது, வினவியசொல் - கேட்ட சொற்களை, கூறலுற்ரும் - சொல்லத்தொடங்கினேம், எ-று.

(பொ - ரை.) பெரிதாகிய ஆகாயத்தில் உலகங்களெல்லாம் கலந்திருப்பதுபோலவும் வெவ்வேருகிய மெய்களென்கிற உருக்கொண்ட எழுத்துக்களுக்குள்ளே உயிர்போலச் சேர்ந்து தனிமையாய் அகரமென்கிற ஒரெழுத்தேதங்கி அந்த மெய்யெழுத்துக்களை இயங்குவிப்பதுபோலவும் பொருந்தி உயிர்களுக்குள் உயிராகிக்கூடித் தனிமையாய் ஒரு பொருளாகவே விளங்கும் என்று சற்குருகருணையால் அறிவுகூற, மனமானது கேட்டசொற்களைச் சொல்லத்தொடங்கினேம்.

(வி - ரை.)

"அகரவுயி ரெழுத்தனைத்து மாகி வேறு
யமர்ந்ததென வகிலாண்ட மனைத்து மாகிப்
பகர்வனவெல் லாமாகி * யல்ல தாகிப்
பரமாகிச சொல்லரிய பான்மை யாகித்
துகளறுசங் கற்பவிகற் பங்க ளெல்லாந்
தோயாத வறிவாகிச சுத்த மாகி
நிகரில்பசு பதியான பொருளை நாடி
நெட்டுயிர்த்துப் பேரன்பா னினைதல் செய்வாம்."

ஸ்ரீதாயுமானசுவாமிகளும் கூறியுள்ளனர்.

பெருவெளி - பெருவிசும்பு, (சிதாகாசம்,) அண்டமெலாம் - மற்றை ஆகாசங்களெல்லாம், பேதம் - வேறுபாடு மருவுதல் - பொருந்துதல், வினவல் - கேட்டல்.

உடலுறையு முயிர்கடொறும் பரஞ்சுடரே
யுறைந்திருபப துண்மையாகிற்
றொடரறவே யொருவிதமாய் வாழாம
லலைந்தவகை சொல்லா யென்னக்
கடற்புவியி லாடுகின்ற பாவையெலா
மரசனெனக் காட்டிநிற்கிற்
றிடப்படுமோ வாகையினுற் பலவிதமா
யாட்டிவைக்குஞ் செய்கை நெஞ்சே. (103)

(ப - ரை.) உடல் உறையும் - உடலில்வாழ்கின்ற, உயிர்கள்தொறும் - ஜீவராசிகளிலெல்லாம், பரஞ்சுடரே - பரஞ்சோதியாகிய பொருளொன்றே, உறைந்திருப்பது - வாழ்ந்திருப்பது, உண்மை ஆயின் - மெய்யானால், தொடர் அற - பிறவித்தொடர்பறும்படி, ஒருவிதமாய் வாழாமல் - ஒரேவகை

* அல்லதாகி என்றும் பாடமுண்டு.

யாய் வாழ்ந்திருக்காமல், அலேந்தவகை - அலேந்தவிதத்தை, சொல்லாய் - சொல்லக்கடவை, என்ன - என்றுமனம்கேட்க, கடல்புவியில் - கடல்சூழ்ந்தவுலகத்தில், ஆடுகின்ற - ஆடாநின்ற, பாவையெல்லாம் - பாவைகளெல்லாம், அரசன் எனகாட்டிநிற்கின் - அரசனுகவேகாட்டி யாட்டிஞல், திடப்படுமோ - உறுதியாமோ, ஆகையினுல் - ஆதலால், (இறைவன்) பலவிதமாய் - பலவகையாய், ஆட்டிவைக்கும் செய்கை-ஆட்டிவைக்கிற செயலாகும், நெஞ்சே - மனமே, எ-று.

(பொ - ரை.) உடலில் வாழ்கின்ற ஜீவராசிகளிலெல்லாம் பரஞ்சோதியாகிய பொருளொன்றே வாழ்ந்திருப்பது மெய்யாஞல் பிறவித்தொடர் பறும்படி ஒரேவகையாய் வாழ்ந்திருக்காமல் அலேந்தவிதத்தைச் சொல்லக்கடவை என்று மனம் கேட்க, கடல்சூழ்ந்த வுலகத்தில் ஆடாநின்ற பாவைகளெல்லாம் அரசனுகவேகாட்டி யாட்டிஞல் உறுதியாமோ, ஆதலால் இறைவன் பலவகையாய் ஆட்டிவைக்கிற செயலாகும் மனமே.

(வி - ரை.) தொடர்பற - சம்பந்தமற, பாவையெலாம் என்றது உடல்களை, திடப்படல்-உறுதிப்படல், செய்கை-செயல்.

துக்க சுகமென்பவைக ளனுபவிக்க
வைத்தவிதஞ் சொல்லாயென்ன
மிக்கதெளிந் தறிவுரைக்குங் கற்பனையல்
லாதுசுக துக்கமேது
தக்கபுகழ் வேந்தனென வேடமுற்ருேன்
பொய்ச்சுகமுந் தளர்ந்து மெத்தத்
துக்கமுறுவேட முற்ருேன் பொய்த்தளர்வு
மாஞ்சகத்தின் ருேல்லேநெஞ்சே. (104)

(ப - ரை.) துக்கசுகம் அநுபவிக்க - துன்பவின்பங்களை அநுபவிக்கும்படி, வைத்த - உயிர்களை யமைத்துவைத்த,

விதம் - விதத்தை, சொல்லாய் - சொல்லக்கடவை, என்ன - என்று மனங்கேட்க, மிக்க தெளிந்த - மிகத்தெளிந்த, அறிவு உரைக்கும் - அறிவுசொல்லாநின்றது, (எப்படியென்றால்) கற்பனை அலாது - இவையாவும் கற்பனையேயன்றி, சுகதுக்கம் எது - சுகதுக்கங்கள் எது, தக்கபுகழ் - தகுதியான புகழை யுடைய, வேந்தன் என வேடமுற்றோன் - அரசன்போலவே டம்பூண்டவன், பொய்ச்சுகமும் - பொய்யாகிய சுகமும், தளர்ந்துமெத்த - மிகவுந்தளர்ந்து, துக்கம் உறுவேடம் உற்றோன் - துக்கமிகுந்தவன்போல வேடம்பூண்டவன், பொய்த்தளர்வும் - பொய்யாகிய தளர்வும், ஆம் - உண்டாம், சகத்தின்தொல்லை - இதுவே உலகத்தின் துன்பவின்பக்கூறுபாடு என்றறிவாய், நெஞ்சே - மனமே, எ-று.

(பொ - ரை.) துன்பவின்பங்களை அநுபவிக்கும்படி உயிர்களையமைத்துவைத்த விதத்தைச சொல்லக்கடவை என்று மனம்கேட்க, மிகத்தெளிந்த அறிவுசொல்லாநின்றது (எப்படியென்றால்) இவையாவும் கற்பனையே யன்றிசுகதுக்கங்கள் எது, தகுதியான புகழையுடைய அரசன்போல வேடம் பூண்டவன் பொய்யாகிய சுகமும் மிகவுந்தளர்ந்து துக்கமிகுந்தவன்போல வேடம்பூண்டவன் பொய்யாகிய தளர்வும் உண்டாம், இதுவே உலகத்தின் துன்பவின்பக்கூறுபாடு என்றறிவாய் மனமே.

(வி - ரை.) தெளிந்த அறிவெனற்பாலது தெளிந்தறிவெனநிலைமொழியீறு தொகுத்தவாயிற்று, கற்பனை - இல்லாததொன்றை உண்டாக்கிக் கூறுதல்.

கண்ணினுரு வாயதற்கு முள்ளொளியாய்க்
கலந்திருந்துங் கண்ணுற்காணு
மெண்ணரிய வுருவாகி யருவாகிப்
பலவாகி யேகமாகிப்

புண்ணிய பாவங்களுமாய்ப் புரிபவனுய்ச்
சுகதுக்கப் பொலிவாய் நித்த
மண்ணிலதை யடைபவனு யிறையிருந்து
விளங்கிய மெய்வளங்காணெஞ்சே. (105)

(ப - ரை.) கண்ணின் உருவாய் - கண்ணினுருவாகியும், அதற்கும் உள் ஒளியாய் - அந்தக்கண்ணுக்கும் உள்ளொளியாகியும், கலந்திருந்தும்-சேர்ந்திருந்தும், கண்ணால் காணும்-கண்ணினுல் பார்க்கப்படுகிற, எண் அரிய - கணக்கற்ற, உருவாகி - வடிவங்களாகி, அருவாகி - அருவங்களாகி, பலவாகி - பலபொருள்களாகி, ஏகமாகி - ஒரு பொருளாகி, புண்ணியபாவங்களும் ஆய் - புண்ணியபாவங்களாகியும், புரிபவன் ஆய் - அவற்றைசசெய்பவனுமாகி, சுகதுக்கப்பொலிவு ஆய் - இன்பதுன்ப விளக்கமாகியும், மண்ணில் அதை அடைபவனுய் - உலகில் அதை யடைவோனுகியும், நித்தம் - நாள்தோறும், இறை இருந்து விளங்கிய-இறைவன் இருந்து விளங்காநின்ற, மெய்வளம் - உண்மையாகிய விளையாட்டேயாம் காண் - இதை நீ யாராய்ந்துபார், நெஞ்சே - மனமே, எ-று.

(பொ - ரை.) கண்ணினுருவாகியும் அந்தக் கண்ணுக்கும் உள்ளொளியாகியும் சேர்ந்திருந்தும் கண்ணினுல் பார்க்கப்படுகிற கணக்கற்றவடிவஙகளாகி அருவங்களாகிப் பலபொருள்களாகி ஒரு பொருளாகிப் புண்ணிய பாவங்களாகியும் அவற்றைசசெய்பவனுமாகி இன்பதுன்ப விளக்கமாகியும் உலகில் அதையடைவோனுகியும் நாள்தோறும் இறைவன் இருந்து விளங்காநின்ற உண்மையாகிய விளையாட்டேயாம், இதை நீ யாராய்ந்துபார், மனமே.

(வி - ரை.) உள்ளொளி - ஆந்தரதேஜசு, புண்ணியபாவங்கள் - சத்கர்மதுஷ் கர்மபலங்களாகிய சுகதுக்கங்கள், அடையவன் - அநுபவிப்பவன்.

தினந்தினமிவ்வுயிரனைத் துஞ்செயுஞ்செயலெல்
   லாமிறையின் செயலென்றாயோர்
நினைவுறவே நினைத்திடவுஞ் செயலிலையோ
   வெனவறிவு நிகழ்த்துஞ் சோதித்
தனிப்பரமா மிறையாட்டுஞ் செயலன்றி
   யுடனடக்கத் தருமோமெத்த
வினித்தமொழி தனைநாவு மியம்பிடுமோ
   வெனினினைப்ப தெதுவா நெஞ்சே. (106)

(ப - ரை.) தினந்தினம் = நாள்தோறும், இவ்வுயிர் அனைத்தும் - இந்தவுயிர்களெல்லாம், செயும்செயல் எல்லாம் - செய்யுஞ்செயல்களெல்லாம், இறையின்செயல் என்றாய் - இறை [redacted] செயலென்றுசொன்னாய், ஓர் நினைவு நினைத்திடவும் - ஒரு நினைவையாயினும் நினைக்கவாயினும், செயல் இலையோ - உயிர்களுக்குச் சுதந்தரமானசெயல் இல்லையோ, [redacted] = என்றுமனம்கேட்க, அறிவு நிகழ்த்தும் - அறிவுசொல்லாநின்றது, சோதி - ஒளியுருவாகிய, தனி - ஒப்பற்ற, பரமாம் - மேலான, இறை ஆட்டும் - இறைவன் ஆட்டுகின்ற, செயல் அன்றி - செயலேயல்லாமல், உடல் நடக்கத்தருமோ - உடம்பு நடக்கக்கூடுமோ, மெத்த-மிகுதியாக, இனித்தமொழிதனை - இனிதாகியசொல்லை, நாவும் இயம்பிடுமோ - நாவும் பேசுமோ, எனின் - என்றால், நினைப்பது - உயிர்கள் நினைப்பது, எது ஆம் - யாதாகும், நெஞ்சே - மனமே, எ-று.

(பொ - ரை.) நாள்தோறும் இந்தவுயிர்களெல்லாம் செய்யுஞ் செயல் எல்லாம் இறைவனது செயலென்றுசொன்னாய், ஒரு நினைவையாயினும் நினைக்கவாயினும் உயிர்களுக்குச் சுதந்தரமானசெயல் இல்லையோ என்று மனங்கேட்க அறிவுசொல்லாநின்றது. ஒளியுருவாகிய ஒப்பற்ற மேலான இறைவன் ஆட்டுகின்ற செயலேயல்லாமல் உடம்பு நடக்கக்

கூடுமோ, மிகுதியாக இனிதாகியசொல்லை நாவும்பேசுமோ
என்றால் உயிர்கள் நினைப்பது யாதாகும் மனமே, எ-று.

(வி - ரை.) எல்லாவுயிர்களின்செயலும் இறைவன் செய
லேயன்றி வேறொருசெயலுமில்லை, அவனையன்றி உடம்பு
நடவாது, வாய்பேசாது, ஆதலால், மனமே நீ யமைந்திருப்
பாயாக என்பது கருத்து, "அவனன்றியோரணுவுமசையா
தெனும் பெரியவாப்தர்மொழியொன்று கண்டால், அறிவாவ
தேது சிலவறியாமை யேதிவை பறிந்தார்களறியார்கள் யார்,
மவுனமொடிருந்த தாரென்போலுடம்பெலாம் வாயாய்ப்பித
ற்றுமவரார், மனதெனவுமொருமாயை யெங்கேயிருந்துவரும்
வன்மையொடிரக்கமெங்கே, புவனம்படைப்பதென் கர்த்த
வியமெவ்விடம் பூதபேதங்களெவிடம், பொய் மெயிதமகித
மேல்வரு நன்மை தீமையொடு பொறைபொறுமையுமெவ்
விடம், எவர் சிறியரெவர் பெரியரெவருறவரெவர் [redacted]
ஞர்யாது முனையன்றியுண்டோ, இகபரமிரண்டினிலு முயி
ரினுக்குயிராகி யெங்கு நிறைகின்றபொருளே" என்றும்,
"எழுவகைப் பிறவிகளு ளெப்பிறவி யெய்துகினுமெய்துக
பிறப்பி லினிநா, னெய்தாமை யெய்துகினு மெய்திடுகவிரு
மையினு மின்பமெய் தினுமெய் துக. வழுவகைத்துன்பமே
வந்திடினும் வருகமிகு வாழ்வுவந் திடினும் வருக, வறுமைவரு
கினும்வருக மதிவருனும் வருகவவ மதிவரினும் வருக
வுயர்வோ. டிழிவகைத் துலகின்மற்றெதுவரினும் வருகவல
தெதுபோகி னும்போக நின், னிணை யடிகண்மறவாத மன
மொன்று மாத்திரமெனக்கடைதல் வேண்டுமரசே. கவிவகைப்
பவரோக நீக்குநல் வருளெனுங் கதிமருந் துதவு நிதியே,
தனகவம் பலாத கருணையங் கணபோத கமலகுஞ் சிதபா
தனே." என்றும் "வித்தாரம்பேசினுஞ்சோங்கேறினும் கம்ப
மீதிருந்து. தத்தாவென்றேதிப்ப வரிகொண்டாடினும் தம்
முன்றம்பி, ஒத்தாசைபேசினுமாவதுண்டோ இல்லையுன்னரு

ன்றன்த, கத்தாவின்சொற்படியல்லாது வேறில்லை கன்மங்களே" என்றும், மேலோர் கூறுதலுங்காண்க.

நினைப்பதுவு மறப்பதுவுஞ் சித்தமதை
 மயக்குவது நோய்ச்செய்து
தனித்திருக்கச் செய்வதுவுந் தொந்தமொடு
 நிர்த்தொந்த தர்க்கமெல்லாஞ்
சினத்துடனே வளர்ப்பதுவுந் திடமுறவே
 துடைப்பதுவுந் தேசதான
கனச்சுடரென் றா னினைக்க மறக்கசெய
 லினியேது காணாய் நெஞ்சே. (107)

(ப-ரை.) நினைப்பதுவும் - நினைத்தலும், மறப்பதுவும் - மறத்தலும், சித்தமதை மயக்குவதும் - மனத்தை மயங்கச்செய்வதும், நோய்செய்து - நோாகச்செய்து, தனித்திருக்கச் செய்வதுவும் - ஏகாந்தமாயிருக்கச்செய்வதும், தொந்தமொடு நிர்த்தொந்ததர்க்கமெல்லாம் - தொந்தத்துடனே நிர்த்தொந்ததர்க்கங்களெல்லாவற்றையும், சினத்துடனே வளர்ப்பதுவும் - கோபத்துடன் வளர்ப்பதும், திடமுறவே துடைப்பதுவும் - உறுதியாக அழிப்பதும், தேசது ஆன - ஒளியுருவாகிய, கனசசுடர் என்றால் - பெரிய பரம்பொருளென்றால், நினைக்கமறக்க - நினைக்கவும் மறக்கவும், இனிசெயல் ஏது - இனிவேறு செயலேது, காணாய் - நீயாராய்ந்து பாராய், நெஞ்சே - மனமே, எ-று.

(பொ - ரை.) நினைத்தலும் மறத்தலும் மனத்தை மயங்கச் செய்வதும் நோாகச்செய்து ஏகாந்தமா யிருக்கச்செய்வதும் தொந்தத்துடனே நிர்த்தொந்ததர்க்கங்களெல்லாவற்றையும் கோபத்துடன் வளர்ப்பதும் உறுதியாக அழிப்பதும் ஒளியுருவாகிய பெரிய பரம்பொருளென்றால் நினைக்கவும், மறக்கவும் இனிவேறுசெயலேது நீயாராய்ந்துபாராய் மனமே, எ-று.

. .(வி - ரை.) தொந்தம் - சம்பந்தம், நிர்த்தொந்தம் - சம்பந்தமின்மை, எல்லாம் ஒளியுருவாகிய இறைவன் செயலாயிருக்கும்போது நமக்கு நினைக்கத்தான் இடமுண்டோவென்பது கருத்து.

மனமேநற் சின்மயத்தி லாசைவரு
  வித்துகுரு வடிவாய்வந்து
கனவெளியிற் றங்கவொரு நிலைகாட்டி
  யந்நிலையிற் கருதொண்ணுத
தனிசசுடராய் வெளிகாட்டித் தனியுணர்ந்த
  வானந்தத்த வனுமாகி
வனமுலைமாதொடு முயங்குபவனுமிறை
  யாய்ப்புவியில் வயங்குமன்றே. (108)

(ப - ரை.) மனமே - நெஞ்சே, நல் - நல்ல, சின்மயத்தில் - சின்மயத்தினிடத்தில், ஆசைவருவித்து - விருப்பத்தையுண்டாக்கி, குருவடிவாய்வந்து - குரு ரூபமாய்வந்து, கனவெளியில்தங்க - பெருவெளியில் தங்கும்படி, ஒரு நிலைகாட்டி - உனக்கொரு உண்மை நிலையைக்காட்டி, அந்நிலையில் - அந்த நிலையிலே, கருதொண்ணுத - நினைக்கவொண்ணுத, தனிசசுடராய் - ஒப்பற்ற சோதியாய், வெளிகாட்டி - உனக்கு வெளிப்படக்காட்சிதந்து, தனி உணர்ந்த - வேறெரு சகாயமின்றி தானேயறிந்த, ஆனந்தத்தவனுமாகி - ஆனந்தத்தை யுடையவனுமாகி, வனமுலை-அழகிய ஸ்தநங்களையுடைய, மாதொடு-பெண்களோடு, முயங்குபவனும் - கூடிசசுகிப்பவனும், இறையாய் - இறைவனெருவனகவே, புவியில் வயங்கும் - உலகில் பிரகாசிப்பான், எ-று.

(பொ - ரை.) நெஞ்சே நல்ல சின்மயத்தினிடத்தில் விருப்பத்தை யுண்டாக்கிக் குருரூபமாய்வந்து பெருவெளியில் தங்கும்படி உனக்கொரு உண்மை நிலையைக்காட்டி அந்த நிலை

யிலே நினைக்கவொண்ணாத ஒப்பற்ற சோதியாய் உனக்கு வெளிப்படக் காட்சிதந்துவேறொரு சகாயமின்றித்தானேய நிர்த ஆனந்தத்தையுடையவனுமாகி அழகிய ஸ்தநங்களையுடைய பெண்களோடுகூடிச் சுகிப்பவனும் இறைவனொருவனாகவே உலகில் பிரகாசிப்பான், எ-று.

(வி - ரை.) மனமே, உனக்குச சின்மயத்தில் விருப்பமுண்டாகசசெய்தல் முதலிய எல்லாம் இறைவன்செயலேயென்றறிவாயாக வென்பது கருத்து.

ஆட்டிவைக்கு மவனாகி யாடுவனு
யாட்டமதை யன்பாய்நின்று
காட்டுபவனாய தனைக்காண்பவனாய்த்
துரியந்நிறை கடவுளாகி
வாட்டமிலாக் களிப்பாகி நினைவாகிச்
சொாந்தமென்ற வாஞ்சையாகிக்
கூட்டமொடு கூடாதாயிறை யிருக்க
நினைப்பேது கூறாய் நெஞ்சே. (109)

(ப - ரை.) ஆட்டிவைக்குமவனாகி - ஆட்டிவைப்பவனாகியும், ஆடுவனாய் - ஆடுவோனாகியும், ஆட்டமதை-ஆட்டத்தை, அன்பாய்நின்று காட்டுபவனாய் - அன்போடுநின்று காட்டுவோனாகியும், அதனை காண்பவனாய் - அதைக்காண்போனாகியும், துரியம் - துரியபதத்தில், நிறை-நிறைந்து விளங்குகிற, கடவுளாகி-கடவுளாகியும், வாட்டம் இல்லா-துன்பமில்லாத, களிப்பாகி - மகிழ்ச்சியாகியும், நினைவாகி - நினைப்பாகியும், சொாந்தம் என்ற - சொாந்தமென்று சொல்லப்படுகிற, வாஞ்சையாகி-விருப்பமாகியும், கூட்டமொடு கூடாதாய் - கூட்டத்தோடு கூடாததாகியும், இறை இருக்க - இறைவனிருக்கையில், நினைப்பு ஏது - நினைவுயாது, கூறாய் - சொல்லாய், நெஞ்சே - மனமே, எ-று.

(பொ - ரை.) ஆட்டிவைப்பவனுகியும் ஆடுவோனுகியும் ஆட்டத்தை அன்போடுநின்று காட்டுவோனுகியும் அதைக் காண்போனுயும் திரியபதத்தில் நிறைந்து விளங்குகிற கடவுளாகியும் துன்பமில்லாத மகிழ்ச்சியாகியும் நினைப்பாகியும் சொந்தமென்று சொல்லப்படுகிற விருப்பமாகியும் கூட்டத்தோடுகூடார்ததாகியும் இறைவனிருக்கையில் நினைவுயாது சொல்லாய், மனமே, எ-று.

(வி - ரை.) ஆட்டுவிப்போன் ஆடுவோன் முதலாக எல்லாம் இறைவனுயிருக்குடபோது அவனையல்லாமல் நாம் நினைக்க இடமேது என்பது கருத்தி.

இந்தமொழி யுணர்ந்தோர்களு லகிலுயிர்க்
குயிராகி யுறைந்தே யோங்கும்
பந்தமற்ற பரஞ்சுடரின் செயலாகி
யெங்கெங்கும் பார்க்குந்தோறு
மெந்தவித மெவ்விடமும பரஞ்சுடரி
னியல்பாக விருப்பதாலே
சிந்தையற்ருர் பேசவே ருெருவரிலா
தான்மோனஞ் சிறந்தார் நெஞ்சே. (110)

(ப - ரை.) இந்தமொழி உணர்ந்தோர்கள் - இந்தச்சொல்லின் உண்மையை அறிந்தவர்கள் (எல்லாம்,) உலகில் - உலகத்தில், உயிர்க்கு உயிர் ஆகி - உயிருக்குயிராகி, உறைந்து - அவற்றுக்குள்ளே தங்கி, ஓங்கும் - விளங்குகிற, பந்தம் அற்ற- பாசபந்தங்களொழிந்த, பரஞ்சுடரின் செயல் ஆகி - பரஞ்சோதியின் செயலேயாகியும், எங்கெங்கும் - எவ்விடத்தும், பார்க்குந்தோறும் - பார்க்கும் போதெல்லாம், எந்தவிதம் - எவ்வகையான, எவ்விடமும் - எந்த இடமும், பரஞ்சுடரின் இயல்பாக - பரஞ்சோதியினியல்பாகவே, இருப்பதாலே - இருப்பதனுல், சிந்தை அற்ருர் - மனமிறந்தவர்கள், பேச - பேசுதற்கு, வேருெருவர் இல்லாதால் - வேருெருவ

ரில்லாமையால், மோனம் சிறந்தார் - மௌன நிலையினால் மேன்மைபெற்றார்கள், நெஞ்சே - மனமே, எ-று.

(பொ - ரை.) இந்தச்சொல்லின் உண்மையை அறிந்தவர்கள் எல்லாம் உயிருக்குயிராகி அவற்றுக்குள்ளே தங்கி விளங்குகிற பாசபந்தங்களொழிந்த பரஞ்சோதியின் செயலேயாகியும் எவ்விடத்தும் பார்க்கும்போதெல்லாம் எவ்வகையான எந்த இடமும் பரஞ்சோதியினியல்பாகவே இருப்பதனால் மனமிறந்தவர்கள் பேசுதற்கு வேறொருவரில்லாமையால் மௌனநிலையினால் மேன்மைபெற்றார்கள், மனமே, எ-று.

(வி - ரை.) இந்த வுண்மைநிலையை யறிந்தோர்கள் பேச இடமில்லாமையால் மௌன நிலையில் நின்றார்களென்பது கருத்து.

உலகில்பரி பூரணமேதானாகி
யாட்டிவைத்தே யுருவாயாடி
யிலகிபுவிநிறைந்ததென நெஞ்சுரைக்கு
மென்செயலுக் கிசைந்ததெல்லாஞ்
சொலவரிய விறையியற்றுஞ் செயலென்று
மெனவறிவு சுழுத்திதன்னி
லலமிருத்த காரணமொடு பொறிபுலனோ
டுன்செயலை யறிந்திலாயோ. (111)

(ப - ரை.) (அப்பரம்பொருளானது) உலகில் - இவ்வுலக முழுதிலும், பரிபூரணமேதானாகி-பரிபூரணமாய் நிறைந்தும், ஆட்டிவைத்து - (உயிர்களெல்லாவற்றையும்) ஆட்டிவைத்து, உருவாய் ஆடி-தான் ஒருருவாயாடியும், இலகி - பிரகாசித்து, புவிநிறைந்தது என - உலகமெங்கும் நிறைந்திருக்கின்றதென்று அறிவுகூற, நெஞ்சு உரைக்கும் - மனம்சொல்லும், என் செயலுக்கு இசைந்தது எல்லாம் - என்செயலென்பதற்குப் பொருந்தின எல்லாவற்றையும், சொல அரிய - சொல்லுதற்

கரிதாகிய, இறை இயற்றும் - இறைவன்செய்கிற, செயல் என்றாய் - செயலென்றுசொன்னாய், என - என்று மனங்கேட்க, அறிவு - அறிவுகூறுகின்றது, சுழுத்திதன்னில் - சுழுத்தியவத்தையில், அலம்மிகுத்த - துன்பமிகுந்த, கரணமொடு- அந்தக் கரணங்களுடன், பொறிபுலனோடு - பொறிபுலன்களோடுகூடிய, உன்செயலை - உனதுசெயலை, அறிந்திலாயோ- அறிந்திலையோ, எ-று.

(பொ - ரை.) (அப்பரம்பொருளானது) இவ்வுலக முழுதிலும் பரிபூரணமாய் நிறைந்தும் (உயிர்களெல்லாவற்றையும்) ஆட்டிவைத்துத்தான் ஒருருவாயாடியும் பிரகாசித்து உலகமெங்கும் நிறைந்திருக்கின்றதென்று அறிவுகூற, மனம்சொல்லும், என்செயலென்பதற்குப் பொருந்தின எலலாவற்றையும் சொல்லுதற்கரிதாகிய இறைவன்செய்கிற செயலென்றுசொன்னாய் என்று மனங்கேட்க, அறிவுகூறுகின்றது, சுழுத்தியவத்தையில் துன்பமிகுந்த அந்தக்கரணங்களுடன் பொறிபுலன்களோடுகூடிய உனதுசெயலை அறிந்திலையோ, எ-று.

(வி - ரை.) பூரணம் - நிறைவு, இதின் முன்பரியென்பது சேர்ந்து மிகுந்தநிறைவு எனப்பொருள்பட்டது, பரி - பூரணம், என்னுமிரண்டும், வடசொற்கள், சுழுத்தி - மூன்றாமவஸ்த்தை, இதற்கிடம் இருதயம், இதில் ஆன்மபுருடன், பிராணவாயு, சித்தம், என்னு மிரண்டுடனே கூடியிருப்பன், "இது" "சுழுத்தியிதயந்தன்னிற் பிராணஞ்சித்தம் சொல்லரியபுருடனுடன் மூன்றதாகும்" என்ற பெரியோர் திருவாக்கினால் இனிது விளங்கும்,

யானென தென்செயலெனவே மயக்கமுற்ற
தாலண்ட புவனமெல்லாந்
தானேயாய்ச் சராசரந் தானுஞ்சிற்
செயன்மறந்து சலித்தாயிங்கு

நானேயென் றிடு மொழிக்கே யுரித்தாரா
　　குவராய்ந்து நவிலுகென்ன
வானோடைம் பூதமுமாஞ் சகம்யானன்
　　றெனநெஞ்சம் வழங்குமன்றே. (112)

(ப - ரை.) யான் - நான், எனது - என்னுடையது, என் செயல் - என்னுடையசெயல், எனமயக்கமுற்றதால் - என்றுமயக்கமடைந்ததனால், அண்டபுவனம் எல்லாம் - அண்டபுவனங்கள்யாவும், தானேயாய் - தானேயாகி, சரம் - சரப்பொருள்களும், அசரம் - அசரப்பொருள்களும், தான் ஆம் - தானேயாய் விளங்குகிற, சிற்செயல்மறந்து - ஞானவுருவினனாகிய இறைவன்செயலைமறந்து, சலித்தாய் - சலநமடைந்தாய், (என்று அறிவுகூற) (ஆனால்) இங்கு - இவ்விடத்தில், நான் என்றிடும்மொழிக்கு - நானென்கிறசொல்லுக்கு, உரித்து - உரிமையுடையவர், ஆர் ஆகுவர் - யார் ஆவர், ஆய்ந்து நவிலுக என்ன - ஆராய்ந்து சொல்லக்கடவையென்று மனம் கேட்க, வானோடு ஐம்பூதமும் ஆம் - ஆகாயத்தோடுசேர்ந்த ஐந்துபூதங்களாகிய, சகம் - இந்தப்பிரபஞ்சம், யான் அன்று என - நானல்லவென்று அறிவுகூற, நெஞ்சம்வழங்கும்-மனம் சொல்லாநின்றது, எ-று.

(பொ - ரை.) நான் என்னுடையது என்னுடையசெயல் என்று மயக்கமடைந்ததனால் அண்ட புவனங்கள்யாவும் தானேயாகிச் சரப்பொருள்களும் அசரப்பொருள்களும் தானேயாய் விளங்குகிற ஞானவுருவினனாகிய இறைவன் செயலை மறந்து, சலநமடைந்தாய் (என்று அறிவுகூற) (ஆனால்) இவ்விடத்தில் நான் என்கிற சொல்லுக்கு உரிமையுடையவர் யார் ஆவர், ஆராய்ந்து சொல்லக்கடவையென்று மனம்கேட்க, ஆகாயத்தோடுசேர்ந்த ஐந்துபூதங்களாலாகிய இந்தப்பிரபஞ்சம் நானல்லவென்று அறிவுகூற, மனம் சொல்லாநின்றது, எ-று.

(வி - ரை.) சலித்தல் - சலனமடைதல், நவிலுதல் - சொல்லுதல், சகம் - உலகம், சகம் என்னுஞ்சொல்லுக்கு, தோன்றியழியு மியல்புடைய தென்பதுபொருள்.

மாசறுவெள் ளென்புதசை தோல்குருதி
நிணமபொதிந்து மலசலாதி
நேசமுறுமுடற் பாவை நானல்ல
வாசிகயிறல்ல நேரே
யாசைதருமனம் புந்தியகங் காரா
ணவத்திரை நானல்லமேலாந்
தேசுபெறுஞ் சின்மோனச் செழுஞ்சுடரே
யானென்று சிறந்ததம்மா. (113)

(ப - ரை.) மாசு அறு - குற்றமற்ற, வெள் என்பு - வெண்மையாகிய எலும்பு, தசை-மாமிசம், தோல் - சர்மம், குருதி - உதிரம், நிணம் - கொழுப்பு (ஆகிய இவைகள்) பொதிந்து - நிறைந்து, மலசலாதி - மலமூர்த்திரமுதலியவற்றுக்கு, நேசம் உறும் - நட்பாயிருக்கிற, உடல்பாவை - உடம்பாகிய பாவை, நான் அல்ல - நானன்று, வாசிகயிறு அல்ல - சுவாசமாகிய கயிறும் நானன்று, நேரே - நேராக, ஆசைதரும் - ஆசையுண்டாக்குகிற, மனம் - மனமும், புந்தி - புத்தியும், அகங்கார ஆணவம் - அகங்காரம் ஆணவம் என்கிற, திரை - திரையும், நான் அல்ல - நானன்று, மேலாம் - மேன்மைபொருந்திய, தேசுபெறும் - ஒளியையுடைய, சித் - ஞானவுருவாகிய, மோனம் - மௌனநிலையாற் பெறப்படுகிற, செழுஞ்சுடரே - செழுமையாகிய சோதியே, யான் என்று - நானென்று, சிறந்தது - மனம்தெளிந்து சிறப்படைந்திருந்தது, எ-று.

(பொ - ரை.) குற்றமற்ற வெண்மையாகிய எலும்பு மாமிசம் சர்மம் உதிரம்கொழுப்பு (ஆகிய இவைகள்) நிறைந்து மல

மூத்திரமுதலியவற்றுக்கு நட்பாயிருக்கிற உடம்பாகிய பாவை நானன்று, சுவாசமாகிய கயிறும் நானன்று, நோக ஆசையை யுண்டாக்குகிறமனமும் பத்தியும் அகங்காரம் ஆணவம் என்கிறதிரையும் நானன்று, மேன்மைபொருந்திய ஒளியையுடைய ஞானவுருவாகிய மௌநநிலையாற் பெறப்படுகிற செழுமையாகிய சோதியே நானென்று மனம்தெளிந்து சிறப்படைந்திருந்தது, எ-று.

(வி - ரை.) இசசெய்யுட் கருத்துக்குதாரணமாக, "பாராதிபூதநீயல்லை, உன்னிப்பாரிந்திரியங்கரண நீயல்லை, ஆராயுணர்வு நீயென்றான், ஐயன் - அன்பாயுரைத்த சொல்லானந்தந்தோழீ" என்னுமேலோர் செய்யுளைகொள்ளலாம், வாசி-குதிரை, அது இங்கு சுவாசத்தையுணர்த்திற்று, "மூலைத்தெருவிலொருபாய்சசல், அந்த, முசசந்திவீதி யொருபாய்ச்சல், மேலைத்தெருவிலொருபாய்சசல், பரிவேடிக்கை பார்க்கலாம் ஞானப்பெண்ணே" என்ற மேலோர் திருவாக்கிலும் பரியென்னுங் குதிரைப்பெயர் சுவாசத்சை யுணர்த்துதல்காண்க.

வீரியமாய்ப் பகையுறவு விளைப்பதுவு
 முண்டுடுத்து வேட்கையாக
நாரியரை நயப்பதுவு நற்றவங்கள்
 புரிவதுவு நாமரூபப்
பேருலகா யுடலுயிராய்ப் பேதமெனக்
 காண்பதெல்லாம் பிரமானந்த
வாரியெனு மிறைசெய லென் றுணர்வதுவு
 மதுவாக வயங்கிற்றம்மா. (114)

(ப - ரை.) வீரியமாய் - வீரத்தன்மைகொண்டு, பகை உறவுவிளைப்பதும் - பகை உறவுகளையுண்டாக்குவதும், உண்டு உடுத்து - உண்டும் உடுத்தும், வேட்கையாக - விருப்பமாக,

[illegible] - மாதரை, நயப்பதுவும் - இச்சித்துப்புணர்வதும், நல்தவங்கள் புரிவதுவும் - நல்லதவங்களைச்செய்வதும், நாம ரூபம் - நாமரூபங்களையுடைய, பேருலகாய் - பெரியவுலக மாகியும், உடல் உயிர ஆய் - உடலுயிர்களாகியும், பேதம் என்றாண்பது-வேறுபாடாகக் காணபதும், (ஆகிய) எல்லாம் - எல்லாசசெயல்களும், பிரமாநந்தவாரியெனும் - பிரமாநந்த சமுத்திரமென்று சொல்லப்படுகிற, இறைசெயல் என்று உணர்வதுவும்-இறைவனது செயலென்றறிவதும், அதுவாக வுயங்கிற்று-அந்தப்பரம்பொருளாகவே பிரகாசிததது, எ-று

(பொ - ரை.) வீரதன்மைகொண்டு பகை உறவுகளையுண் டாக்குவதும், உண்டும் உடுததும் விருப்பமாக மாதரை இச் சித்துப் புணர்வதும், நல்லதவஙகளைசசெய்வதும், நாமரூபங் களையுடைய பெரியவுலகமாகியும் உடலுயிர்களாகியும் வேறு பாடாகக்காண்பதும் (ஆகிய) எல்லாசசெயல்களும, பிரமா நசமுத்திரமென்று சொல்லப்படுகிற இறைவனது செயலெ றறிவதும் அந்தப்பரம்பொருளாகவே பிரகாசித்தது, எ-று.

(வி - ரை.) பகையுறவு - சத்ரு மித்ருத்வங்கள், நயத்தல் - விரும்புதல், நாமரூபம் - பெயரும் உருவமும், அது - தத்ப தார்த்தம்.-பிறவித்துன்பத்தையொழிதலால் 'நற்றவங்கள்' என்றார்

